## நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| முதல் பதிப்பு | : | 1992 |
| இரண்டாம் பதிப்பு | : | 1998 |
| மூன்றாம் பதிப்பு | : | செப்டம்பர் 2000 |

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | திருவிளையாடற் புராணம் |
| ஆசிரியர் | : | ரா. சீனிவாசன் |
| பொருள் | : | இலக்கியம் |
| தாள் | : | 13.6 கிலோ மாப்லித்தோ |
| அளவு | : | டபுள் கிரௌன் |
| அச்சு | : | 10 புள்ளி |
| பக்கம் | : | 180 |
| பதிப்பகம் | : | அணியகம்<br>5, செல்லம்மாள் தெரு,<br>செனாய் நகர்,<br>சென்னை - 600 030.<br>தொலைபேசி : 647 9772 |
| விலை | : | ரூ.40.00 |
| ஒளிஅச்சு | : | லேசர் இம்ப்ரெஷன்<br>சென்னை - 600 030. |
| அச்சகம் | : | மைக்ரோ பிரிண்ட்ஸ் (பி) லிட்.,<br>சென்னை - 600 029. |



# இறை வணக்கம்

சத்தியாய்ச் சிவமாகித் தனிப்பர
முத்தியான முதலைத் துதிசெயச்
சுத்தியாகிய சொற்பொருள் நல்குவ
சித்தியானைதன் செய்யபொற் பாதமே

(சத்தியும் சிவமும் ஆகிய பரம்பொருளைத் தொழுது பரவத் தூய சொற்களையும் பொருளையும் நல்குவன சித்தி விநாயகர் தம் செம்மையான அழகிய திருவடிகளே)

கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழிஇய நட்பின் மயிலியற்
செறிஎயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே!

- **தருமிக்கு இறைவன் தந்த செய்யுள்**

# முன்னுரை

தமிழகத்தின் பெருமையே சோழர்களும், பாண்டியர்களும், பல்லவர்களும் எழுப்பிய திருக்கோயில்கள்தாம். தேவாரம் திருவாசகம் பாடித் தமிழையும் சைவத்தையும் வளர்த்தார்கள். கோயில்கள் எழுப்பிச் சிற்பக்கலையை வளர்த்தார்கள். இந்தக் கோயிலுக்குப் பெருமை தேடத் தல புராணங்கள் எழுந்தன. மதுரையில் இன்று உள்ள மீனாட்சி கோயில் தொன்றுதொட்டு நிலைத்து இருப்பது. அதில் பொற்றாமரைக் குளமும் உள்ளது. இங்குக் குடியிருக்கும் ஈசன் சோமசுந்தரர் எனப்படுவார்.

கோயில், தலம், தீர்த்தம் இம்மூன்றின் பெருமையையும் வரலாற்றையும் திருவிளையாடற் புராணம் கூறுகின்றது. மதுரைக்குக் கூடல், ஆலவாய் என்று மற்றும் இருபெயர்கள் உள்ளன. இறைவனின் முடியில் சூடிக் கொண்டிருக்கும் பிறைச்சந்திரனின்று எழுந்த மதுரத்துளிகளைத் தெளித்து அதனை இனிமையாக்கியதால் அது மதுரை எனப்படுகிறது. மேகங்கள் கூடி மழையைத் தடுத்தமையால் கூடல் என்று பெயர் பெற்றது. இறைவன் அனுப்பிய பாம்பு மதுரையைச் சுற்றி எல்லை காட்டியதால் ஆலவாய் என்று பெயர் வந்தது. இந்நகரம் மதுரைக் கண்டம், கூடற்கண்டம், ஆலவாய்க் கண்டம் என மூன்று பிரிவுகள் பெற்றுள்ளன.

கம்பர், திருத்தக்கதேவர், சேக்கிழார் முதலிய மாபெரும் கவிஞர்கள் விருத்தப்பாக்களில் தெய்வத்திருக் கதைகளை எழுதிப் பரப்பினர். வில்லிபுத்தூரார் பாரதம் எழுதினார், இவர்கள் வழியில் இத்தல புராணத்தைப்

பரஞ்சோதி முனிவர் தமிழில் கவிதை வடிவில் எழுதியுள்ளார். கவிதைகளில் புதையுண்டு கிடக்கும் செய்திகளை வெளிக் கொணரச் செய்த முயற்சியே இவ் உரை நடையாக்கம்.

பரஞ்சோதியார் எழுதிய நூலுக்கு மூலநூல் வடமொழியில் கிடைத்த புராணங்கள் என்று பரஞ்சோதியார் கூறுகிறார். எது மூலநூல் என்பது தெளிவாகக் கூற முடியாது. எந்தத் தனிப்பட்ட புலவனும் இதை ஒருவரே எழுதியிருக்க முடியாது. இவை நாட்டுப்பாடல் போலக் கதைகள் அமைந்துள்ளன. மதுரையைச் சுற்றி இக் கதைகள் பின்னப்பட்டு உள்ளன. இவற்றை நாடோடிக் கதைகள் என்றும் கூறலாம்.

திருவிளையாடற் புராணம் திரைப்படத்தில் ஒரு சில கதைகள் வந்து மக்களைக் கவர்ந்துள்ளன. இதில் மொத்தம் உள்ளவை அறுபத்துநான்கு கதைகள்; அவற்றை முழுவதும் இவ்உரை நடையில் தரப்பட்டுள்ளன.

இதில் உள்ள கதைகள் பல்வகையின; இந்திரன் வந்து இக்கோயிலைத் தோற்றுவித்தான். அவனைத் தொடர்ந்து அவன் ஏறியிருந்த ஐராவதம் என்ற வெள்ளையானை மண்ணில் பிறந்து கோயிற் பணி செய்தது. பின் பாண்டியன் காட்டுவழியில் கிடந்த சிவலிங்கத்தைக் கண்டு கோயில் எழுப்பினான் என்று கதை தொடர்கிறது.

பாண்டிய அரசர்களுக்குப் பக்கத் துணையாக இருந்து அவர்களுக்கு நேர்ந்த இடுக்கண்களை எல்லாம் சோம சுந்தரர் தீர்த்து வைக்கிறார். தவறு செய்கின்றவர்கள் மண்ணில் பிறந்து மதுரையில் பொற்றாமரைக் குளத்தில் முழுகிக் கோயிலை வழிபட்டு விமோசனம் பெறுகின்றனர்.

உமையே தடாதகைப் பிராட்டியராக மலையத்துவச பாண்டியன் செய்த வேள்வியில் பிறந்து ஆட்சிக்கு

உரிமை பெறுகிறாள். சோமசுந்தரரை மணந்து ஆட்சி அவரிடம் தரப்படுகிறது. இறைவனே ஆட்சி செய்த பெருமையைப் பாண்டி நாடு பெறுகிறது. பெண்ணரசி ஆட்சி செய்யும் பெருமையையும் பெறுகிறது. எவ்வகையிலும் பெண் ஆணுக்கு இளைத்தவர் அல்ல என்பது உணர்த்தப்படுகிறது.

'பழி அஞ்சின படலம்' என்ற கதை அருமையான கதை. எப்பொழுதோ மரத்தில் தொத்திக் கொண்டிருந்த அம்பு தைத்துப் பார்ப்பினி ஒருத்தி இறந்து விடுகிறாள். அங்கு எதிர்பாராதபடி வந்த வேடுவன் தான் கொன்றுவிட்டான் என்று தண்டிக்க முற்படுகின்றனர். இறைவன் பாண்டியனையும் பார்ப்பனனையும் ஊரில் செட்டித் தெருவில் நடக்கும் மணக்காட்சியைப் பார்க்க அனுப்புகிறார். கட்டி வைத்த பசு கட்டவிழ்த்துக் கொண்டு மணமகனை முட்டி அவனைப் பிணமகன் ஆக்குகிறது. இதற்கு எல்லாம் காரணம் கூறமுடியாது. சாவு எப்படி வரும் என்று கூற முடியாது. அதற்கு யாரையும் பழி கூறக் கூடாது என்ற கருத்தினை அறிவிக்கிறது.

இதைப் போலக் கருத்துள்ள கதைகள் பல உள்ளன. தமிழ் இசையின் பெருமையைக்காட்டப் பாணபத்திரனுக்கு உதவி செய்ய விறகு ஆளாக இறைவன் வருவதும் ஏமநாதனை வெல்வதும் அருமையான நிகழ்ச்சிகளாகும்.

இறைவன் விறகு வெட்டியாகவும், வளையல் விற்பவனாகவும், மீன் பிடிப்பவனாகவும் பிறந்து அற்புதங்கள் செய்வது அருமையான நிகழ்ச்சிகளாகும்

நக்கீரருக்கும் சிவனுக்கும் நடக்கும் சொற்போர் நக்கீரனின் அஞ்சாமையைக் காட்டுகிறது. நெற்றிக்கண் திறந்து காட்டினாலும் குற்றம் குற்றமே என்று பேசிய புலவன் அவன். நக்கீரர் தமிழ்ப் புலவர்க்குப் பெருமை சேர்க்கிறார்.

கூந்தலுக்கு மணம் இயற்கையா செயற்கையா என்ற விவாதம் எழுகிறது. கவிதையில் தலைவன் தலைவியின் நலம் பாராட்டுதல் என்னும் அகப் பொருள்துறைப் பாடல் அது. குறுந்தொகையில் வரும் பாடல் அது. வண்டைப் பார்த்துத் தலைவியின் கூந்தலில் மணம் சிறந்தது என்று பாடும் பாடல் அது. பொருட்குற்றம் என்று நக்கீரர் சாட அது வழு அமைதி என்று விளக்கம் தரப்படுகிறது.

சங்கம் தோன்றிய கதையும், சங்கப் புலவர் வீற்றிருந்து ஆய்வதும் மிகச் சிறப்பாகக் கூறப் படுகின்றன. எனவே மதுரைக்குப் பெருமை தமிழ் வளர்த்ததால் ஏற்பட்டது என்று விவரித்துக் கூறப்படுகிறது.

இறுதியில் திருவாதவூரர் ஆகிய மாணிக்கவாசகர் செய்த கோயில் திருப்பணியும், அதனால் பாண்டியன் அவரைக் கடுமையாகத் தண்டித்ததும், இறைவன் வைகையில் வெள்ளம் ஏற்படுத்திச் சேதம் ஏற்படுத்து வதும், வந்திக்குக் கூலியாளாகச் சென்று பிரம்படி பட்டதும் சுவைமிக்க நிகழ்ச்சிகளாக அமைகின்றன.

ஞானசம்பந்தர் மதுரைக்கு எழுந்தருளிச் சமணரோடு வாதிட்டு அவர்களை வென்ற செய்திகளும் கூறப்படு கின்றன. எனவே பாண்டிய அரசர்களின் பணி, தமிழ் வளர்ச்சி, சைவம், மதுரைக் கோயில் வளர்ச்சி இவற்றை வைத்து இக்கதைகள் எழுதப்பட்டுள்ளன. அவற்றிற்கு உரைநடை வடிவம் இதில் தரப்பட்டுள்ளது. கதைச் சிறப்பால் இந்நூல் வரவேற்புப் பெறும் என்ற நம்பிக்கை உள்ளது.

**ரா. சீனிவாசன்**

# திருவிளையாடற் புராணம்

## 1. இந்திரன் பழி தீர்த்த படலம்

சசியைப் பெற்று சாயுச்ய பதவி தாங்கிய இந்திரன் தன் அத்தாணி மண்டபத்தில் கொலு வீற்றிருந்தான். அரம்பை, ஊர்வசி, திலோத்தமை முதலிய ஆடல் மகளிர் நாட்டியம் ஆடினர்; இசைக்கலைஞர் பலர் பாடல் பாடினர்; தேவர்கள் ஆடற் கலையையும் பாடற் கலையையும் நாடகக் கலையையும் கண்டு மகிழ்ந்து கொண்டிருந்தனர். இந்திரனும் அவ் இசைக் கலையிலும் நாட்டியத்திலும் மூழ்கிக் கிடந்தான். அவன் ஆசிரியராகிய வியாழன் என்று கூறப்படும் பிரகஸ்பதி வந்ததையும் அவன் கவனிக்கவில்லை. தையலர் அழகில் மையல் கொண்டிருந்த இந்திரன் ஐயன் ஆகிய ஆசிரியன் வந்ததையும். பொருட்படுத்தவில்லை; ''வருக'' என்று கூறி வரவேற்க வில்லை; ''அமர்க'' என்று கூறித் தன் இருக்கையைவிட்டு எழுந்திருக்கவும் இல்லை; களிப்புக் கடலில் மூழ்கிக் கிடந்தவன் விழிப்புத் திடலில் இருந்து செயல்படவில்லை.

பார்த்தார் ஆசிரியர்; சினத்தில் வியர்த்தார். மதியாதார் வாசல் மிதித்தது மரியாதைக் குறைவு என்று எதுவும் பேசாமல் வந்த வழியே திரும்பிச் சென்று விட்டார். அவர் சென்றதும் அவன் திடுக்கிட்டான். ஆசிரியர் எங்கே என்று கேட்டான்.

''தெரியவில்லை'' என்று சொல்லிவிட்டார்கள்.

''தேடி அவரைக் கண்டு அழைத்து வாருங்கள்'' என்றான்.

''அவரை அவமானப்படுத்திவிட்டேன்'' என்று கூறி வருந்தினான்.

அதுமுதல் இந்திரனின் செல்வம் குறைந்து கொண்டே வந்தது; மதிப்பும் தாழ்ந்து கொண்டே வந்தது; பொலிவும் நலிந்து கொண்டே வந்தது; தேவர்களும் வளமான வாழ்வை இழந்து கொண்டே வந்தனர். போக பூமி சோக பூமி ஆகியது. காரணம் என்ன? ஆசிரியனை மதிக்காமல் நடந்து கொண்டதே என அறிந்தான். என் செய்வது? யாரிடம் சென்று முறையிடுவது? படைத்தவன் தான் துயர் துடைப்பான் என்று தன்னிலும் மேலான படைப்புக் கடவுளாகிய நான்முகனைச் சந்திக்கச் சத்தியலோகம் சென்றான். கலைமகள் வீற்றிருக்கும் நாவினைப் படைத்த பிரமன் இவனைக் கண்டு நலம் விசாரித்தான்.

''செல்வம் குன்றி சொர்க்க லோகம் பொலிவிழந்து வருகிறது'' என்றான் இந்திரன்.

பிரமன் கையில் வேதம் படித்துக் கொண்டிருந்தான்.

''நாணய மதிப்புக் குறைந்து விட்டதோ?'' என்றான். நா நயம் குறைந்துவிட்டது'' என்று பதில் சொன்னான்.

''பா நயத்தில் நீ பகர்வது என்ன? நடந்தது என்ன?''

''நாட்டிலே உழைப்புக் குறைந்து விட்டது; உற்பத்தி பெருக்காமல் அனைவரும் நாட்டியம் கூத்து இது போன்ற

கலைகளுக்கு ஆட்பட்டுவிட்டனர்; அளகைவேந்தன் குபேரனிடத்தில் இந்த அமராவதியையே அடகு வைக்க வேண்டியதாகிவிட்டது'' என்றான்.

''காரணம்?''

''இன்பத்தில் மூழ்கிக் கிடந்த நாட்களில் இணையற்ற ஆசிரியர் வந்த போதும் அவரை மதிக்கவில்லை; ஆசிரியர் இல்லாமல் வேள்விகள் நடத்த முடியவில்லை; வேள்வி இல்லை என்றால் வேத முழக்கமும் இல்லை; அறம் குன்றி விட்டது; அதனால் சோம்பலும் பெருகிவிட்டது. தேவர்கள் உற்சாகமின்றி உலவுகின்றனர்''

''இப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்கிறாய்?''

''வேள்விகள் நடத்தக் கல்வித் தேர்வு மிக்க ஆசிரியர் ஒருவரை நீங்கள் அனுப்பி வைத்து உதவ வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டான்.

ஆசிரியனை மதிக்காத இவனுக்குத் தக்க பாடம் கற்பித்துத் தர வேண்டும் என்று யோசனை செய்தான். அவன் செய்த தவற்றை உணர வேண்டும் என்பதற்காக அசுர குரு ஒருவனை அவன்பின் அனுப்பி வைத்தான்.

''வியாழன் வரும் வரை காத்திரு; சனியன் விலக ஞாயிற்று ஒளி தேவைப்படுகிறது. உன் வறுமை ஒழிய அதுவரை அசுர குருவை வைத்து யாகம் நடத்து'' என்று அறிவித்தான்.

வந்தவன் மூன்று சிரங்களை உடையவனாக இருந்தான். இந்த விபரீத பிறவி கண்டு வியந்தான்.

''இவன் பெயர்?''

''விசுவரூபன்'' என அறிந்தான்.

ஆசிரியனுக்குரிய அடக்கம் சால்பு இவனிடம் காணப் படவில்லை. என்ன செய்வது? அவனைக் கொண்டு ஒரு வேள்வி நடத்துவது என்று தீர்மானித்தான்.

''குருவே! வேள்வி ஒன்று நடத்தித் தருக'' என்று வேண்டினான். அதற்கு வேண்டிய பொருள்கள் எல்லாம் வந்து குவிந்தன. யாகக் குழியில் தீ மூட்டப்பட்டது; நெய்க்குடங்கள் வந்து மொய்த்தன. ஓமகுண்டத்தில் அவி சொரிந்து வேள்விச் சடங்குகளைச் செய்தான். ''இந்திரனுக்கு நன்மை உண்டாகுக'' என்று சொல்லி மந்திரம் சொல்ல வேண்டியவன் தந்திரமாக ''அசுரர்க்கு நலம் பெருகுக'' என்று சொல்லிக் கொண்டான். இந்திரன் இதை அறிந்தான்.

''சாதி புத்தி இவனை விட்டு அகலவில்லை; நீதி நெறி முறைகளை இவன் கை விட்டான்; என் பொருட் செலவில் நடத்தும் இவ்வேள்வியைத் தனக்குப் பயன் படுத்துகிறான்'' என்று சினந்து அவன் மூன்று தலை களையும் இலைகளைப் போலக் கொய்து களைந்தான். அம் மூன்று தலைகளும் உயரப் பறந்தன. அவை மூன்றும் காடையும் ஊர்க்குருவியும் சிச்சிலிப் பறவையும் எனப் பறந்து மறைந்தன.

ஆசிரியனைக் கொன்ற பாவம் இந்திரனைச் சூழ்ந்து கொண்டது; அது ஒரு பூதம் போல் உருவெடுத்து இவனை மருட்டியது; எங்குச் சென்றாலும் அவனைத் தொடர்ந்து விரட்டியது; சேற்றிலே கால் வைத்தவன் சறுக்கி விழுந்த கதையாயிற்று.

தேவர்கள் தம் தலைவனைக் காக்க வழியில்லாமல் தவித்தனர். அந்த பாவத்துக்குப் போக்கிடம் தேடினர். அப்பாவத்தை அவர்கள் தெய்வபலத்தால் திசை மாற்றித் திருப்பிவிட்டனர்.

அது பெண்ணின் பூப்பிலும், நீரின் நுரையிலும், மண்ணின் உவர்ப்பிலும், மரத்தின் பிசினிலும் பாய்ந்தது; அவனை விட்டு விலகியது. தீமையைத் தாங்கிய இந் நால்வரும் தேவரை அணுகி இதனால் தமக்கு என்ன நன்மை என்று கேட்டனர்.

பூப்படைந்த பாவையர் புதுப்பொலிவோடு விளங்கிக் கணவனின் சேர்க்கையைப் பெறுவர் என்று கூறப்பட்டது. நுரையை ஏற்ற தண்ணீர் இறைக்க இறைக்க ஊறும் என்றும், மண் தோண்டத் தோண்ட அக் குழிகள் புதிய மண் கொண்டு நிரப்பப்பெறும் என்றும், மரம் வெட்ட வெட்டத் தழைக்கும் என்றும் கூறப்பட்டன. பிறர் துன்பம் துடைப்பவர் தாம் இன்புற்று வாழ்வர் என்னும் நியதிக்கு இவர்கள் இலக்காயினர்.

பாவச் சுமை நீங்கிய தேவர்களின் தலைவன் மீண்டும் ஆட்சி ஏற்று மாட்சி பெற வாழ்ந்தான்; இழந்த செல்வம் மீண்டும் நிலை பெற்றது; தொடர்ந்த பாவமும் அவனை விட்டு நீங்கியது; எனினும் பழி மட்டும் விடவில்லை; செத்த அசுரனின் தந்தை துவட்டா என்னும் துஷ்டன் பழிக்குப் பழி வாங்க நினைத்தான். விஞ்ஞான உலகத்தைவிடப் புராண உலகம் ஆற்றல் வாய்ந்ததாக விளங்கியது மந்திர சக்தியால் எதையும் சாதிக்க முடிந்தது. விஞ்ஞானம் ஆக்கத்திற்கும் பயன்படுகிறது; அழிவிற்கும். அதே போலத்தான் அக்கால வேள்விகளும் யாகங்களும். வேள்வி என்பது வேண்டுவதைப் பெறுவதற்

காகச் செய்யப்படுவது. யாகம் என்பது உலக அறம் ஓங்க வேண்டும் என்பதற்காகச் செய்யப்படுவது. இந்த அசுரன் அழிவு வேள்வி ஒன்று செய்தான்; அதில் ஒரு பூதத்தை வர வழைத்தான்; விருத்திராசுரன் என்பது அப் பூதத்தின் பெயராகும்.

"ஐயா! எனக்கு இடும் கட்டளை யாது?" என்று கேட்டான்.

"நீ இந்திரனைச் சென்று அழிக்க வேண்டும்" என்று கட்டளை இட்டான்.

விருத்திராசுரன் இந்திரனைத் துரத்தித் துரத்தி அடித்தான்; இந்திரனின் குலிசப்படை மிகவும் பழைய தாகிவிட்டது; அதனை வச்சிரப்படை என்றும் கூறுவர். அதனால் அந்த அசுரனை இந்திரனால் வெல்ல முடிய வில்லை; உயிர் தப்பிச் செல்லவும் முடியவில்லை. புதிய படைக் கருவி கிடைத்தால்தான் தாக்குப் பிடிக்க முடியும் என்பதை உணர்ந்தான்.

ஆபத்துக்கு உதவும் படைப்புக் கடவுளிடம் மறுபடியும் சென்று முறையிட்டான். "இந்திரப் பதவி கொடுத்தீர். ஆனால் போதிய படைபலம் இல்லாமல் இருக்கிறேன்; பயங்கரவாதிகள் என்னை எளிதில் தாக்கி விடுகின்றனர்; புதிய படைக்கருவி தேவைப்படுகிறது" என்றான்.

"என்னுடைய தொழில் படைத்தல்தான்; காத்தல் கடவுள் வேறு இருக்கிறார். திருமாலின் துறை அது. அவரிடம் சென்று இருவரும் முறையிடுவோம் வா" என்று கூறி இந்திரனை அழைத்துச் சென்றான்.

பாற்கடலில் பள்ளி கொண்ட பரமனிடம் நூற்கடல் கண்ட பிரமனும் அமுதக் கடலில் திளைத்த இந்திரனும் சென்று தம் குறையைத் தெரிவித்தனர். அறிதுயிலில் அமர்ந்திருக்கும் அரிக்குப் பழைய நினைவுகள் வந்தன.

''தேவர்களும் அசுரர்களும் பகை மறந்து கடலில் அமுதம் கடைய ஒன்றுகூடித் திருமாலை அடைந்தனர். அப்பொழுது அவர்கள் படைகளை வைத்துவிட்டுக் கடைதல் தொழிலுக்கு வரவேண்டும் என்று சொல்லத் தவம் செய்து கொண்டிருந்த ததீசி முனிவரிடம் இருவரும் தம்தம் படைக்கருவிகளை ஒப்படைத்துவிட்டுப் பாற்கடல் கடைதலுக்கு வந்துவிட்டனர். அமிர்தம் பெற்ற மகிழ்ச்சியில் தாம் விட்டுவைத்த கருவிகளைக் கேட்டுப் பெற மறந்தனர்.

வைத்தவர் திரும்பி வருவார்கள் என்று காத்திருந்த முனிவர் அலுத்துவிட்டார். என்ன செய்வது என்று தெரியாமல் அவற்றைப் பத்திரமாகப் பாதுகாக்க வேண்டி இருந்தது. அவற்றை விழுங்கி விட்டார். அவை அத்துணையும் உருண்டு திரண்டு அவர் முதுகு தண்டமாக உருவெடுத்துள்ளது. யோக தண்டத்தை வைத்துக் கொண்டு தவம் செய்து கொண்டியிருந்த ததீசி முனிவரிடம் சென்று அதனைக் கேட்டுப் பெறலாம்; அவர் இல்லை என்ற சொல்ல அறியமாட்டார்'' என்று திருமால் அவர்களுக்கு அறிவித்தார்.

ஈத்துவக்கும் இன்பம் அறிந்த அச்சான்றோன் தேவர்களின் நல்வாழ்வுக்காகத் தன்னை அழித்துக்கொண்டு முதுகு தண்டினைத் தானமாக அளிக்க முன் வந்தான். யோக நிலையில் நின்று மூச்சை அடக்கிக்கொண்டு பிரம கபாலம் வெடிக்க அதன் வழியாகத் தன் உயிருக்கு

விடுதலை தந்தான். உயிர் நீத்த அம்முனிவனின் மெய்யுடல் கீழே சாய்ந்தது. அவன் முதுகின் தண்டினை முறித்து தேவ தச்சனிடம் தந்து வச்சிரப்படை ஒன்று செய்து கொண்டான். வயிரம் பாய்ந்த அப்புதிய வாட்படை பகைவர்களைத் தகைப்பதற்கு உகந்ததாக விளங்கியது.

வாலியால் தோற்று ஓடிய அவன் தம்பி சுக்கிரீவன் மறுபடியும் அவனைப் போர்க் களத்தில் சந்தித்தது போல இந்திரன் அசுரன் இருக்குமிடம் தேடிப் போருக்கு அழைத்தான். வேள்விப் படைப்பில் தோன்றிய அந்த அசுரன் இந்திரனின் புதிய தாக்குதலுக்கு முன் நிற்க முடியாமல் பெருமரம் முறிந்து விழுந்ததைப்போல அலமரல் உற்றுச் சரிந்து விழுந்து சாய்ந்தான்,

கதை முற்றுப்பெறவில்லை. தொடர் கதையாகியது. மறுபடியும் கொலைப்பாவம் வந்து இந்திரனை அலைத்தது. ஓடினான் ஓடினான் ஓட ஓட அது விரட்டத் தொடங்கியது. மருட்டி அவனை வாட்டியது. உயிர் தப்பினால் போதும் என்று ஓடி ஒளிந்துகொள்ள இடம் தேடினான். தண்ணீர்க் குளத்தில் தாமரைத் தண்டு ஒன்றில் நுண்மையான வடிவு கொண்டு புகுந்து ஒளிந்து கொண்டான். அவனுக்காக அங்கேயே கரையில் அந்தப் 'பாவம்' காவல் காத்துக் கிடந்தது. தேவர்கள் ஆட்சிக்குத் தலைவன் இல்லாமையால் அவர்கள் புதிய தலைவனைத் தேடினர்.

பாரதக் கதையில் வரும் சந்திர குலத்து அரசன் ஒருவன் நகுடன் என்பவன் நூறு வேள்விகள் செய்து இந்திரப் பதவிக்குத் தகுதியுடையவன் ஆக ஆக்கிக்

கொண்டான். இங்கே இந்திரப் பதவி இடம் காலியாக இருந்தது. தேவர்கள் சென்று அழைத்து வந்தனர். இந்திரப்பதவி என்றாலே சுந்தரியாகிய இந்திராணியை அடைவதில் ஆர்வம் காட்டினான். செய்தி அறிந்த இந்திராணி செய்வது அறியாது திகைத்தாள். தேவ குருவாகிய பிரகஸ்பதி ''கவலைப்படத் தேவையில்லை; அவனைப் பல்லக்கில் வரச்சொல், பிறகு பார்த்துக் கொள் ளலாம்'' என்று சொல்லி ஆறுதல் தந்தார்.

''இந்திரனாக இருந்தால் அவன் பல்லக்கில் வருவது வழக்கம். அவ்வாறு புதிய இந்திரனை வரச்சொல்'' என்று அழைப்பு விடுத்தாள். ஆசைஅனல் அளவு அதிகம் ஆகியது. அவன் அறிவு மங்கியது. பதவிக்கு வருபவர் அதனை ஒரு புனிதப் பணியாகக் கொள்ளாமல் ஒழுக்கக் கேட்டுக்குப் பயன்படுத்துவதில் அவன் விதி விலக்கல்ல. கற்பு பெண்ணின் தனி உரிமை: அதை அவள் பறி கொடுக்கும் சூழ்நிலைக்கு அவள் ஆளாயினாள். பாரதக்கதையில்வரும் பாஞ்சாலி துரியன் முன் செல்லும் நிலையை அவள் அடைந்தாள்.

துரியோதனாதியர் கொடுமைக்கு அஞ்சிக் கண்ண னிடம் முறையிட்ட பாஞ்சாலி திரௌபதி போல இவள் ஆசானிடம் முறையிட்டாள். அவர் துச்சாதனின் துகிலுரிப்பில் இருந்து திரௌபதியைச் காப்பாற்றிய கண்ணனைப் போல சமயத்துக்கு வந்து உதவினார்.

''வருக என்று சொல்லி அவனுக்கு அழைப்பு விடுக'' என்றார்.

வழக்கப்படி இந்திராணியிடம் செல்பவர் முனிவர் எழுவர் தாங்கும் பல்லக்கில் வருவது வழக்கம். அவ்வாறே அவனும் வந்தான்.

''கைக்கு எட்டியது'' என்று அவன் தருக்குக் கொண்டான்

முனிவர்கள் கற்றவர்கள்; சபிக்கும் ஆற்றல் பெற்ற வர்கள்; அவர்களிடம் இவன் ஆணை செல்லாது; அவர் களை மதிக்காமல் 'செல்க விரைவில்' என்றான். விரைவில் என்பதற்கு ''சர்ப்ப'' என்று கூறினான். சர்ப்ப என்ற சொல்லுக்குப் பாம்பு என்ற ஒரு பொருளும் உண்டு. 'சர்ப்ப' என்றதும் அவனைச் ''சர்ப்பமாகுக'' என்று எழுவருள் தலைவரான அகத்தியர் அவன் வேண்டுகோள் படி சாபமிட்டார். ஏணிப்படியில் அடி எடுத்து ஏறியவன் பாம்பின் வாயில் விழுந்து பரம பத நிலையில் இருந்து பாதாள உலகத்தை அடைந்தான். மண்ணுலகில் விழுந்து பாம்பாகப் புரண்டு இந்திரப் பதவியை ஒரு நொடியில் இழந்துவிட்டான். உயர் பதவியில் இருக்கிறவர் விழிப் போடு நடந்து கொள்ளாவிட்டால் எவ்வாறு பெரிய இழப்புக்கு உரியவர் ஆவார் என்பதற்கு அவன் செயல் படிப்பினையாக அமைந்தது.

நகுடனை இழந்தவர்கள் மறுபடியும் இந்திரன் வேண்டுமே என்று தேடினர்; புதிய தலைவனைக் கொண்டு வந்தால் புதிய சிக்கல்கள் உண்டாகின்றன. அதனால் பழைய தலைவனே தேவை என்பதை உணர்ந்த னர். அதனால் பிரகஸ்பதியைத் தேடி அவரிடம் முறை யிட்டுத் தம் தலைவன்செய்த தவற்றைமன்னித்து அவனைக் காக்கும்படி வேண்டினர்.

தாமரைத் தண்டில் ஒளிந்து கிடத்த அமரர் கோனை ஆசிரியர் அழைத்து எழுந்து வரச் செய்தார்; எனினும் அப்பாவம் அவனை விடுவதாக இல்லை; என் செய்வது ஆசிரியர் அதற்குரிய வழியைச் சொன்னார்.

தேவர்கள் பதவி அடைந்தவர்களாக இருக்கலாம். என்றாலும் புண்ணியம் ஈட்டுதற்கு மண்ணுலகமே தக்கதாகும் என்று கூறினார். வேட்டை ஆடுவது போலப் பூமியில் சென்று பல இடங்களும் குதிரை ஏறிச் சுற்றிவர பாரத பூமியில் புண்ணியத் தலங்கள் பல உண்டு; அவற்றுள் தக்க ஒன்றில் நீ காலடி எடுத்து வைத்தால் நீ செய்த பாவம் உன்னை விட்டு நீங்கும்; புடத்தில் இட்ட பொன் என ஒளி பெறுவாய்'' என்று கூறினான்

இந்திரனைத் தன் குருவும் தேவர்களும் சூழ்ந்து வரக் கைலாய மலை தொடங்கித் தெற்கு நோக்கிப் பல தலங்களையும் கண்டு வழிபட்டுச் சென்றான். கடம் பவனம் வந்து அடைத்ததும் தென்றல் காற்று பட்டதும் சுகம் ஒன்று கண்டான்; பாவச் சுமை தன்னைவிட்டு நீங்கியமையை ஆசிரியனுக்கு அறிவித்தான். ''இந்த மகிமைக்குக் காரணம் அத்தலத்தில் ஏதாவது அற்புதம் இருக்க வேண்டும்'' என்று அறித்தார். இதற்குத்தல விசேஷமே காரணமாக இருக்க வேண்டும் என்றார். மூர்த்தியும் தீர்த்தமும் ஆற்றல் வாய்ந்தவையாக இருக்க வேண்டும். சிவலிங்கமும், தீர்த்தக் குளமும் இருக்குமிடம் அறிந்து செயல்படுங்கள்'' என்று கூறினார்.

ஏவலரும் காவலரும் எடுபிடி ஆட்களும் நான்கு திசையும் சென்று துருவித் தேடினர். என்னே அவர்கள் கண்ட காட்சி! சிவலிங்கமும் பொற்றாமரைக் குளமும் இருக்கக் கண்டனர்.

கோயில் வழிபாட்டுக்குரிய சிவலிங்கங்கள் மானுடர் படைப்பன அல்ல; அவை தாமே தோன்றுவன என்ற கருத்து உள்ளது; யார் பிரதிட்டை செய்தது என்று கூற

முடியாது; எனினும் திச்சுற்ற நிலையில் மனித சஞ்சார மில்லாத அந்தக் காட்டு முட்புதர் நடுவில் அது கிடப்பது கண்டு வியப்பும் திகைப்பும் அடைந்தனர். இருளில் மாணிக்கத்தைக் கண்டது போல் பேருவகை அடைந்தனர். மாயை இடையே ஞான ஒளி கண்டது போல் மனநிறைவு பெற்றனர்.

தம் பாவம் போக்கிய பெருமான் வெய்யில் பட்டு எழில் மாழ்குவது கண்டு வேதனையுற்றான்; தான் பிடித்திருந்த குடையைக் கொண்டு நிழல் உண்டாக்கிக் காளத்தி நாதனைக் கண்ட கண்ணப்பர் போல் நீங்காத காதலோடு பெருவியப்போடு பூசனைசெய்யமுற்பட்டான். பக்கத்தில் இருந்த பொற்றாமரைக் குளத்தில் சென்று நீரில் முழுகி நிர்மலனாகிய இறைவனை வழிபடத் தாமரை மலர்களைப் பறித்தவந்து இட்டு அருச்சனை செய்தான்; குளத்து நீரைக்கொண்டு திருமஞ்சனம் செய்தான்; மலரிட்டு வழிபட்டான்.

முள்ளும் புதரும் நீக்கி அந்த நிலப்பரப்பினைத் தூய்மைப் படுத்தினான். வெயிலும் மழையும் தடுக்க வானத்தில் இருந்து விமானம் ஒன்று தருவித்தான். மயன் என்னும் தெய்வத் தச்சனைக் கொண்டு சிற்ப வேலைப்பாடுகள் அமைய அவ்விமானத்தை அமைத்தான். எட்டு யானைகள் நின்று தாங்குவது போலச் சிற்பங்கள் தூண்களாக நிறுத்தப்பட்டன. பொன்னாலான அவ்விமானம் திருச்சிற்றப்பலத்தில் சிதம்பரத்துக் கோயிலுக்குப் பொன் தகடு வேய்ந்தது போல இருந்தது, தேவர்கள் இந்திர உலகத்துக்குச் சென்று கற்பகத்தரு போன்ற உயர்ந்த தருக்கள் ஐந்தும் கொண்டு வந்தனர். பல்வகை மணிகளையும் சந்தனம், கங்கை நீர், திருப் பள்ளித்தாமம், பஞ்சகவ்வியம், தேன், பழம், திருவிளக்கு

திருவமுது முதலியவற்றையும் கொண்டுவந்து படைத்தனர்.

இந்திரன் பொற்றாமரைக் குளத்தில் நீராடித் திருநீறு அணிந்து உருத்திராட்சரம் தரித்து அன்புருவாகச் சிவலிங்கப் பெருமானை வேத ஆகமவிதிப்படி மாலையிட்டு வணங்கி எழுந்து கும்பிட்டுக் கூத்தாடி இறைவனைத் துதித்தான். 'போற்றி போற்றி' என்று பாடல்கள் பல பாடினான்.

வந்தவன் இந்திரன் என்பதால் சிவனும் விரைவில் அவனுக்குக் காட்சிதந்து வேண்டுவதுயாது என்று கேட்கக் ''கருணைக் கடலே! என் கொலைப் பழியை நீக்கிக் காத்து என்னைத் தூயவன் ஆக்கினாய்; பாவ விமோசனம் பெற்றேன்.

அன்பும் அருளும் உயர் பண்பும் பெறும் உள்ளம் உடையவன் ஆயினேன். ஆணவம் நீங்கி அடக்கம் என்பதை அறிந்தேன். அமரன் என்றும் அடக்கம் உடையவனாக இருத்தல் வேண்டும் என்ற பேருண்மையைக் கற்பித்தாய். ஆசானை அவமதித்த ஆணவம் அழிந்தது; அவசரப்பட்டுக் கொலைத் தொழிலைச் செய்த கொடுமைகள் என்னை விட்டு நீங்கின; என்றும் உன் திருவடித் தாமரை விழுந்து கிடந்து நித்திய பூசை செய்து நிலைத்து மன அமைதி பெற அருள் செய்ய வேண்டுகிறேன்'' என்றான்.

''மாந்தரும் தேவரும் என்னை வணங்குவது முதற்படி; அதனால் அவர்கள் அடக்கமும் மனத்தூய்மையும் பெறுவர் என்பது உண்மைதான். அவர்கள் அரசர்க்குரிய கடமைகளிலிருந்து வழுவுவதை யான் விரும்ப மாட்டேன். எத்தொழில் செய்தாலும் ஏது அவத்தை பட்டாலும்

முத்தர் மனம் இறைவனிடம் இருக்கவேண்டும். என்பது உண்மை தான். அதனால் அவர்கள் சோம்பலும் மறதியும் கொண்டு தத்தமக்கு விதித்த கடமைகளினின்று ஒதுங்குவதை யான் விரும்பமாட்டேன். உலகத்தில் அறநெறி தவறாது செயலாற்றுவதையே யான் விரும்புகிறேன். ஆண்டு முழுவதும் இங்கே இருந்து நீ பூசை செய்வது. புனலில் மூழ்குவது, புண்ணியம் தேடுவது, என்று இருக்கத் தேவை இல்லை. நீ இருக்கும் பதவி உயர் பதவி; தேவர் தலைவன்; நீ தலைமை தாங்கிநடத்த வேண்டிய கடமைகள் பல உள்ளன. அனுபவிக்கும் இன்பங்களும் உள்ளன, அவற்றை விட்டு விட்டுத் தவயோகிகளைப் போல இங்கே இருக்க வேண்டாம்; ஆண்டுக்கு ஒரு நாள் இங்கு வந்து போனால் போதும். ஒவ்வோர் ஆண்டும் வசந்த காலம் சித்திரைத் திங்களில், சித்திரை பூரண நிலவு நாளில் வந்து போ; அது போதும், இந்நாள் உனக்காக ஒதுக்கி வைக்கிறேன். பக்த கோடிகள் பலரும் வருவர்; அவர்களுக்கும் இடம் வேண்டும்; மற்றைய நாள்களை அவர்களுக்குரிய நாளாக ஒதுக்கி வைக்கிறேன். 'வருக' என்று சொல்லி விடை தந்து அனுப்பினார். பதவி என்பது கடமை செய்வதற்கே அன்றிஅதிக மோகம் கொண்டு உழல்வதற்கு அல்ல; பிரம பதம்விஷ்ணுபதம் இவற்றைஎல்லாம் கண்டு நீ ஆசை கொள்ளாதே, மனம் மாசு நீங்கி நிராசையோடு எம்மை வந்து அடையும் போது உனக்கு நிரந்தரமான நித்ய வாழ்க்கையைத் தருவோம்'' என்று கூறி வாழ்த்தி அனுப்பினார்.

மண்ணுலகம் பாவங்களைப் போக்கும் கொல்லன் உலைக்களமாக விளங்குகிறது. தெய்வ வழிபாடுகளும், தரும சிந்தனைகளும், அறக் கோட்பாடுகளும், மனிதர்களுக்கு உயர்வு அளிக்கின்றன. சொக்க நாதன் ஆகிய சோமசுந்தரக் கடவுளிடம் நீங்காத அன்பு கொண்டு

இந்திரன் மறுபடியும் அமராவதி சேர்ந்தான்; ஆசிரியரிடம் தன் தவற்றை மன்னிக்குப்படி வேண்டிஅவர் ஆசி பெற்றுத் திருந்தியவனாகத் தேவர் உலகத்தை ஆண்டு வந்தான். ஆண்டுக்கொருமுறை சித்திரைத் திங்களில் சித்திரை நிலவில் இங்கு வந்து பூஜித்துச் சென்றான். இந்திரன் வழிபட்ட ஆலயம் என்பதால் அத்தலம் பெருமைபெற்றது. மக்கள் திரள் திரளாக வருவதற்கு இந்நிகழ்ச்சியும் ஒரு காரணம் ஆகியது.

## 2. வெள்ளை யானை சாபம் தீர்த்த படலம்

ஆசிரியனை மதிக்காமல் அவதிப்பட்ட இந்திரன் மறுபடியும் ஒரு தவறு செய்து விட்டான். அசுரர்களை வென்று வெற்றி வாகை சூடி நகரில் சுற்றி உலாவந்த போது செல்வச் சிறப்பு மிக்க தேவர்கள் தந்த கையுறைகளை ஆர்வத்தோடு பெற்று அவர்களைக் கவுரவித்தான். அவனுக்காகத் துர்வாச முனிவர் தந்த தாமரை மலரை உதாசீனம் செய்தான்; அதனால் அவன் பெற்ற சாபங்கள் இரண்டு. ஒன்று அவன் தலை முடி பாண்டியன் ஒருவனால் சிதற வேண்டும் என்பது; மற்றொன்று அவன் ஊர்ந்து சென்ற வெள்ளையானை மண்ணுலகில் சென்று காட்டு யானையாக உழல வேண்டும் என்பது இரண்டாவதே இந்தக் கதை.

துர்வாச முனிவர் சிவலிங்கத்தை வழிபட்டுப் பூசனை செய்து அர்ச்சனை செய்து கொண்டிருந்த போது சிவன் சூடியிருந்த தாமரை மலர் ஒன்று விண்ணில் இருந்து விழுந்து அவர் கரத்தில் தங்கியது; இறைவன் தந்த மலரை நிறை மகிழ்வோடு எடுத்துக் கொண்டு வானவர் நகருக்குச் சென்றார். இந்திரனை வாழ்த்த வேண்டும்

என்னும் உயரிய நோக்கில் அம்மலரைத் தம் பரிசாக அவனிடம் தந்தார்; சிவன் சிரத்தில் இருந்த மலரை அவன் கரத்தில் தந்த போது அவன் அதனை மதித்து வாங்க வில்லை; ஒரு கையாலேயே வாங்கி அதனை யானையின் மத்தகத்தின் மீது வைத்தான்.

செருக்குற்ற அந்த யானையும் பெருங்குற்றம் ஒன்று செய்தது; அதனைத் தன் துதிக்கையால் எடுத்துத் தன் காலில் வைத்து மிதிக்கத் தொடங்கியது; கசங்கிய அந்த மலர் அம்முனிவன் கண்களில் நெருப்புப் பொறியைக் கக்க வைத்தது. உருத்திரம் கொண்டு எழுந்த முக்கண் கடவுள் போலக் காத்திரம் கொண்டு தன் நேத்திரத்தைத் திறந்து பார்த்தார். அதில் கோபக் கனல் பொறிப்பட்டது. சாபம் உடனே அவர் வாயில் வெளிப்பட்டது.

"தலைக்கனம் மிக்க உன் தலையைப் பாண்டியன் ஒருவன் நிலைகுலையச் செய்வான் என்றும், மதிக்காமல் பூவை மிதித்த உன் மதயானை காட்டு யானையாக நூறு ஆண்டுகள் பூமியில் உழல்வதாக என்றும்சாபம் இட்டார். தலைவனை இழந்து நிலை கெட விரும்பாத தேவர்கள் முனிவனிடம் முறையிட்டு அவன் உயிரைப் போக்க வேண்டாம் என்று இரந்து கேட்டுக் கொண்டனர். தலைக்கு வந்தது அவன் தலை மணி முடியோடு போகட்டும் என்று திருத்தி அருள் செய்தார். வெள்ளை யானை கருப்பு யானையாக மாறியது. வேளைக்கு உணவும் நாளைக்கு ஒரு பவனியும் வந்த யானை காட்டு நிலங்களிலும் மேட்டு நிலங்களிலும் மழை வெய்யில் என்று பாராது வெறி கொண்டு திரிந்து உழன்றது. மண்ணுலகில் நூறு ஆண்டுகள் தன் நினைவு அற்று உழன்று திரிந்தது. பின்னர் ஆலவாயில் கடம்ப வனம் சென்ற போது கடந்த கால நினைவு தோன்றியது

முன்பிறவியில் தான் பெற்றிருந்த பதவியையும் அதனை இழந்த அவதியையும் அறிந்தது. சிவனைச் சீர் பெற வணங்க விழைந்தது.

அங்கே பொற்றாமரைக் குளத்தில் மூழ்கி நறுந் தாமரை மலர்களைப் பறித்துக் கொண்டு இறைவன் திருத்தாளை வணங்கச் சிவலிங்கத்தைத் தேடியது. அங்கே சொக்கேசனின் திரு உருவத்தை நினைவுபடுத்தும் சிவலிங் கத்தைக் கண்டது. இந்திரன் வழிபட்டு விமானம்விட்டுச் சென்ற திருக்கோயில் அது என்பதை அறிந்தது. நீரும் மலரும் இட்டு நிமலனை வழிபட்டுப் போற்றியது. யானை செய்த வழிபாட்டுக்கு இறைவன் திருவுளம் இரங்கிக் காட்சி தந்து ''வேண்டுவது யாது?'' என்று வினவினார்.

இந்திர விமானத்தைத் தாங்கும் எட்டு யானை களோடு தானும் ஒரு சிற்பமாக அங்கு நிலைத்திருக்க வேண்டும் என வேண்டியது. அதன் கற்பனையைக் கேட்டுக் ''கற்பக நாட்டில் இருக்க வேண்டிய நீ கடம்ப வனத்தில் இருப்பது ஏற்பது அன்று; இந்திரன் ஏறிச் செல்ல ஊர்தியின்றி அங்கே வாடுவான்; அவனை நாடிச் செல்வதே நீ எனக்குச் செய்யும் உயர் பணியாகும். தெய்வச் சிந்தனை உயர்ந்தது தான்; எனினும் உன் கடமையை விட்டு இங்கே இருக்க நினைப்பது மடமை யாகும்'' என்று அறிவித்தார். ''உடனே புறப்படுக'' என்று பணித்தார்.

இந்திரன் ஏவல் ஆட்களும் யானையைத் தேடிவந்து அழைத்துச் செல்ல நின்றனர்; தன் ஆவல் அங்குச் சில பணிகள் செய்வது என்று சொல்லி அவர்களைத் திருப்பி

அனுப்பியது. விரைவில் அப்பணிகளைச் செய்து முடித்து விட்டு விண்ணுலகம் வருவதாகச் செய்தி சொல்லி அனுப்பியது.

சிவலிங்கத்தின் மேற்குத் திசையில் தீர்த்தக் குளம் ஒன்றைத் தன் கூரிய கொம்புகளால் வெட்டித் தன் துதிக் கையால் மண்ணை வாரிப்போட்டு அழகிய கரை அமைத்துக் கட்டி முடித்தது. அதன் அருகே சிவனுக்கு ஒரு ஆலயமும் விநாயகர்க்கு ஒரு கோயிலும் அமைத்து வைத்தது. அதன்பின்னர்க் கிழக்குப் பக்கம் ஐராவதம் என்ற பெயரில் ஒரு நகரை உண்டாக்கி அங்கும் தன் தலைவன் பெயரால் 'இந்திரேச்சுவரம்' என்ற சிவன் கோயில் ஒன்று நிறுவியது. அது வைகையின் தென் கரையில் உள்ளது. இவ்விரு பணிகளையும் செய்துமுடித்து இந்திரன் அழைப்பை ஏற்றுத் தன் சொந்த நகருக்குத் திரும்பிச் சென்றது.

வெள்ளையானை ஏற்படுத்திய இந்த மூன்று கோயில் களிலும் பக்தர்கள் சென்று வழிபட்டுப் பயன் அடைந் தனர். யானை வெட்டிய குளத்தில் நீராடி மேற்கே உள்ள சிவாலயத்துக்குச் சென்று வழிபட்டுப் பின் கிழக்கே சென்று யானை சென்ற வழியே வைகையை அடைந்து அதில் நீராடி இந்திரேச்சுரவரையும் வழிபட்டுப் பயன் அடைந்தனர்.

இந்திரன் கண்டெடுத்த விமானம் எழுப்பிய திருக் கோயில், அதனை அடுத்து யானை எடுத்த கோயில்கள் மக்களை ஈர்த்தன.

## 3. திருநகரம் கண்ட படலம்

கடம்ப வனத்தின் கிழக்கே மணலூர் என்னும் ஊர் உள்ளது. அதனைத் தலைநகராகக் கொண்டு பாண்டியன் குலசேகரன் என்பவன் அறம் வழுவாமல் மனு நெறிப்படி ஆட்சி நடத்தி வந்தான். அவன் வாழ்ந்த நகரில் வணிகன் ஒருவன் செல்வச் சிறப்போடு வாழ்ந்து வந்தான். அவன் செல்வச் சிறப்புக் கேற்ப அவன் பெயரும் தனஞ்சயன் என்று வழங்கப்பட்டது.

அவன் வாணிபம் செய்யும் பொருட்டுத் தன் சொந்த ஊரை விட்டு மேற்குப் பக்கம் பயணம் ஆனான், தன் வேலையை முடித்துவிட்டுத் திரும்பும்வழியில் இருட்டியது. கடம்ப வனத்தில் அகப்பட்டுக் கொண்டான், மனித சஞ்சாரமற்ற அக் காட்டில் தன்னந்தனியாக இருக்க வேண்டி இருந்தது. தெய்வம்தான் துணை என்று அங்கே அங்குமிங்கும் உழன்றான். எதிர்பாராதபடி இந்திரன் அமைத்த விமானத்தின் கீழ்ச் சிவலிங்கம் ஒன்று தென் பட்டது. ஒளியோடு விளங்கிய அத் தெய்வத் தலம் அவனுக்கு ஆறுதல் அளித்தது. அதனை வழிபடும் முயற்சியில் இரவினைக் கழிக்க முற்பட்டான்.

நள்ளிரவில் கள்வர்கள் வரும் நேரத்தில் புதியவர்கள் யாரோ அங்கு வந்து கூடுவதைப் பார்த்தான்; அவர்கள் மானுடர்கள் அல்லர்; தேவர்கள் என்பதை அறிந்தான்; அவர்கள் பூஜைக்கு வேண்டிய மலர்களோடும் மணம் நிறைந்த பொருள்களோடும் வந்து நான்கு வேளையும் பூஜை செய்வதைப் பார்த்தான். தானும் அவர்களுக்கு மலர்கள் கொண்டு வந்து உதவினான்.

பூஜைக்கு வேண்டிய பூக்களும், பனி நீரும்,சந்தனமும், மற்றும் வாசனைப் பொருள்களும் தன் கையால் அவர்களுக்குக் கொண்டு வந்தான்; நான்கு யாம பூசைகளிலும் அவனும் கலந்து கொண்டான். அவனும் பொற்றாமரைக் குளத்தில் முழுகி ஆகம விதிப்படி இறைவன் தாளை வணங்கி மன நிறைவு பெற்றான்.

பொழுது விடிந்தது; தூக்கம் நீங்கிக் கோயிலைப் பார்த்தான்; தேவர்களில் ஒருவரும் அங்கு இல்லை; தெய்வம் மட்டும் அங்குச் சிவலிங்க வடிவில் காட்சி அளித்தது. மனித சஞ்சாரம் அற்ற அக்கோயிலுக்கு தேவர்கள் வந்து வழிபாடு செய்வதும் போவதும் அவனுக்கு வியப்பைத் தந்தன. ஊருக்குத் திரும்பியதும் முதற் செய்தியாக நாட்டு மன்னனுக்கு உரைப்பது என்று கொண்டான்.

அரசனை அன்று மாலையே சந்தித்துத் தான் கண்ட புதுமையைச் செப்பினான். இதனைக் கேட்ட பாண்டியன் அப்புதுமை பற்றிய நினைவோடு உறங்கச் சென்றான். அவன் கனவில் சித்தர் வடிவில் சிவன் வந்து காட்சி அளித்து அவனுக்கு அங்குக் கோயில்எழுப்ப வழி கூறினார். கோயிலும், மண்டபங்களும் அமைத்து அழகிய நகர் ஒன்று அக்கடம்பவனத்தில் உண்டாக்க வேண்டும் என்று கூறிச் சென்றார்.

மறு நாள் பொழுது விடிந்தது, அமைச்சர்களோடும் கட்டிடச் சிற்பிகளோடும் தனஞ்சயன் வழிகாட்டப் பாண்டியன் அவ்வனத்துக்குச் சென்றான்; திக்குத் தெரியாத அந்தக் காட்டில் கலங்கரை விளக்குப் போல் ஒளிவிட்டுக் கொண்டிருந்த இந்திர விமானத்தைக் கண்டான். தெய்வ நினைவால் அவன்சிந்தை குளிர்ந்தான். அவன் எதிர்பார்க்கவில்லை; கனவில் கண்ட சித்தரே

நேரே அவன் திருமுன்பு வந்தார். அவனிடம் எங்கெங்கே எவ்வெவ்வாறு கட்டிடங்கள் எழுப்ப வேண்டும் என்பதையும், கோயில் அமைப்பையும், உட்பிரகாரம், வெளிச் சுற்று இவற்றின் அமைப்புகளையும், மதில்கள், கோபுரங்கள் அவற்றைச் சுற்றி மாளிகைகள், கடைகள், விழா வீதிகள் எவ்வாறு அமைக்க வேண்டும் என்பதைப் பற்றியும் விளக்கினார். பின்பு அவர் அங்கிருந்து மறைந்து விட்டார். வந்தவர் சிவபெருமானே என்பதை அறிந்த பாண்டியன் அளவு கடந்த மகிழ்ச்சியும், ஆனந்தமும் கொண்டான்.

இறைவன் பணித்தபடியே அந்நகரை நிர்மாணித்தான். வேதங்கள் பயிலும் பதும மண்டபமும், அர்த்த மண்டபமும், இசை பயிலும் நாத மண்டபமும், பறை பயிலும் நிருத்த மண்டபமும், விழாக்கோள் மணி மண்டபமும், வேள்விச் சாலைகளும், மடைப் பள்ளிகளும் அமையத் திருக்கோயிலைக் கட்டுவித்தான்.

அதனை அடுத்து வலப்பக்கம் மீனாட்சி அம்மைக்குத் திருக்கோயிலை எழுப்பி அதனையும் அவ்வாறே கட்டி முடித்தான். இவ்விரண்டையும் சுற்றி மேகம் தவழும் வான். மதில்களையும், விண்ணை அளாவும் கோபுரங்களையும் எழுப்புவித்தான். கோயிலைச் சுற்றிக் கோபுரங்களையும், மாட மாளிகைகளையும் கட்டி வைத்தான். நாற்புறமும் அங்காடிகள் அமைக்க அழகிய தெருக்களை உண்டாக்கி வைத்தான். அவற்றையும் கடந்து அகன்ற தெருக்களையும் வீடுகளையும் கட்டித் தந்தான். திட்டமிட்ட நகராக அதனை நிர்மாணித்தான். சாந்தி செய்ய விழா எடுத்தான்.

இறைவனே அந்நகருக்கு இனிமையும் நன்மையும் அழகும் உண்டாக்கத் தன் சடை முடியில் இருந்து எழுந்த

கங்கை நீரில் சந்திரனில் தோன்றிய குளிர்ந்த அமுதத்தைத் தெளித்து அதனை அந்நகர் முழுவதும் பரவச் செய்தார். மதுரம் பெருகியது. அதனால் அந்நகருக்கு மதுரை என்னும் புதுப்பெயரும் மருவியது.

அக்கோயில் புனரமைப்புப் பெற்று எட்டுத்திக்கும் அதன் பெருமை பரவ மக்கள் வந்து குழுமி வழிபட்டுப் பயன்பெற்றனர்; பாண்டியனும் அக்கோலுக்குத் தவறாமல் சென்று வழிபட்டு நற்பயன் அடைந்தான்; மலையத்துவசன் என்னும் பெயருடைய மகனைப் பெற்று ஆட்சிக்கு உரியவனாக அவனை ஆக்கி எந்த விதக் குறைவுமில்லாமல் ஆண்டு வந்தான். பல ஆண்டு வாழ்ந்து இயற்கை தரும் மூப்பைத் தாங்க முடியாமல் இறைவன் திருவடி நிழலை அடைந்தான். இறந்தபின் சொர்க்க நிலை அடைந்தான்.

மதுரை நகரின் வளர்ச்சிக்கு இவன் கால்கோள் செய்தும், எவரும் வியக்கக் கோயிற் பணிகள் செய்தும் வான் புகழ் பெற்று மறைந்தான்.

## 4. தடாதகைப் பிராட்டி திருவவதாரப் படலம்

வெற்றித் திருமகளைத் தன் தோள்களால் தழுவிய வீரத் திருமகனாகிய பாண்டியன் மலையத்துவசன் கல்வி கேள்விகளில் சிறந்து அறிவும் ஆற்றலும் மிக்க பேரரசனாகத் திகழ்ந்தான். வடமொழியும், தமிழ் மொழியும் அவன் கற்றுப் புலமை பெற்றிருந்தான். இருமொழி கற்று உற்ற வயது வந்ததும் அவன் காரிகை ஒருத்தியைத் தேர்ந்து இவ்வாழ்க்கைத் துணைவியாக்கக் கருதினான்.

சந்திரகுலத்தில் பிறந்த இப்பாண்டியன் சூரிய குலத்தில் பிறந்த பேரரசன் சூரசேனன் பெற்ற திருமகளாகிய காஞ்சனமாலை என்பவளை மணம் முடித்தான். பொன்மாலையென அவன் அப்பெண் மகளைப் போற்றி இல்லற வாழ்க்கை இனிது நடத்தினான்.

காதல் மனைவியிடம் அவன் அன்பு செலுத்தி இன்புற்று வாழ்ந்த போதும் துன்பம் தீர்க்க ஒரு மகவை அவர்கள் பெறவில்லை. மகப்பேறு இல்லாத குறையைப் போக்க அக்கால வழக்கப்படி புத்திர காமேட்டி யாகம் ஒன்று செய்தான். யாகக்குழியில் நெய், சமித்து, பொரி முதலியவற்றை இட்டு ஆகுதி செய்தான். அக்கினி சுடர் விட்டு எரிந்ததும் வேள்வியில் வெற்றித் திருமகளாகிய அழகிய பெண்குழந்தை எழுந்து அன்னை காஞ்சனமாலையின் மடியில் வந்து தவழ்ந்தது. உமையே அப்பெண் குழந்தை வடிவில் வந்தது என்பது அவர்களுக்குத் தெரியாது. அப்பிறவியில் ஒரு சிறுமாற்றம் காணப்பட்டது. மூன்று முலைகள் இயற்கைக்கு மாறாக அப்பெண்குழந்தை பெற்றிருந்தது. அது பாண்டியனுக்குத் திகைப்பை அளித்தது வருத்தமும் உண்டாக்கியது கவலைப்பட்டான்.

மதுரைச் சொக்கநாதரிடம் முறையிட்டுத் தன் குறையைச் சொல்லி வருந்தினான். தெய்வத் திருவாக்கு அசரீரியாக எழுந்து அவன் துயரைப் போக்கியது. "வேள்வியில் பெற்ற செல்வி தெய்வத்தன்மை கொண்டவள். அவள் வயதுக்கு வந்ததும் வனப்புமிக்க அழகும் கவர்ச்சியும் பெற்று விளங்குவாள். தான் மணக்கும் கணவனை எதிர்ப்படும்போது மூன்றாவது முலை அவளை விட்டு மறைந்துவிடும்; அதனால் கவலைப்படவேண்டாம்'

என்று உரைக்க அவன் மன நிறைவோடு அந்தக் குழந்தையை எடுத்துக் கொண்டு வேள்விச் சாலையை விட்டு நீங்கித் தன் அரண்மனையை அடைந்தான், தெய்வத் திருவாக்கு அறிவித்தபடி அவளுக்குத் 'தடாதகை என்று பெயரிட்டுச் சிறப்போடு அவ்வப்போது நடத்த வேண்டிய சடங்குகளைச் செய்து கல்வி கேள்விகளில் வல்லவள் ஆக்கினான். பெண்ணாக அவதரித்த போதும் அவளை வீர மறவனைப் போல யானை ஏற்றம், குதிரைப் பயிற்சி, வாள் வில் பயிற்சிகள் முதலியன கற்றுத் தந்து மறக்குலப் பெண்ணாக மாற்றினான், ஆட்சிக்குரிய தகுதிகள் எல்லாம் மாட்சி பெற அமையும்படி வளர்த்து வந்தான்.

பெண்ணுக்கு மதிப்புத் தந்த காலம் அது. அரசியாவதற்கு வேண்டிய தகுதிகள் அனைத்தும் அவள் பெறச் செய்தான். பராசக்தியாகிய பார்வதியே பாரில் வந்து பிறந்ததால் வீரத் திருமகளாக வளர்த்தார்கள். அவனும் தனக்கு ஆண்மகவு இன்மையால் அவளுக்குப் பட்டம் சூட்டி அரசியாக்கி வைத்தான். மீனாட்சி அம்மையே கோனாட்சி செய்யத் தொடங்கினாள்.

மலையத்துவசன் தன் மகளுக்கு மணிமுடி சூட்டியபின் மண்ணுலக வாழ்க்கையைச் சிலஆண்டுகளே நீட்டித்தான். இயற்கை அவன் ஆயுளை முடித்து விட்டது. அவன் பரலோகம் சென்று உயர்நிலை அடைந்தான்.

பெண்ணரசியாகிய தடாதகைப் பிராட்டியார் நீதி வழுவாமல் செங்கோல் ஆட்சி நடத்தினாள்; அறச் சாலைகளையும் அறிவுச் சாலைகளையும் நிறுவித் தருமமும், கல்வியும் வளர்த்துப் புகழைப் பரப்பினாள்.

காலையில் விழித்து எழுந்ததும் சிவனை நினைத்து வழிபட்டே தன் கடமைகளைச் செய்யத் தொடங்கினாள். சோமசுந்தரர் திருக்கோயிலுக்குச் சென்று விதிப்படி வலம் செய்து வணங்கி வழிபட்டு வந்தாள். அநிந்திதி கமலினி என்று தெய்வத் தோழியர் இருவரும் மானுட வடிவம் தாங்கி அவளுக்கு அணுக்கத் தொண்டராகப் பணியாற்றினர். அவ்வாறே திருமகளும், கலைமகளும் பிறவி எடுத்து இறைவியாகிய தடாதகைக்குப் பணிவிடை செய்தனர். நாடு கல்வியும் செல்வமும் பெற்று ஓங்கியிருந்தது. சேரனும் சோழனும் அம்மையாரின் அடிகளை வணங்கி இட்ட ஏவல்களைப் பணிவுடன் செய்து வந்தனர். பாண்டிய நாடு கன்னி நாடு என்றும் வழங்கப்பட்டது.

கயிலையில் சிவனோடு ஒரு பாகமாக இருந்து வரும் உமையம்மை ஒரு முறை தக்கன் மகளாக அவதரித்தார். அதே போல இமவானும் தவம் செய்து பார்வதியைப் பெற்றான். இருவரும் அவர்கள் செய்த தவப்பேற்றினால் உமையாரை மகளாகப் பெற்றனர். இங்கு இவர் மானுட மகளாகப் பிறந்தது பெரிதும் வியப்பைத் தந்தது. புதுமையாகவும் இருந்தது. அதற்குக் காரணம் என்ன? அதற்கு ஒரு வரலாறு பின்னணியாக இருந்தது. அதனை அகத்தியர் எடுத்துச் சொல்ல ஏனைய முனிவர்கள் கேட்டுத் தெளிவு பெற்றனர்.

விசுவாவசு என்னும் வித்தியாதரனுக்கு ஒரு மகள் இருந்தாள்; அவள் பெயர் வித்தியாவதி என்பதாகும்; பெயருக்கு ஏற்ப அவள் பல கலைகளையும் கற்றவளாக இருந்தாள். அவள் உமையம்மையிடம் மிக்க அன்பும் ஈடுபாடும் கொண்டிருந்தாள். தன் தந்தையை நோக்கித் தான் உமையாளிடத்து நெருங்கிய அன்பு காட்ட

வேண்டும்; அவர்களைத் தொடர்ந்து வழிபட வேண்டும்; அதற்கு உபாயம் யாது என்று கேட்டாள். அதற்கு அவன் மதுரைத் தலத்தின் மகிமையைக் கூறி அது பூலோகச் சிவலோகம் எனப்படும் என்றும், அங்குள்ள மீனாட்சி கோயிலுக்குச் சென்று வழிபடுவதே உயர்வு தரும் என்றும் கூறினான்.

உய்யும் நெறி அறிந்து உலக அன்னையின் திருவடிகளுக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு அல்லும் பகலும் வழிபட மதுரை வந்து சேர்ந்தாள். அங்குத் தனி ஒருத்தியாக இருந்து விரதங்கள் பல நோற்றாள். மீனாட்சியம்மையின் கோயிலுக்குத் தினந்தோறும் சென்று வழிபட்டாள். உணவு உட்கொள்ளுதலைச் சுருக்கிக்கொண்டு ஊனைச் சுருக்கி உள்ளொளி பெருக்கும் உத்தமச் செயலில் ஈடுபட்டாள். நாளைக்கு ஒரு வேளையே உண்டு வந்தாள். தை மாதம் தொடங்கி மார்கழி வரை பன்னிரண்டு மாதம் விரதங்கள் அனுஷ்டித்து உணவைச் சுருக்கிக் கொண்டு வந்தாள். தையில் பகலில் ஒரு வேளை உண்டாள்; மாசியில் இரவு மட்டும் உண்டாள்; பங்குனியில் கிடைத்ததை உண்டு காலம் கழித்தாள்; சித்திரையில் இலை தழைகளையும், வைகாசி மாதம் எள்ளுப்பொடியையும் உண்டு வந்ததாள்; ஆனியில் சந்திராயன விரதம் மேற்கொண்டாள்; ஆடி மாதத்தில் பசுவின் பஞ்சகவ்வியத் துளியையும், ஆவணியில் பாலும், புரட்டாசியில் தண்ணீரும், ஐப்பசியில் தருப்பைப் புல்லில் நிற்கும் பனிநீரும் கார்த்திகையில் வெறும் காற்றையும் உண்டாள்; மார்கழியில் முழுப்பட்டினி கிடந்தாள்; தை மாதம் பிறந்ததும் கோயில் சந்நிதியை அடைந்து மீனாட்சியம்மையைத் துதித்து யாழ் எடுத்து இன்னிசை மீட்டிப் பாடினாள்; மீனாட்சி அம்மையின் அருட்செய்கைகளை அழகாகப் பாடினாள்,

'வேதமுடிமேல் ஆனந்த உருவாய் நிறைந்து
விளையாடு
மாதரரசே 'முத்தநகை மானே, இமயமட மயிலே
மாதர் இமவான் தேவி மணிவடம் தோய் மார்பும்
தடந்தோளும்
பாதமலர் சேப்புற மிதித்து விளையாட்டயரும்
பரிசு என்னே!''

மீனாட்சி அம்மையைச் சிறு குழந்தையாக்கி உருவகித்துப் பாடிய பாடல் நெஞ்சை உருக்கும் தன்மையதாக விளங்கியது. தெய்வக் கோயிலில் குடி கொண்டிருந்த மீனாட்சியே குழந்தை வடிவாக அவள் முன் நின்று தவழ்ந்து விளையாடினாள். மூன்று வயது சிறுமியாக அவள் முன் காட்சி அளித்தாள்.

யாழினும் இனிய குரலில் அவள் இசைத்த பாட்டுக்கு உருகி நேரே வந்து காட்சி அளித்து அக்குழந்தை சிரித்து விளையாடி அவள் சிந்தனை யாது என்று கேட்டது. வந்தனை செய்து வழிபட்ட வித்தியாவதி என்னும் அக்காந்தருவப் பெண் மீனாட்சி அம்மையைத் தனக்கு மகளாகப் பிறந்து மகிழ்வளிக்க வேண்டும் என்று வேண்டினாள்.

அவ்வாறே வரம் கொடுத்து வாழ்த்தி அனுப்பினாள். அந்த வித்தியாவதியே காஞ்சனமாலையாகப் பிறந்து பாண்டியன் மலையத்துவசனை மணந்து தடாதகைப் பிராட்டியை மகளாகப் பெற்று உயர்பேறு பெற்றாள் என்பது கதை. இக்கதையை அகத்தியர் ஏனைய முனிவர்க்கு எடுத்து உரைத்து விளக்கம் தந்தார் என்று கூறப்படுகிறது.

## 5. திருமணப்படலம்

உலகம் ஈன்ற தாயாகிய உமையம்மை இளங்குழவியாகித் தடாதகைப் பிராட்டி என்ற பெயரோடு அரசு

பட்டம் ஏந்தி நாட்டை மனுநீதியின்படி அரசாண்டு வந்தாள்' கன்னிப்பருவம் அடைந்த நிலையில் அவள் அழகு ஈடு இணையற்று விளங்கியது; இடை இறுகியது; வனப்புமிக்க முலை இறுமாப்பு எய்தியது; கருங்குழல் கற்றை இருளையும் வென்றது; யாழினும் இனிய தீஞ்சொல்லும் இனிய நகையும் கூடிய நிலையில் மணப் பருவம் வந்துற்றதால் அவள் அன்னை காஞ்சனை அவள் மணத்தைப்பற்றிக் கவலை கொண்டாள்.

''கன்னிப்பருவம். வந்தும் கனிவு மிக்க மணவாழ்வு வாய்க்கவில்லை'' என்று ஏங்கினாள்; அதனைத் தன் மகளிடம் தெரிவித்தாள்.

''அன்னையே! நீ நினைப்பது எல்லாம் உடனே நடந்துவிடும் என்று கூற முடியாது; ஆகும்போது ஆகும்; நீ கவலைப்படாதே; யான் போய்த் திசைகள் நான்கும் சென்று நாடுகள் அனைத்தையும் வென்று வீடு திரும்புவேன்'' என்று கூறி உடனே எழுந்து திக்கு விசயம் செய்யப் புறப்பட்டாள்.

அரசியின் திருவுளச் செய்தி அறிந்து அமைச்சர்களும் படைத்தலைவர்களும் உடன் புறப்பட்டனர். தேரும் வந்து சேர்ந்தது; சங்குகள் முழங்கத் தடாதகை தேரில் ஏறிப் புறப்பட்டாள். வாத்தியங்கள் முழங்கின; யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நால்வகைப் படைகளும் உடன் சென்றன. சுமதி என்னும் அமைச்சன் மற்றொரு தேரில் ஏறிச் சென்றான். நங்கை தன் குறிப்பு நோக்கி நாற்பெரும்படையும் செல்ல அம்மையார் தம் செங்கையில் பிரம்பு தாங்கிச் சேவகம் செலுத்திச் சென்றாள்.

கஜபதி, துரகபதி, நரபதி முதலாய வடபுலக் காவல் வேந்தர் புயவலி அடங்க வெற்றி கொண்டாள். யானை,

குதிரை, தேர், பிறைநுதல் அழகியர் இவர்களைத் திறையாகப் பெற்றாள். இந்திரனை நோக்கிப் படை செல்ல அவன் எதிர்க்கும் ஆற்றல் இல்லாமல் விலகிச் சென்றான். வனப்புமிக்க மங்கையரையும், வெள்ளை யானையையும், தெய்வத் தருக்களையும் கவர்ந்து மீண்டாள். இவ்வாறே மற்றைத் திசைக் காவலர் யாவரையும் அவர்கள் ஆண்மை இழக்கச் செருச் செய்து திறையும் கைக் கொண்டாள். மேரு மலையையே வில்லாகக் கொண்டிருந்த சிவபெருமான் இருக்கும் கயிலையை நோக்கிச் சென்றாள். ‘சிவகணங்கள் எதிர்த்துத் தோற்று ஓடின. பின் சிவபெருமானே நேரில் வந்தார் ஒற்றைக் கழல் அணிந்த திருப்பதமும், பாம்பு அசைத்து, உடுத்த வெம்புலித் தோலும், மழுக்கரமும், வெண்ணீறு அணி கோலமும், நூல்மார்பும், கற்றைச் சடையும், தன்னையே நோக்கிய கருணை செய் இரு நோக்கும் கொண்ட தன் வலப் பாதியைத் தடாதகைப் பிராட்டி எதிர் கண்டாள்.

கண்டபோதே ஒரு முலை மறைந்தது. உள்ளத்தில் நாணம், மடம், அச்சம் தோன்றப் பண்டைய அன்பு வந்து ஆட்கொண்டது; கருங்குழல் சுமை பிடரியில் தாழக் கெண்டை போன்ற உண்கண்ணால் புறவடி நோக்க, மண் கிளைத்து மின் என நின்றாள். நாண் அட.ச் சாய்ந்த நலங்கிளர் கழுத்தினைக் கொண்ட அப்பாவை தன் மனமாற்றத்தைக் கண்டு திகைத்தாள், அன்று அகல் விசும்பிடை எழுந்த அசரீரி கேட்டு அறிந்த மூதறிவாளன் ஆகிய சுமதி என்னும் அமைச்சன் அம்மையார் அடிபணிந்து ‘‘அன்னாய் இக்கொன்றையஞ் சடைக் குழகனே நின் மன்றலுக்கு உரிய மணவாளன்’’ என்றான்.

அன்பு துன்ற நின்றவளைப் பார்த்துச் சிவபரஞ்சோதி யாகிய பெருமான் இவ்வாறு கூறினார்.

"என்று நீ திக்கு விசயம் செய்து புறப்பட்டாயோ அன்றே யாமும் மதுரையை விட்டு உன்னைப் பின் தொடர்ந்தோம். இன்று முதல் எட்டாம் நாள் சோமவாரத்தன்று மறைவழி மணம் செய்ய வருதும்; நின்னகர்க்கு நீ ஏகு" என்றார்.

இவ்வாறு கூறிய நாதன்மேல் அன்பையும் உயிரையும் இருத்தி ஆயத்தார் சூழத் தேர் மேல் ஏறிக்கொண்டு தெய்வ மால்வரைகளையும், புண்ணிய நதிகளையும் கடந்து மாமதுரையை அடைந்தாள்.

மங்கையர்க்கரசியாகிய தடாதகைப் பிராட்டியை மங்கலப் பொருள்களோடு நங்கையர் எதிர் கொள்ளச் செல்வம் மிக்க மாளிகையில் புகுந்தாள். உடனே திருமணச் செய்தியைத் தீட்டி எங்கும் ஓலைகளைப் போக்கி அமைச்சர்கள் மங்கல வினைக்கு வேண்டுவனவற்றை அமைக்கத் தொடங்கினர். மாநகர் எங்கும் முரசு அறைவித்துச் செய்தி செப்பினர்.

சிவபெருமானும் குறித்த நாளில் மதுரை வந்து சேர்ந்தார். அவர் இடப வாகனத்தினின்று இறங்கினார். திருமாலும், பிரமனும் இருபுறத்திலும் நின்று வரவேற்றனர். அப்பொழுது காஞ்சனமாலை மகளிர் சூழ வந்து பொற்கலம் கொண்டு அவர் திருவடிகளைக் கங்கை நீர் கொண்டு விளக்கி ஈரம் புலரும்படி வெண்பட்டினால் துடைத்துப் பனிநீர் தெளித்து சந்தனக் குழம்பை அணிந்து கற்பக மலர்கள் சாத்திக்

கை குவித்து வணங்கி ''பொற்புமிகு பாவையை மணந்து பொதிகைத் தென்றல் வீசும் பாண்டிய நாட்டை இருந்து ஆள்க'' என்று வேண்டினாள்.

தேவர்களும் திருமால் பிரமன் முதலிய தெய்வங்களும் சிவ கணங்களும் வேதம் பயில அந்தணர்களும் தவம் செய்யும் முனிவர்களும் பல தேசத்து மன்னர்களும் நாட்டு மாந்தரும் மகளிரும் குழுமி இருந்து இச் சிறப்பு விழாவில் பங்கு கொண்டனர்.

அந்நாட்டு மக்கள் மணமக்களைக் கண்டு வியந்து பாராட்டினர்.

கன்னிதன் அழகுக் கேற்ற அழகன் இக் காளை என்பார்; மன்னவன் இவனே அன்றி வேறு இல்லை மதுரைக்கு என்பார்.

கலைமகளும் திருமகளும் சுந்தரவல்லியாகிய தடாதகையை 'சோபனம்' என்று கூறி வாழ்த்தி அவள் கைகளைப் பற்றி எழுப்பினர்; மறைகள் ஆர்த்தன.

அறைந்தன தூரியம்; ஆர்த்தன சங்கம்;
நிறைந்தன வானவர் நீண்மலர் மாரி;
எறிந்தன சாமரை; ஏந்திழை யார்வாய்ச்
சிறந்தன மங்கல வாழ்த்து எழு செல்வம்

காஞ்சனை வேண்டியவாறு வீட்டு மாப்பிள்ளையாக இருந்து நாட்டு ஆட்சியை ஏற்றுக் கொள்ள இறைவன் இசைந்தார். ஆட்சி என்பது எப்படி இருக்க வேண்டும் என்பதைக் காட்சிப்படுத்திக் காட்ட இதனை ஒரு நாடகமாக ஏற்றுக் கொண்டு நடித்துக் காட்டினார்.

முடி சூடிக் செங்கோல் ஓச்சும் சீர்மையை மேற்கொண்டார்.

விடைக் கொடி கயல் கொடியாகியது; அரவுக் கலன் பொற்கலன் ஆகியது; கொன்றைப்பூ வேப்பம் பூவாக மாறியது; புலித்தோல் பொன்னாடையாக மாறியது; மதி முடி மணி முடி ஆகியது; மதுரைப் பதியில் உறையும் சோமசுந்தரக் கடவுள் பாண்டியனாகி வீற்றிருந்து செங்கோல் நடத்தினார்.

சிவன் கொண்ட புதிய வடிவுக் கேற்பச் சங்குகன்னன் முதலிய கணத்தவர் தாமும் பண்டை வடிவம் மாறிப் பார்த்திபனின் பணியில் நின்றனர். தென்னவன் வடிவம் கொண்ட சிவபிரான் உலகம் காக்கும் மன்னர்கள் சிவனைப் பூசை செய்வது வேத நெறி என்று உணரும் பொருட்டுத் தானும் அந்நகரில் நடுவூர் என்று ஓர் அழகிய நகரைப் புதுப்பித்தார். சிவாகம வழியே கோயிலும் விதித்து சிவலிங்கத்தையும் பிரதிட்டை செய்து நாளும் விதி முறைப்படி பூஜைகள் செம்மையாகச் செய்தார். பின் தன் கடமைகளைச் செய்து வந்தார். அச்சிவலிங்கத்தையும் சோமசுந்தரக்கடவுளையும் வழிபட்டு மற்றவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கி நல்லாட்சி செய்தார்.

## 6. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

கொடி போன்ற தடாதகையை மணந்த பின் புவனம் தாங்கும் கண்ணுதல் மூர்த்தியின் திருமணத்திற்கு வந்த மண்ணியல் வேந்தர், வானோர், மாதவர் மற்றும் பிறரையும் "உண்ண வாருங்கள்" என்று அழைத்தனர்.

பொன் ஒளி வீசும் தாமரைக் குளத்தில் நீராடித் தத்தம் நெறியில் நியமம் செய்து முடித்தவர்களுள் பதஞ்சலி, வியாக்கிரப்பாதர் என்னும் முனிவர் இருவரும் "திருச்சிற்றம்பலத்தில் சிவனாரின் திருநடனம் கண்டு உண்பது அடியேம் எம் நியமம்." என்றனர். அவ்வாறு அவர்கள் கூற "அந்தக் கூத்தை இங்கு நாம் செய்வோம்; எங்கும் நிறைந்த பரம் பொருளுக்குச் சிதம்பரம் இதயத் தானம் ஆகும்; மதுரை துவாத சாந்தத் தானம் ஆகும்" என்று கூற "மன்னவ! ஏனைய அங்கம் யாவை?" எனப் பரமன் சொல்வான் ஆயினார்.

இப்பேரண்டம் பிரமனது சரீரம் ஆகும். இடுப்புக்கு மேல் உறுப்புகள் ஏழ் உலகமாகும்; கீழ் ஏழ் உலகங்கள் ஆகும். நடு இடமே பூலோகம் ஆகும்; இதில் தலங்கள் பெருமை மிக்கனவாகும். அவை திருவாரூர், திருவானைக்கா, அருணாசலம், சிதம்பரம், காளத்தி, காசி, கைலாசம், மதுரை என்பனவாகும்.

ஒவ்வொரு தலத்திலும் தனித்தனிப் பெயர்களோடு உறைகிறோம்.

திருவாரூரில் தியாகேசர் என்றும், திருவானைக்காவில் சம்புநாதர் என்றும், அருணாசலத்தில் அருணாசலேசுவரர் என்றும், சிதம்பரத்தில் சபாபதி என்றும், காளத்தியில் காளத்தீசுவரர் என்றும், கைலாசத்தில் ஸ்ரீகண்டபரமே சுரர் என்றும் வழங்குவர். மதுரையில் சுந்தரேசர் என அழைக்கின்றனர். மதுரையே எல்லாத் தலங்களிலும் முற்பட்டதாகும். இங்கே உள்ள மூர்த்திகளுள் தாண்டவ மூர்த்தியே மேலானது ஆகும். இந்தக் கோலத்தில் எம் நடனத்தை உங்களுக்குக் காட்டுவோம் என்று விளக்கினார். சுந்தரேசரின் திருக்கூத்துத் தொடங்கியது.

இறைவன் திருவருளால் விமானத்திற்குக் கிழக்கே ஒரு வெள்ளியம்பலமும் மாணிக்க மேடையும் தோன்றின.

சிவகணங்கள் மொந்தை என்னும் சிறிய மத்தளம் கொண்டு. முழக்கம் செய்ய, நந்தி மா முழவு கொண்டு தாக்க, நாரணன் இடக்கை என்னும் முழவினை ஆர்க்க' தும்புரு, நாரதர் இருவரும் இசைந்துபாட, துந்துபிகள் ஒலிக்க, கலைமகள் சுதி கூட்ட, பிரமன் யாழிசைக்க, தேவர்கள் கற்பகப் பூ மழை சொரிய முயலகன் மீது வலப்பாதம் வைத்து மிதித்துக் கொண்டு இடது காலை மேலே தூக்கி மற்றும் நாட்டிய முறைப்படி குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயும் பனித்த சடையும் எடுத்த பொற்பாதமும் உடைய இறைவன் திருக்கூத்து ஆடினார்.

பதஞ்சலியும் வியாக்கிரபாத முனிவரும் மற்றும் குழுமி இருந்த முனிவர்களும் தேவர்களும் கந்தருவர் இருடிகள் முதலியோரும் இத்திருக்கூத்தைக் கண்டு பரமானந்தத்தில் முழுகினர். பராபர முதற் பொருளாகிய பரமனைத் துதித்துப் பாடினர். பதஞ்சலியும் வியாக்கிரரும் இறைவன் திருவடிகளில் விழுந்து வணங்கினர். அவர்களை எழுப்பி வேண்டுவது யாது என்று வினாவினார்.

இதே திருக்கூத்துக் கோலத்தில் நிலைத்து நின்று எங்களுக்குத் தரிசனம் தரவேண்டும் என்றும், அவ்வாறு தரிசிப்பவருக்குச் சித்தி நிலை கிட்ட வேண்டும் என்றும் வேண்டினர். இறைவன் அவ்வாறே ஆகுக என்று அருள் செய்தார்.

இத்தாமரைக் குளத்தில் முழுகி, நிறை பொருளாகிய தாண்டவ மூர்த்தியைத் தரிசிப்பவர்கள் அவர்கள் வேண்டும் வரங்களையும் பேறுகளையும் பெற்றுப் பயன் அடைந்து வருகின்றனர்.

# 7. குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

மங்கையர்க்கரசியாகிய பாண்டியர் மகள் வேண்டிய உணவு சமைத்து ஈண்டிய முனிவர்களுக்கும் வேதியருக்கும் மன்னவர்க்கும் அருந்தி அகமலர்ந்து நன்னிதியும் பட்டு ஆடைகளும், பாக்கு வெற்றிலைசந்தனம் பூ முதலியனவும் தந்து வழி அனுப்பினாள். அதற்குப் பிறகு ஓய்வாகக் கணவன் அருகில் அமர்ந்து அன்புடன் உரையாடிக் கொண்டிருந்தாள். கடமைகள் முடிந்துவிட்டன என்ற கருத்தில் மனநிறைவோடு அங்கு இருந்தனர்.

சோறு சமைத்த மடைப்பள்ளி அதிகாரிகள் அன்னை பிராட்டியிடம் "சமைத்து வைத்த சோற்றில் ஆயிரத்தில் ஒரு பங்கு கூடத் தீரவில்லை. தின்பதற்கு ஆட்கள் இல்லாமல் அப்படி அப்படியே கிடக்கின்றன. தேவர்கள் வருவார்கள் கணங்கள் உண்பார்கள் என்றெல்லாம் நினைத்து மலைமலையாகக் குவித்து வைத்திருக்கிறோம். என்ன செய்வது அவற்றைத் தூக்கி எங்கே கொட்டுவது" என்று அவர்கள் தம் தொழில் முறைப்படி வந்து தொழுது உரைத்தனர்.

அன்னையார் அருகிருந்த மாப்பிள்ளையாகிய சிவபெருமானிடம் சிரித்துக் கொண்டே சொன்னார். "என்ன ஆயிற்று, உங்கள் சிவ கணம் தேவர்கள் ஆட்கள் ஏன் வரவில்லை. உங்கள் ஆட்கள் இவ்வளவுதானா? சமைத்து வைத்தது எல்லாம் வீணாகி விட்டதே?" என்று பேசினார்.

"நீ பாண்டியன் மகள் என்பது தெரியும். வேண்டிய செல்வம் உன்னிடம் குவிந்து கிடக்கிறது. திக்குகளிலிருந்து திறைகள் வேறு வந்து குவித்திருக்கின்றன. கற்பக

தருபோன்ற தெய்வ மரங்கள் விரும்பும் உணவை அள்ளித் தருகின்றன. தமிழகம் செல்வத்துக்கும் சோற்றுக்கும் பெயர் போனது. உன் சமையல்காரர்கள் மகாமேதாவிகள். உன் செல்வத்தைக் காட்டச் செருக்கோடு செய்த உணவு உண்ண ஆட்கள் இல்லை என்று குறைப்படுகிறாய் எம்முடைய ஆட்கள் வந்தால் உன்னால் சோறு போட முடியாது; ஒரு ஆளுக்குக் கூட உங்களால் வயிறு நிறையச் சோறுபோட முடியாது அதனால்தான் எம்சிவகணங்களை அழைத்து வரவில்லை. அவர்களுக்கெல்லாம் சோறு போட்டுக் கட்டுப்படி ஆகாது'' என்று பேசத் தொடங்கினார்.

''என்னது; அப்படிச் சொல்லிவிட்டீர், எத்தனை ஆட்கள் வேண்டுமானாலும் வரட்டும்; எங்களால் சமாளிக்கமுடியும்'' என்றாள்.

சிவன் கிளறி விட்டதால் குண்டோதரன் வயிறு மண்டி எரிந்தது; அகோரப் பசி எடுத்தது; எரிமலை வழிதவறி வயிற்றுக்குள் புகுந்து விட்டது போலப் பசியால் வெந்து வேதனைப்பட்டான். சோற்று மலையினை அவன் அழித்துச் சேற்றுநிலம் ஆக்கினான்; கறி காய், இனிப்புகள், பருப்பு வகைகள், சாம்பார், ரசம், குழம்பு, பாயசம் எல்லாவற்றையும் ஒரு பிடி பிடித்தான். அவன் பசியை அவ்வளவும் சேர்ந்து கால் வயிறு கூட அடக்கவில்லை; நீர் வேட்கையால் மோர் கேட்டான்; எல்லாம் தீர்ந்து விட்டது என்றனர். என்ன செய்வது! பிராட்டியார் இப்படியும் ஒரு ஆள் இருப்பானா என்று வியந்தார்.

இராமாயணத்தில் கும்பகருணன் வண்டி வண்டியாகச் சோறும் ஊனும் கள்ளும் அயின்றான் என்று கேள்விப் பட்டிருக்கிறாள். அவனை வெல்லக்கூடிய நிலையில் இவன் இருந்தது அவளுக்கு அதிசயமாக இருந்தது

இவன் ஒருவனுக்கே சோறு போட முடியவில்லை. சிவகணம் அனைத்தும் வந்தால்என்ன செய்திருக்க முடியும் என்று நினைத்துப் பார்த்தாள்; ஆணவத்தால் அவசரப் பட்டுத் தன் மிகுதியை எடுத்துப் பேசியது தகுதியற்றது என்பதை உணர்ந்தாள்; கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போல இப்பொழுது புதிய பிரச்சனை உருவாகியது; அவன் பசிக்கு அலைகிறான்; நீருக்கு உலைகிறான்; என்ன செய்வது; இறைவன் முப்புரத்தில் இட்ட தீ அவன் வயிற்றின் அடிப்புறத்தில் புகுந்துவிட்டதே என்று அஞ்சினாள்; பசி என்பது எவ்வளவு கொடுமை யானது என்பதை அவன் நிலை காட்டியது; உயிர்களின் பசிக்கு உணவு இடுவது எளியது அல்ல என்பதைத் தடாதகை உணர்ந்தாள். இறைவனோடு போட்டி போட்டுக் கொண்டு பேசியது தவறு என்பதை உணர்ந் தாள்; போதும் ஒரு குண்டோதரன் என்று நினைத்து அமைதியாக இருந்தாள்.

## 8. அன்னக் குழியும் வைகையும் அழைத்த படலம்.

கருணைக் கடலாகிய சோமசுந்தரக் கடவுள் தடாதகைப் பிராட்டியைப் பார்த்து ''இவன் ஒருவன் பசியை உங்களால் அடக்க முடியவில்லையே'' என்று பரிந்து பேசினார். அவன் பசியால் துள்ளிக் குதித்தான். எது கிடைத்தாலும் அள்ளிப் பருக ஆவல் காட்டினான். உலகுக்கெல்லாம் உணவு அளிக்கும் அம்மை ஆகிய அன்னபூரணியை அழைத்தார். இறைவன் பணி கேட்டு தயிர்ச் சோற்றுக் குழிகள் நான்கினைக் கொண்டு வந்து நிறுத்தினாள்.

சோற்றைக் கண்டதும் பசி மூண்டது. அள்ளி அள்ளி வயிற்றில் போட்டு அடைத்தான்; வாங்கி வாங்கி வாய் மடுத்ததும் உடம்பெல்லாம் வயிறாக வீங்கியது. நீர்

வேட்கையால் தரை இடிபட மலை ஏறக் கீழே விழுந்து புரண்டான்; குடிக்க நீர் வேண்டிக் கதறினான்; எங்கு நீர் கிடைக்கிறதோ அங்கெல்லாம் தேடி அலைந்தான். ஆறு, குளம், குட்டை, ஏரி வாய்க்கால்களில் அங்கு உள்ள தண்ணீர் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் வறண்டு போகும்படி வாய் வைத்துக் குடித்தான்.

அப்பொழுதும் அவன் வேட்கை அடங்கவில்லை. சுந்தரேசரிடம் வந்து அவர் காலடிகளில் விழுந்து ''தண்ணீர் வேண்டும்'' என்று முறையிட்டான். அவன் குறையறிந்து இறைவன் தன் சடை மீது இருந்த கங்கையை விளித்து ''நீ பகீரதன் பொருட்டு அன்று பாய வடநாடு செழித்துக் கிடக்கிறது; தமிழகத்தில் ஆறுகளுக்குப் பஞ்சம் ஏற்பட்டுள்ளது; காவிரி ஒன்று போதாது; அது சோழ நாட்டுக்குச் சோறு தருகிறது. பாண்டிய நாட்டுக்கும் ஒரு நதி தேவைப்படுகிறது; நீ இங்குப் பாய்ந்து ஓடு'' என்று கட்டளை இட்டார்.

குண்டோதரனைப் பார்த்து நீ வை கை என்றார்; அவ்வாறு சொன்னதும் அவன் நீர் வரும் திக்கு நோக்கிக் கைகளை விரித்துப் பிடித்துக் காத்திருந்தான். வெள்ளமெனப்பெருகி வந்த நீரை உள்ளம் உவந்து வேட்கை தீரக் குடித்தான்.

பசியும் தாகமும் தணிந்தன. அவன் வயிறு குளிர்ந்தது; அவன் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்து சோமசுந்தரரை உணர்ச்சி ததும்பத் துதித்துப் பாடினான். அருட்பாடல் கேட்டு இறைவன் அவனைச் சிவ கணத் தலைவனாக்கி உயர்பதவி அளித்து மகிழ வைத்தார். திருமண வைபவம்முடிந்து மன்னனாக இருந்து அப்பாண்டிய நாட்டைச் சோமசுந்தரக் கடவுள் தொடர்ந்து ஆட்சி செய்து வந்தார்.

கங்கை நதி பாய்ந்ததால் வைகை நதியில் நீர்ப் பெருக்கு மிகுந்தது; அது புண்ணிய நதியாக மாறியது. அதனால் அதில் நண்ணி நீராடியவர்கள் நற்கதி அடைந்தனர். கங்கையையும் வைகையையும் இணைக்கும் திட்டத்தை அன்றே சிவபெருமான் உருவாக்கி வைத்தார்.

சிவனின் சடையில் இருந்து இறங்கி வந்ததால் அது 'சிவகங்கை' என்றும், அதில் முழுகுபர் ஞானம் பெறலாம் என்பதால் 'சிவஞான நதி' என்றும், காற்றினும் வேகமாகக் கடுகி வரலால் 'வேகவதி' என்றும் பெயர் பெற்றது. நூல்கள் இதனைப் புகழ்ந்து பேசுவதால் 'கிருத மாலை' என்றும் இது வழங்கலாயிற்று. புண்ணிய நதிகளுள் இது ஒன்றாக விளங்கியது.

## 9. எழுகடல் அழைத்த படலம்

நாட்டுக்கு அரசனாக உலகை ஆட்டுவிக்கும் இறைவன் இருந்து ஆட்சி செய்து வந்த நாளில் காட்டுக்குள் திரிந்து தவம்செய்த முனிவர்களும் தவசிகளும் சந்திக்க அங்கு வந்து கூடுவார் ஆயினர். வேதம் கற்ற முனிவன் ஆகிய கவுதமனும் அங்கு வந்து திரும்பும் வேளையில் காஞ்சன மாலையின் இல்லத்து வந்து அமர்ந்தார். அவளும் வர வேற்று முகமன் உரை வழங்கிப் பொன் ஆதளம் இட்டு அஞ்சலி செய்து அரிய தவத்தின் திறம் அறிந்து கொள்ளக் கேட்டாள். தவம் என்றால் என்ன? அதன் அவசியம் யாது? அதனால் உண்டாகும் பயன் யாது? என்று கேட்கத் தொடங்கினாள்.

''உலகீன்ற தடாதகைக்கு நீ தாயானாய்; சிவனுக்கு மருகன் என்னும் சீர் பெற்றாய்; மலையத்துவசனின் மனைவியாக இருந்து பெருமை பெற்றாய். நீ அறியாத தவ விரதங்கள் எவை இருக்கின்றன? என்றாலும் வேத நூலில் உள்ளதைச் சொல்கிறேன் என்று கூறினான்.

''மானதம், வாசிகம், காயிகம் எனத் தவம் மூன்று வகைப்படும். அவற்றுள் சிவனைத் தியானித்தல், புலனடக்கம். தரும தானங்கள் மானதம் எனப்படும். வாசிகமாவது ஐந்தெழுத்து ஓதல்; வேத பாராயணம் செய்தல், தோத்திரங்கள் தருமங்கள் எடுத்துப் பேசுதல் முதலியனவாம். காயிகமாவது சிவத்தலங்களுக்கும் கோயில்களுக்கும் சென்று தீர்த்தங்களில் நீராடி வழிபடுதல் முதலியனவாம். கோயில் திருப்பணியும் இவற்றுள் அடங்கும். இவற்றுள் இம்மூன்று தவங்களுள் காயிகமே மேலானது ஆகும். அனைவரும் எளிதில் செய்யத் தக்கது ஆகும். அவற்றுள்ளும் தீர்த்த யாத்திரையே மிகச் சிறந்தது ஆகும். கங்கை, யமுனை, முதலிய நீர்களில் நீராடி இறைவனை வழிபடுதல் மிகவும் போற்றத் தக்கதாகும். தனித்தனியாக இந்நீர்களில் நீராடுவதைவிட அது சென்று படியும் கடலில் நீர் ஆடுவது மிகவும் எளியது ஆகும்'' என்றான்.

''உப்புக் கரிக்காதா?''

''தப்பு அப்படிச் சொல்வது; சாத்திரம் கூறுவது; அது பழிக்கக் கூடாது'' என்றான்.

பொன்மாலைக்குப் புது ஆசை வந்தது. மதுரைக்குக் கடல் நீர் வருமா என்ற ஆசை உண்டாயிற்று.

கவுதமர் சென்றதும் மகளை அணுகித் தன்ஆசையைத் தெரிவித்தாள்.

''இது என்னம்மா புது ஆசை?''

''உன் கணவனால் முடியாதது என்ன இருக்கிறது; குண்டோதரனுக்குச் சோறு போட்ட போது கங்கையையே அழைக்கவில்லையா, சிவனையே

மருமகனாகப் பெற்ற எனக்குச் சிவன் முத்தி அடையச் செய்வது முடியாதா'' என்று மனம் குழைந்து பேசினாள்.

''என்ன அம்மாவிடம் கொஞ்சல்?''

''அது அவர்கள் உம்மிடம் கெஞ்சல்''

''சொல்லு நீ அதை; அதற்காக அஞ்சல்'' என்றார்.

''கடல் வேண்டுமாம் முழுகி எழுவதற்கு; யாரோ முனிவர் சொன்னராம் உடம்புக்கு நல்லது என்று''.

''உடம்புக்கு அல்ல; உயர் தவத்திற்கு உகந்தது''.

''அந்த அவத்தை எல்லாம் எனக்கும் தெரியும்; மருமகனிடம் நேரே சொல்ல வெட்கப்படுகிறாள்''.

''மாமியாரின் லட்சணம் அது தானே; மெச்சினோம் நாம்; ஒரு கடல் என்ன ஏழு கடலும் கொண்டு வருகிறோம்''.

''அதற்கப்புறம் இங்கு மதுரை இருக்காது; கடல் தான் இருக்கும்'' என்றாள்.

''கவலைப்படாதே ஏழுகடல் நீரும் வந்து குவியும்; அதற்கப்புறம் அது தானேவழியும்'' என்றார். மதுரையில் கிழக்கே ஒரு குளத்தில் ஏழ்கடல் நீரும் வந்து விழுந்தது. ஏழு நிறங்களோடு அவை விளங்கின.

''காதற் பெண்ணின் கடைக் கண் பார்வையிலே விண்ணையும் சாடுவோம்'' என்று பாரதி சொன்னது இங்கு உண்மையாயிற்று.

தடாதகைப் பிராட்டி காட்டிய குறிப்பில் விடையேறி வரும் விண்ணவன் ஆகிய சிவபெருமான் ஏழுகடலையும்

கொண்டு வந்து சேர்த்தார். இதுவும் மதுரைத் தலத்துக்குப் பெருமை சேர்த்தது.

## 10. மலையத்துவசனை அழைத்த படலம்

சுந்தரபாண்டியனாகிய சோமசுந்தரர் தடாதகைப் பிராட்டியை அழைத்துக் கொண்டு ஏழுகடல் வந்து குவிந்த வாவியின் கரையிலே அழகிய சோலையில் இருந்து கொண்டு அடுத்துச் செய்ய வேண்டுவது குறித்துப் பேசினார். தீர்த்த மேன்மை அறிந்து அன்னை காஞ்சனைக்காக அழகுற நிரப்பிய கடல் நீரில் வந்து குளித்துப் பயன் பெறுமாறு சுந்தரர் கூற அவ்வாறே காஞ்சனை அம்மையை வாவிக்கரைக்குத் தடாதகை அழைத்து வந்தாள்.

குளித்துக் களித்து மகிழ அவள் அங்கு வரவில்லை; சாத்திரப்படி அதில் முழுகி நற்பயன் பெறவே அங்கு வந்திருந்தாள். சடங்குகள் அறிந்துசொல்வதில் சதுரர்கள் ஆகிய புராண நூல் கேள்வியர் தம்மை நோக்கிக் கடல் நீர் குடைந்திடும் கடமைகள் யாவை எனக் கேட்க விதிமுறை அறிந்த அந்த வேதியர்கள் ''மாசற்ற கற்பினாய்! மகிழ்நன், பெற்ற மகன் இவர்கள் கைத்தலம் அல்லது கன்றின் வால் இம்மூன்றுள் ஒன்றைப் பற்றிக் கொண்டே கடல் நீராடுதல் மரபு'' என்று ஓதினர்.

''கைப்பிடித்த கணவனும் இல்லை; பெற்று வளர்த்த மகனும் இல்லை; கன்றின் வால் தான் எனக்குக் கிடைத்தது. இது விதியின் செயல் என்று தன் கதியை எடுத்துக் கூறிக் கதறினாள். தடாதகை தன்னுயிர்த் தலைவனை அடைந்து பணிந்து தன் அன்னையின் குறையை எடுத்து உரைக்கத் தென்னவனைக் கொணர் வதற்கு அவர் சிந்தனையுள் ஆழ்ந்தார்.அவன் வரவேண்டும்

என நினைத்த அளவில் மலையத்துவசன் மண் நோக்கி விண்ணிலிருந்து விரைவாக விமானத்தில் வந்து இறங்கினான்; கண் நிறைந்த அழகனாகிய சுந்தரனைக் கண்டு தழுவித் தன் அன்பைக் காட்டத் துடிதுடித்தான். இறைவனும் தன் மாமனைச் சந்தித்துத் தோள்களில் தழுவிக் கொண்டு பின் அருகு அவனை அமர்த்தினார்.

பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ? மணப் பெண் போல நாணி அவன் முன்னே வந்து நின்றாள்.

''மகளின் மணத்தைக் காண நீர்வரவில்லையே'' என்றாள்.

''அழைப்பும் ஆண்டவன் அருளும் அன்று கிடைக்கவில்லை'' என்றான்.

''தவத்தின் பேறு அடைய நீர் பூதலத்துக்கு வந்தது என் பேறு'' என்றாள்.

''கைப்பிடித்துக் கடலில் முழுகுவோம்'' என்று கூறி இருவரும் நீரில் மூழ்கினர்.

வேதியர்கள் ஐந்தெழுத்து மந்திரம் சொல்லி மறை நூல் விதிப்படி சடங்குகள் செய்ய இருவரும் கடலில் நீர் ஆடினர்.

மலையத்துவசனும் காஞ்சனையும் புதுப்பிறவி பெற்றது போல் கரை ஏறிக் கறை நீங்கி இறை வடிவம் பெற்றனர். மானுட வடிவம் மாறித் தெய்வ வடிவம் பெற்றுவிட்டனர். அவர்களை அழைத்துச் செல்லத் தெய்வ விமானம் வந்து நின்றது. தேவர்கள் பூமாரி பொழிந்தனர். சிவனை வணங்கிவிட்டு விடை பெற்றவராய் விண்ணுலகம் அடைந்தனர்.

புவ லோகம், சுவர்க்கலோகம், மகர்லோகம், சனக லோகம், தவலோகம் சத்தியலோகம் வைகுந்தம் இவற்றைக் கடந்து தலைமைமிக்க சிவலோகத்தை அடைந்தனர்.

கணவனை இழந்தவர்க்குக் காட்டுவது இல்லை என்று சிலப்பதிகாரம் கூறும்; கைம்மை நோன்பு நோற்ற காஞ்சனை கணவனின் கரம் பற்றி இறைவன் திருவடி நிழலை அடைந்து அமர வாழ்வைப் பெற்றாள்.

## 11. உக்கிரகுமாரன் திரு அவதாரப்படலம்

காஞ்சனையும் மலையத் துவசனும் துறக்க வாழ்வு அடைந்ததால் நாடாளும் பொறுப்பை விட்டு விலக முடியவில்லை. சுந்தரேசுவரர் மக்களுக்கு உயிராக விளங்கித் தக்க முறைப்படி செங்கோல் நடத்திச் சீர் பெற ஆட்சி செய்து வந்தார்.

காஞ்சனையின் காதல் மகளாகத் தடாதகைப் பிராட்டி பிறந்ததால் கயிலை மன்னர் ஆகிய சிவனும் சுந்தரனாக வந்து அரசு ஏற்று நடத்த வேண்டியதாயிற்று. செம்மையான ஆட்சியை நிலைபெறச் செய்ய ஓர் வழி காட்டியாக விளங்கத் தொடர்ந்து பாண்டிய நாட்டை ஆண்டு வந்தார். ஆண்டுகள் பல கழிய எடுத்த கடமைக் கேற்ப ஒரு வாரிசினை ஏற்படுத்தி மகன் ஒருவனை விட்டுச் செல்ல வேண்டியதாயிற்று.

தடாதகையே தவச் செல்வியாக வேள்வியில் மூன்று வயது குழந்தையாக அவதரித்தவள் உலகம்ஈன்ற தாயாகிய பிராட்டி ஒரு மகவை மானுடரைப் போலப் பெற மாட்டாள் என்பது தெரிந்ததாகும். எனினும் கருப்பம் உள்ளது போலவும் கரு உயிர்த்துத் திங்கள் பத்துச் சுமந்தது போலவும் நடிக்க வேண்டியது ஆயிற்று.

முருகனே உக்கிர குமாரனாக அவதரித்தான், பிராட்டியார் தெய்வ அருளால் பிறந்த அக்குழந்தையை எடுத்து மோந்து, தழுவித் தன் தலைவனிடம் தந்தாள். பின் அதை வாங்கிக் கொண்டு தானே தாயாகிப் பால் ஈந்தாள். ஞான சம்பந்தனைப் போல அறிவு ஒளி பெற்று வளர்ந்தான். முருகன் திருஅவதாரம் செய்தமையால் வீரமும் அழகும் மிக்கவனாக விளங்கினான்.

உக்கிரத்தோடு அவன் செயல்கள் விளங்கியமையால் உக்கிரபாண்டியன் எனப்பெயர் பெற்றான். நான்காம் மாதத்தில் சந்திமிதிப்பது என்னும் சடங்கினை நடத்தினர். அவனுக்கு தெய்வத்தைக் காட்டி ஆலயத்தை அறிமுகம் செய்வது என்பது இந்தச் சடங்காகும். ஆறாம் மாதத்தில் அவனுக்கு மங்கலம் பயிற்றுவித்தனர். மூன்றாம் ஆண்டில் முடி எடுத்து மொட்டை அடித்து ஐந்தாம்ஆண்டில் பூணூல் அணிவித்தனர். தொடர்ந்து வேதபாராயணம் கலைகளையும் கற்கத் தொடங்கினான். தேவ குருவாகிய பிரகஸ்பதியைக் கொண்டு வேதாகமங்களையும் போர்த் தொழில்களையும் கற்றான். ஒருமுறை கற்பித்தாலேயே அறிந்து கொள்ளும் ஆற்றல் அவனுக்கு இருந்தது. அறுபத்து நான்கு கலைகளையும் எட்டு வயதுக்குள் கற்று அறிந்தான். பாசுபத அம்பு எய்யும் விதம் மட்டும் சிவனிடத்தே கற்றுக்கொண்டான்.

ஆண்டு பதினாறு அடைந்ததும் ஆண்மைமிக்க வீரனாக அவன் தோற்றம் அளித்தான். வெல்வதற்கு அரியவரையும் வெல்லுதல், தேவராலும் செல்லுதற்கு அரிய தேயத்தும் சென்று திறை கொண்டு வருதல் சுமைமிக்க இப்பூமியாட்சியைத் தம் தோள்களில் தாங்கல், உலகெங்கும் புகழ் பெற வெற்றியும் ஆட்சியும் நடத்தல் என்று இவையாகிய இயல்புகள் அவனிடம் படிந்து வளர்ந்துள்ளமை கண்டு சுந்தரனார் மன

நிறைவு கொண்டார். ஆட்சியைத் தந்து அரசனாக்கு வதற்கு முன்பு அவனை மணமகனாக்கி இல்லறம் ஏற்கச் செய்ய வேண்டும் என்று கூறினார். முதலில் மணம் முடிக்கவிரும்பினார்.

## 12. உக்கிரகுமாரனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம்.

உற்ற வயது வந்ததும் கற்ற தன் மகனுக்கு மண முடித்து வைக்க வேண்டுமென்று பெற்ற தாயும் தந்தையும் முடிவு செய்தனர். அழகுக்கும் கல்விக்கும் ஆற்றலுக்கும் ஏற்ற வகையில் போற்றத் தக்க அரசர் குலத்துப் பெண்ணைத் தேட முனைந்தனர். வடபுலத்தில் மணவூர் என்னும் நகருக்கு அரசனாக விளங்கிய சோம சேகரன் என்னும் அரசன் மகள் காந்திமதியே தக்கவள் என முடிவு செய்தனர்.

அன்று இரவே சோமசேகரன் கனவில் இறைவன் எழுந்தருளி "நாம் மதுரையில் உறையும் சோமசுந்தரன்; நீ பாண்டியன் சுந்தரேசனின் மகன் உக்கிர குமாரனுக்கு; உன்மகளை மணம் முடித்துக் கொடு; காந்திமதியை அழைத்துக் கொண்டு சகல ஏற்பாடுகளுடன் மதுரைக்குச் செல்வாயாக" என்று கூறினார்.

இறைவன் திருவாக்கை அமுத மொழி என ஏற்றுச் சோமசேகரன் அமைச்சர் படைத்தலைவருடன் மதுரையை அடைந்தான். சுந்தரபாண்டியன் அரண்மனையை அடைந்து கனவில்வந்து சொல்லிய செய்தியைச் சொல்லித் தன் மகளையும் அழைத்து வந்திருப்பதாகக் கூறினான். தடாதகை எந்தத் தடையும் சொல்லவில்லை. கண்ணுக்கு

இனிய காரிகையைக்கண்டு மருமகள் ஆவதற்கு வேண்டிய கவினும் நலனும் இருப்பதைக் கண்டு மகிழ்ந்தாள். அங்கலக்ஷணம் அனைத்தும் உடைய அப்பங்கயச் செல்வி போன்ற அரசமகளை அனைவரும் ஆமோதித்தனர். நாள் பார்த்துக் கோள் குறித்து அரசர்களுக்கு ஆள் மூலம் ஓலை போக்கிச் செய்தி சொல்லி மணநாள் ஏற்பாடு செய்தனர்.

தேவர்களும்,விட்டுணு,பிரமன் முதலிய தெய்வங்களும் முனிவர்களும் மண்ணுக்குரிய மகிபர்களும் வேத வேதியரும் நகர மாந்தரும் கூடிய அரங்கில் இருவருக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

நாட்கள் சில நகர்ந்தன. நாட்டு ஆட்சிப் பொறுப்பை அவனிடம் ஒப்புவித்து விட்டுச் சுந்தரேசர் விடை பெற விரும்பினார். அதற்கு முன் அவன் சந்திக்க வேண்டிய பகைகளை எடுத்து உரைத்தார். ''இந்திரனும் வருணனும் மேருமலையும் உனக்கு இடையூறு செய்வர். அவர்களை வெல்வதற்கு வேல், வளை, செண்டு என்ற மூன்று படைகளைத்தருகிறேன். பெற்றுக் கொள்க'' என்று சொல்லி அவற்றை அவனிடம் தந்தார். நீண்ட காலம் மதுரையில் தங்கிவிட்டதால் தானும் தடாதகை யாரும் திருக்கோயிலுக்குச் சென்று விட்டனர்; சிவகணங் கள் முன்னை வடிவம் கொண்டு தத்தம் பதவிகளைத் தாங்கக் கயிலை சென்றனர்.

## 13. கடல் சுவற வேல் விட்ட படலம்.

உக்கிர குமாரன் நீதி நெறி கருதி ஆட்சி செய்து வந்தான்; வளங் கொழிக்கும் பாண்டிய நாட்டில் மக்களுக்கு யாதொரு குறையுமில்லை யாதலின் வேள்விகள் செய்து உயர் பதவிகள் பெற நினைத்தான். தொண்ணூற்று

ஆறு அசுவ மேத யாகங்கள் செய்து பெயரும் பெற்றான். இன்னும் நான்கு செய்துவிட்டால் இந்திரப்பதவியை இழக்க வேண்டி வரும் என்று அஞ்சி மேலும் யாகங்களைத் தடை செய்ய இந்திரன் நினைத்தான்.

நாட்டின் வளத்துக்குக் கேட்டினை உண்டாக்கி விட்டால் —அவன் வேள்விகள் இயற்ற முடியாது என்பதால் வருணனை அழைத்துக் கடல் நீரை எழச் செய்து மதுரையை அழிக்கச் சொன்னான். இந்திரன் ஏவலைத் தாரக மந்திரம் எனக்கொண்டு நள்ளிரவு என்றும் பாராமல் ஏழுகடலையும் ஒன்றாகத் திரட்டி மதுரை மீது ஏவினான்.

சித்தர் வடிவில் சிவபெருமான் தோன்றி "நீ வேலை விட்டு அதனை வற்றச் செய்" என்று சொல்லி மறைந்தார். விழித்து எழுந்த வேந்தன் கண்ணுக்கு எட்டிய தூரம் கடல் நீரே இருந்தது கண்டு திகைத்து நின்றான். கனவில் வந்த சித்தனார் நகைத்துக் கொண்டே பேசினார்.

"கடலைக் கண்டு நடுங்குவது ஏன்? உன் கையில் இறைவன் தந்த வேல் இருக்கிறதே! என்ன செய்தாய்? அந்த வேலைக் கொண்டு இந்தக் கடலைச் சுடலைவனம் ஆக்கு" என்று சொன்னார்.

சித்தர் சொன்ன படியே இறைவன் தந்த வேலை எடுத்துக் கடல் நீரில் வீச அது சுருக்கென்று ஒலிசெய்து தாக்கக் கடல்நீர் வற்றிவிட்டது. சித்தர் எங்கே என்று திரும்பிப்பார்த்தான். அவர் சிவன்கோயிலுள் நுழைவதைப் பார்த்தான் மீனாட்சி சுந்தரர் ஆக அங்கிருந்து தனியாட்சி நடத்துவதைக் கண்டான். கண் மகிழ அக்காட்சியைக் கண்டு பின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தான்.

வருணன் தன் கருவம் அடங்கி அவன் காலடியில் விழுந்து மன்னிப்புப் பெற்றுச் சென்றான். ஒரு பகை நீங்கியது என்று உவகை அடைந்தான்; வருபகை நோக்கிக் காத்திருந்தான்.

## 14. இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம்

சேர சோழ, பாண்டியர் எனக் கூறப்படும் மூவேந்தர் ஆண்ட தமிழ்நாட்டில் மழை பெய்யாமல் வறகடம் உண்டாயிற்று. பஞ்சம் ஏற்படும் நிலையில் அதற்காக அஞ்சி என்ன செய்வது என்று தெரியாமல் பொதிகை மலையில் இருந்த அகத்திய முனிவரைத் தஞ்சம் அடைந்து தமிழ் வழங்கும் தண் தமிழ் நாட்டில் மழை இல்லாமல் வருந்துவதை அவ் அருந்தவ முனிவனிடம் அவர்கள் சொல்லி உதவ வேண்டினர்.

சோம சுந்தரர் விரும்பி உவக்கும் நாளாகிய சோம வார நாளில் அவ்விரதத்தை அனுஷ்டித்தால் ஆகாத காரியம் யாதும் இல்லை என்று கூறி அதனை ஏற்று நடத்தும் வழிமுறைகளை விவரமாகக் கூறினார். அவ் விரதத்தில் இந்திரன் உலகுக்குச் சென்று வேண்டியதைப் பெறலாம் என்று விளம்பினார்.

மதுரைக் குளத்தில் முழுகி எழுந்து சோமசுந்தரக் கடவுளை வழிபட்டு ஆகம விதிப்படி சோமவார விரதம் அனுட்டித்தனர். அதன் பயனாக அவர்கள் இந்திர உலகத் துக்கு விருந்தினராக அழைக்கப்பட்டனர். மூவரும் அவன் அனுப்பிய விமானத்தில் ஆகாய வழியாகச் சென்று தேவர் உலகத்தை அடைந்தனர்.

இந்திரன் இட்ட ஆசனங்களில் தான் காட்டிய குறிப் பின் படி சேரனும், சோழனும் அடக்கமாக அமர்ந்தனர். பாண்டியன் மட்டும் அவனுக்குச் சரிநிகர் சமானமாக அவன் வீற்றிருந்த சிங்காதனத்திலேயே பக்கத்தில் உட்கார்ந்ததால் மரியாதை குறைவாக அவன் நடந்து கொண்டதை இந்திரனால் பொறுக்க முடியவில்லை.

சேரனையும் சோழனையும் விளித்து உமக்கு வேண்டு வது யாது? என்று கேட்டான்.

மழை வேண்டியே அங்குத் தாம் வந்ததாக அறிவித் தனர். தழைக்கும் மழை பொழிவதாக என்று வரம் தந்து அவர்களை வழி அனுப்பி வைத்தான். பாண்டியனுக் குத் தக்க பாடம் கற்றுத் தர வேண்டுமென்று நினைத்து அவனை வெளிக்குப் புகழ்ந்து உள்ளுக்குள்ளே புழுங்கி ஒரு சூழ்ச்சி செய்தான்.

சுமக்க முடியாத பொன்னாரம் ஒன்று தந்து அவனை "மார்பில் அணிக" என்றான். அது தாங்க முடியாது அவன் தோள்கள் வீங்கும் என அவன் நினைத்தான். பூமாலை போல அதனை எளிதில் தாங்கித் தன் வலிமை ஓங்கக் காட்சி அளித்தான். அவன் திண்ணிய உரம் கண்டு இந்திரன் திகைப்பு அடைந்தான். ஆரம் பூண்ட பாண்டியன் என்னும் புகழ் மொழிக்கு உரியவன் என்று அவனைப் பாராட்டினான். வீரம் குன்றாது அவன் புகழ் மொழிக்குச் செவி சாய்க்காது புவி நோக்கித்திரும்பினான்.

சேர நாட்டிலும் சோழ நாட்டிலும் இந்திரனின் ஆணையால் செறிந்த மழை பெய்தது. பசும் புல்லும் பயிர்களும் விளைந்து அந்நாடுகள் வளம் கொழித்தன. பாண்டிய நாட்டில் மட்டும் மேகங்கள் மழை பெய்யாமல் விட்டன. நாடு வறட்சி அடைந்தது. அதைக்கண்டு

மருட்சி அடையாத உக்கிரமன் அக்கிரமம் செய்த மேகங்கள் அங்கு நிறை குடம் இடுப்பில் வைத்து நடக்கும் பெண்களைப் போல அவன் நாட்டு மலை முகடுகளில் மேய்ந்து கொண்டிருந்தவற்றை விலங்கிட்டு இழுத்துப் பிடித்துச் சிறை செய்தான்.

மேகத்தை ஏகாதபடி சிறை செய்த அச்செயல் இந்திரனின் சினத்தையும் செருக்கையும் தூண்டின. வேல் விடுத்து வருணனை வற்றச் செய்தான். சுமக்க முடியாத ஆரத்தைச் சுமந்து காட்டினான். தம் இச்சைப்படி திரிந்து செல்லும் மேகங்களைச் சிறையிட்டுக் கொச்சைப் படுத்தி விட்டான்; இவன் சாமானியன் அல்லன்; ஏமாளியும் அல்லன். அவனை நேரில் சென்று போரில் வெல்ல வேண்டும் என்று படைகள் திரட்டிப் பார் நோக்கி வந்தான்.

பாண்டிய நாட்டில் அவன் உக்கிரமனைச் சூழ அவன் வக்கிரம் கொண்டு யானை மீது அமர்ந்து சேனைகளைச் செலுத்தி வான் வேந்தனை வளைத்துவாட்டினான்; சூரிய அம்பினை ஏவ உக்கிரன் சந்திர அம்பில் எதிர்த்தான். சிங்க அத்திரத்தை விடுக்கச் சிம்புள் அத்திரத்தில் தடுத்தான். மோகாத்திரத்தை ஏவ அவன் ஞானாத்திரத்தை ஏவினான். விற்போர் நீங்கி மற்போர் செய்து தடுப்போர் இன்றி மண்ணில் உருண்டனர். இந்திரன் குலிசப்படை எடுத்துக் குனிந்து வீச அவன் சிவன் தந்த வளை கொண்டு அவன் தலை முடியில் தாக்கினான். தலை தப்பியது; முடி சிதறியது; தலையைத் தொடாமல் அவன் தலைமையை மட்டும் அது போக்கியது; உயிர் தப்பினால் போதும் என்று உயரப் பறந்து விண்ணுலகு அடைந்தான். அங்கிருந்து தூது அனுப்பி ஓலை எழுதி மேகங்களை விடுதலை செய்யுமாறு கேட்டுக் கொண்டான்.

பயன்படாத அம்மேங்களை விடுவதில்லை என்று உறுதியாக இருந்தான்; மழை தருவதாக வாக்குறுதி தந்தால் அவற்றை விடுவிப்பதாகக் கூறினான். தேவர் தலைவனுக்குப் பிணையாக வார்த்தை தவறாத வேளாளன் ஒருவன் குறுக்கே நின்றான்; தாம் மழை தராவிட்டால் தக்க தண்டனை அடைவதாக இந்திரன் உறுதி தந்ததால் மேகங்களை அவிழ்த்துவிட்டான்; அவை மழையைக் கவிழ்த்துக் கொட்டின. அதுமுதல் மாதம் மும்மாரி பெய்து நாடு வளம் பெற அவை செய்தன.

## 15. மேருவைச் செண்டால் அடித்த படலம்

அகத்திய முனிவர் அறிவித்தபடி திங்கள் நாள் விரதத்தை விடாமல் தொடர்ந்து அனுஷ்டித்து வந்தமையால் மங்காத செல்வம் பெற்று உக்கிர பாண்டியன் வாழ்ந்து வந்தான்; காந்திமதியின் காதல் வாழ்க்கையில் வீரபாண்டியன் என்ற நன்மகனைப் பெற்றான். அவன் வளர்பிறை போல வளர்ந்து கலைகள் பலவும் கற்றுப் பூரண நிலவு போல முகப்பொலிவோடு விளங்கினான். இவ்வாறு வாழும் நாளில் நிலை திரிந்து பருவ மழை பெய்யாது நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது; கோள்கள் சூரியனை நோக்கி நிற்பதால் ஓர் ஆண்டுக்கு மழை பெய்யாது என்று சோதிடர்கள் தாள்கள் கொண்டு அவனுக்கு அறிவித்து வேதனை உண்டாக்கினர்.

சோதனை தந்த வேதத் தலைவனைத் தன் ஏதங்களை நீக்குமாறு வேண்டினான். காது கொடுத்துக் கேட்ட கடவுள் அவன் கண்குளிரச் சித்தராய்க் கனவில் வந்து விரும்பியதைப் பெற வழி காட்டினார்.

மழை வளம் குறைந்ததால் தானியங்கள் அருகி விட்டன; பொன்னையும் மணிகளையும் உயர் பண்டங்

களையும் விற்று நாட்டு மக்கள் ஓடும் கையுமாக இருக்கும் நிலை அடைந்தனர்; குன்று போல் குவிந்திருந்த செல்வம் மணல்போல் கரைந்துவிட்டதால் இழந்த செல்வம் ஈட்ட வழியில்லாமல் வகையில்லாமல் விழித்தனர்.

மழை பெய்தால் அவர்கள் பசியற்று வாழ முடியுமே யன்றி வசியும் வளமும் பெற்று வாழ முடியாது. அதனால் வட புலத்தில் மேருமலையில் பொதிந்து கிடக்கும் பொன்னையும் உயர் மணிகளையும் மற்றும் வேண்டும் பொருள்களையும் வேண்டிய அளவு எடுத்து வரும்படி சித்தர் கனவில் கூறினார்.

அடியாத மாடு படியாது; அதனால் செண்டு கொண்டு அதன் சிகரத்தை அடித்தால்தான் கரம்குவித்துவேண்டியன நல்கும் என்று சொல்லி மறைந்தார். ''உன் ஆணைக்கு அடி பணியும் மேருமலையில் தேவையானவற்றை எடுத்து வருக! மறுபடியும் அதை மூடி வைத்து உன் பொறியும் குறியும் பொறித்து விடுக'' என்றும் கூறினார்.

உடனே உக்கிர பாண்டியன் உறக்கத்திலிருந்து விழித்து எழுந்து நித்திய கருமங்களை முடித்துக் கொண்டு நிமலனாகிய சோம சுந்தரக் கடவுளை வழிபட்டு நால்வகைச் சேனையோடு நான்கு வேதம் கற்ற வேதியர் வாழ்த்தி அனுப்பத் தேர் ஏறி வடநாடு புறப்பட்டான். பாண்டிய நாட்டையும் சோழ நாட்டையும் வேங்கடத்தை யும் கருநாடகம், மாளவம், விராடம், மத்தியதேசம் கடந்து காசியை அடைந்தான். கங்கையில் முழுகிக் காசி விசுவநாதனை வழிபட்டுப் பின் குமரிக்கண்டத்தையும் பாரத கண்டத்தையும் கடந்து இமயத்தை அடைந்தான்; கிம்புருடம் ஏமகூடம், அரிவருடம், நிடதமலை, இளாவிருது வருடம் முதலிய இடங்களைக் கடந்து மேருமலையை அடைந்தான்.

படைகளை ஒரு புறம் நிறுத்தி விட்டுத் தான் மட்டும் தனியனாய் நின்று மேருமலைத் தலைவனைநேரில்வரும்படி அழைத்தான். உச்சி நிமிர்ந்த தலைவணங்காத அக்காவலன் இவன் ஏவலை மதிக்கவில்லை. சிவன் அனுப்பிய சிறுவன் என்று சொல்லியும் அவன் புறக்கணித்தான். வேறு வழியில்லை; தான் கொண்டு வந்த செண்டைக் கொண்டு அவன் சிண்டை அடித்தான். அந்த மண்டு வெகுண்டு எழாமல் வேண்டுவது யாது என்றான். அடி அடித்தால் அம்மியும் நகரும் என்னும் பழமொழி உண்மையாயிற்று. இம்மியும் நகராத அவன் இமைப்பொழுதில் வந்து ஏவல் கேட்டான்.

பொற்குவியல் இருக்கும் இடத்தைக் காட்டு என்றான்: "மாமர நிழலில் உள்ள பாறையின் கீழ் புதையல் இருக்கிறது." என்று மேருமலைத் தலைவன் சொல்ல அவன் கூறியபடியே பாறையைத் தள்ளி வேண்டிய அளவு வாரி எடுத்துக் கொண்டு மறுபடியும் பாறை கொண்டு அவ்வழியை மறைத்து தன் பெயரையும் பெருமையையும் பொறித்து வந்தான்.

பொற்சுமையைத் தன் தோளிலும் மற்றுமுள்ள வாகனங்களிலும் வைத்துக் காவலர் சூழப் பாண்டிய நாடு கொண்டு வந்து சேர்த்தான். சோம சுந்தரக் கடவுளை வணங்கி நன்றி நவின்று, கொண்டு வந்த பொருளைச் சேர்த்துப் பொதித்து வைக்காமல் அறங்களுக்கும் பொருள் அற்றவர்களுக்கும் வாரி வழங்கினான். நகையில்லாத முகத்தைக் காணமுடிந்தது; ஆனால் நகை அணியாத பெண்களைக் காண முடியாமல் அணிகலன்கள் அணிந்திருந்தனர்

கோள்கள் உரிய இடத்தில் நிலை பெற நாள்கள் நன்மை பெற்றன. மழை உரிய காலத்தில் பெய்ய வறிய நிலை மாறியது. மன நிறைவு பெற்று அவன் தன் கடமை

முடிந்தது என்று கருதி ஆட்சியைத் தன் மகனின் கையில் ஒப்புவித்துப் பொறுப்புகளினின்று தப்புவித்துக் கொண்டான்; முதுமை தரும் ஓய்வு அவனுக்கு ஆறுதல் அளித்தது. உலக வாழ்வில் பற்று நீங்கி இறைத் திருவடிகளில் சேர்ந்து இறைவனோடு இரண்டறக் கலந்தான்.

## 16. வேதத்துக்குப் பொருள் அருளிச் செய்த படலம்

வேதம் என்ற சொல் ''வித்யா'' என்ற பொருளுடையது. ஞானம் தரும் நூலே வேதம் எனப்படுகிறது. கிருதயுகமே இதன் தொடக்ககாலம் என்பர். அக் காலத்தில் சிவனின் வாக்கினின்று பிரணவம் தோன்றிற்று. அதனின்றே வேதங்கள் எல்லாம் தோன்றின என்று கூறப்படுகிறது. எனவே வேதம் என்பது இறைவன் அருளிச் செய்தது என்ற கருத்து நிலவியது.

நைமி சாரணியம் என்னும் வனத்தில் வசித்து வந்த கண்ணுகர் கர்க்கர் முதலிய முனிவர்கள் வேதங்களின் பொருளை அறியாமலேயே அவற்றை ஓதிக்கொண்டு வந்தனர். அரபத்தர் என்னும் பெயருடைய வேதியர் ஒருவர் அவர்களைச் சந்தித்தார். வேதத்தின் பொருளை அறியாத அந்த வித்தகர்கள் அவ்வேதியரை அணுகி வேதத்தின் பொருளை யாரிடம் சென்று கேட்டு அறியலாம் என்று வினவினர்.

சோமசுந்தரக் கடவுள் வீற்றிருக்கும் மதுரையில் இந்திர விமானத்துக்குத் தெற்கே தட்சிணாமூர்த்தி வடிவில் இறைவன் தங்கி இருக்கிறார். அம்மூர்த்தியை வழிபட்டு விளக்கம் கேட்டால் வேதத்தின் பொருளை அறிய முடியும்'' என்று கூறி அவர்களுக்கு வழிகாட்டினார்.

அவர் கூறியபடியே அரபத்தர் என்ற அந்த வேதியரை அழைத்துக் கொண்டு மதுரைக்குச் சென்று தட்சிணா மூர்த்தியைத் தினந்தோறும் முறைப்படி வணங்கி வழி பட்டனர். தட்சிணாமூர்த்தி குருவடிவில் வந்து திருவாலவாய் உடையவராகிய சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியை அடைந்து அவர்களை அங்கே அமர வைத்து வேதத்தில் உட்பொருளை விளக்கிக் கூறினார்.

வேதம் உணர்த்தும் பொருள் கடவுள் என்பதாகும். அக்கடவுள் என்ற மெய்ப்பொருள் எல்லாமும் யாவையு மாகி எங்கும் நிறைந்து எல்லா உயிர்களிலும் பொருள் களிலும் நீக்கமற நிறைந்து சத்து சித்து ஆனந்தவடிவமாக நிற்பது என்று கூறப்பட்டது. சத்து என்பது உண்மை; சித்து என்பது அறிவு, ஆனந்தம் என்பது மகிழ்ச்சி. இம் மூன்றையும் அறிந்து உணர்வதே கடவுள் ஞானம் என்று உணர்த்தப்பட்டது. எனவே மானுடர்கள் நிலைத்த உண்மைகளை உணர முற்பட்டு ஒழுக்க மேம்பாட்டிற்கு வேண்டிய அறிவினைப் பெற்றுப் பேரின்ப வாழ்வு வாழ முற்படுவதே குறிக்கோளாகக் கொள்ள வேண்டும் என்பது உணர்த்தப்பட்டது.

வேதத்தின் உட்பொருளை விரித்துரைத்துத் தட்சிணா மூர்த்தியாக வந்த காட்சியைக் கண்டு அம்முனிவர்கள் தெளிவு பெற்றவராய் மதுரையை விட்டுத் தம் வனம் போய்ச் சேர்ந்தனர்.

## 17. மாணிக்கம் விற்ற படலம்

வீர பாண்டியன் காமக்கிழத்தியர் சிலரோடு உறவு கொண்டான்; அவர்கள் வயிற்றில் பிறந்த புதல்வர்கள் ஒழுங்காகவளர்க்கப்படவில்லை; அவர்கள் தீய ஒழுக்கங் களில் பழகி நற்பண்பிழந்து வெறுக்கத் தக்கவர் ஆயினர்.

கட்டிய மனைவிக்குப் புதல்வன் பிறக்காத குறை அவனை அரித்துக் கொண்டு வந்தது. வேள்விகளும் விரதங்களும் மேற்கொண்டு சோம சுந்தரக் கடவுளை வழிபட்டு தான் பயனாக இனிய மகன் ஒருவனைப் பெற்றான். அதன் ஐந்து வயது இருக்கும் போதே வீரபாண்டியன் புலி வேட்டைக்குச் சென்று தன் உயிர் துறந்தான். திக்கற்ற அக்குடும்பத்தில் கேட்பார் இன்மையின் மூத்த புதல்வர்கள் வீடு புகுந்து அரச முடியையும் ஆபரணங்களையும் ரத்தினங்களையும் முத்துக் குவியல்களையும் மூட்டை கட்டி எடுத்துக் கொண்டு போய்விட்டனர். வீரபாண்டியனுக்கு அந்தியக்கடன் அனைத்தையும் அவன் இளைய மகன் செய்து முடித்தான்.

பட்டத்துக்குரிய வயதுக்கு வந்ததும் அவனை அரசனாக்குவதற்கு அமைச்சர்களும் நகரமாந்தர்களும் முற்பட்டனர். அவனுக்கு மணிமுடி சூட்ட அணிகலன்கள் வைத்திருந்த பேரறையைத் திறந்து பார்த்தனர். அங்கிருந்த விலையுயர்ந்த பொருள்களும் மாணிக்கக் கற்களும் இரத்தின முடியும் கொள்ளை கொண்டு போய்விட்டதை அறிந்தார்கள். மறுபடியும் அவற்றை அவர்கள் எங்குப் போய்ச் சேகரிப்பது பாண்டிய மன்னர்கள் தொன்று தொட்டு ஈட்டிய செல்வம் அனைத்தும் பறிபோய்விட்டன. என் செய்வது? பொன் செய்யும் வழி அறிந்திலர்; மன்னன் செய்த மடமை இது.

பாண்டியன் மகன் சோமசுந்தரரிடம் முறையிடப் பரிவாரத்தோடு சென்றான்; அரண்மனையை விட்டு அடியெடுத்து வெளியே கால் வைத்ததும் மாணிக்க வணிகர் ஒருவர் கோணிப்பை நிறைய மாணிக்கமும் நவரத்தினமும் கொண்டு வந்து அவன்முன் காட்டினார்.

முடி செய்ய இவற்றைக் கொண்டு முடியும் என்று விவரித்தார். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது என்பது பழமொழி. தெய்வமே உண்மையில் அவர்களைத் தேடி வந்ததை அவர்கள் அறிந்திலர்.

''அரசன் முடி செய்வதற்கு உம்மிடம் இரத்தினக்கல் உளவோ'' என்று கேட்டனர்.

''உண்டு; அவற்றை வாங்க உம்மிடம் கோடி பொன் உளவோ'' என்று கேட்டார்.

''பொன் உண்டு மணி இல்லை'' என்றார்கள். சேர்ந்து அமைதல் அரிதுதான்.

அவ்வணிகர் கரிய நிறத் துண்டை விரித்து வைரமும் முத்தும் மணியும் மற்றும் உள்ள ஒளிமிக்க நவரத்தினமும் காட்டி வேண்டுவன எடுத்துக் கொள்ளுங்கள் என்றார்.

கிரீடத்திற்கு வேண்டிய் கற்களைப் பொறுக்கிக் கொண்டனர்.

சோமசுந்தரக் கடவுளிடம் இவற்றைக் காட்டி இதை அணியும் அரச மகன் ஆயுளும் ஆட்சியும் பெற்று மாட்சி பெறுக'' என்று கூறி வாழ்த்திக் கொடுத்தார். அவற்றிற்கு உரிய பொன்னை எடுத்துக் கொடுக்க முயன்ற போது மின்னல் வேகத்தில் அவ்வாணிபர் மறைந்து உமையொரு பாகனாகக் காட்சி அளித்துத்திருக்கோவிலில் மறைந்தார்.

வாணிகனாக வந்தசோமசுந்தரர் அவனுக்கு அபிடேக பாண்டியன் எனப் பெயரிடுமாறு கூறிச் சென்றார். அவ்வாறே அவனுக்கு அத்திருப்பெயரைச் சூட்டி அவனி ஆளும் வேந்தனாக ஆக்கினர்.

அவனும் சோமசுந்தரர் அருட்டிறம் போற்றி அனுதினமும் வழிபட்டுத் தூய நற்கருமங்கள் செய்து சான்றோனாகத் திகழ்ந்தான். பொறுப்பு மிக்க அரசனாக இருந்து ஆட்சி செய்து நீதியையும் ஒழுங்கையும் நிலை நாட்டினான். நவ மணிகளையும் நல்நிதிகளையும் கொள்ளை அடித்துச் சென்ற கள்ள மனம் படைத்த மூத்த சகோதரர்கள் இருக்குமிடம் தேடிப்பிடித்து வந்து அவர்கள் கையகம் வைத்திருந்த நகைகளையும் நிதிகளையும் கொண்டு வந்து சேர்த்தனர். பொருளிழந்த நிலையில் அருள்மிகுந்த இறைவன் மாணிக்கம் விற்று அவனை மாண்புடைய அரசனாக்கிய திறம் நினைத்து நெஞ்சில் அவரை நிறுத்தி வழிபட்டு ஆட்சி நடத்தினான்.

## 18. வருணன் விட்ட கடலை வற்றச் செய்த படலம்

சித்திரைத் திங்களில் சித்திரை நாளில் அபிடேக பாண்டியன் சோமசுந்தரக் கடவுளுக்குச் சிறப்புப் பூசனை செய்து நெய் முதல் சந்தனம் ஈறாக மணப்பொருள்களை அபிடேகம் செய்து பச்சைக் கர்ப்பூரம் கலந்த தண்ணீரைக் கொண்டு அபிடேகம் செய்தான். அவரைக் கர்ப்பூர சுந்தரர் என்னும்படி அபிடேகம் செய்து அழகுபடுத்தினார்.

அதே நாளில் வழக்கப்படி பூசை செய்து வரும் இந்திரன் இவன் செய்யும் பூசை முடியும் வரை காத்திருக்க வேண்டி இருந்தது. பின் தன் சொந்த நகர் திரும்பினான். தனக்கு ஏற்பட்ட அவமானத்தை எண்ணியவனாய்க் கவலை தோய்ந்த முகத்தோடு அவன் காட்சி தந்தான் வருணன் நடந்தது அறிந்து அக்கோயிலின் தலவிசேடம் யாது என்று கேட்டான். தனக்கு ஏற்பட்ட பழியையும்

வெள்ளை யானைக்கு ஏற்பட்ட இழிவையும் இறைவன் நீக்கினான் என்று கூறினான். அதற்கு வருணன் ''என் வயிற்று நோயை அந்த வைகை நதிக்காவலன் தீர்த்து வைப்பானா'' என்று கேட்டான்.

''பிறவி நோயைத் தீர்க்கும் பெருமான் ஆகிய அவனுக்கு வயிற்று நோயைத் தீர்ப்பது தானா முடியாது. அந்த வைத்தியநாதனை நீ சோதித்துப் பார்'' என்றான்.

மிரட்டியே எதையும் சாதிக்க முடியும் என்று நினைத்த வருணன் தன் ஏழு மேகங்களையும் ஏவி மழைபெய்யச் செய்து கடல் அலையை விளித்துப் பொங்கி எழுமாறு ஆணையிட்டான். மதுரை கடல் நீரில் கலங்கியது; மக்கள் உயிருக்குத் தப்பி ஓட உறைவிடம் தேடினர். பாண்டியன் சோம சுந்தரக் கடவுளிடம் சென்று கடல்கள் செய்யும் இடர்களை எடுத்து உரைத்தான்; 'அஞ்சற்க' என்று சொல்லித் தன் சடையில் மேகங்கள் நான்கினை அழைத்து ''நீவிர் நால்வரும் கடல் அலையை உறிஞ்சி வற்றச் செய்வீர்'' என்று ஆணையிட்டார்.

மெய்யன்பர்களின் எழுவகைப் பிறப்பையும் தீர்ப்பது போல ஏழுகடலில் நீர் முழுதும் வற்றும்படி செய்ய மறுபடியும் பாண்டிய நாடு பழைய நிலையை அடைந்தது. கடல் கோள் அங்குக் கால்கோள் கொள்ள முடியாமல் போயிற்று. இதெல்லாம் ஈசன் திருவிளையாடல் என்று அறிந்து உணர்ந்து மக்கள் எல்லை இல்லா மகிழ்ச்சி அடைந்தனர்.

## 19. நான் மாடக் கூடல் ஆன படலம்

கடல் வற்றிப் போனாலும் செயல் வற்றாத வருணன் ஒரு கை பார்த்து விடுவது என்று தீர்மானித்து ஏழு மேகங்களையும் அழைத்து' ''மதுரை அழிந்து போகும் வரை சூழ்ந்து பெய்க'' என்று கட்டளை இட்டான். மழை விடாது பெய்து மதுரையை நீர் சூழச்செய்து அவர்கள் வாழ்க்கையைச்சின்ன பின்னப்படுத்தியது. நகர மக்களும் நாட்டு அரசனும் சோமசுந்தரரை அணுகித் தம்மைக் காத்தருளுமாறு வேண்டினர்.

இறைவன் தன் முடி மீது தவழ்ந்து கிடந்த மேகங்கள் நான்கினை விளித்து ''மறுபடியும் நீர் சென்று நான்கு மாடங்களாக மதுரைக்கு மூடியாக அமைந்து தண்ணீர் கொட்டாதவாறு தடுக்கவேண்டும்'' என்றான். நான்கு மேகங்கள் மாடங்களாக அமைந்து அங்கு ஒரு சேரக் கூடிய தால் அந்நகருக்கு 'நான் மாடக்கூடல்' என்ற பெயரும் வழங்குவது ஆயிற்று.

மேகங்கள் நான்கைக் கொண்டு மதுரையைக் காத்தான். இடியும் மின்னலும் கொண்டு தாக்கிய போதும் ஒரு சொட்டுத் தண்ணீரும் உள் நுழையாமல் மேகங்கள் பாய் விரித்தது போலப் படிந்து காத்தன. கடல் ஏழும் முழுகி வயிறாரப் பருகி இங்கே வந்து கொட்டிய அவ்வளவு நீரும் மலைக்கற்களில் பெய்த அலைகள் ஆயின. உடற் பருத்துக் கறுத்து வந்த மேகங்கள் எல்லாம் மெலிந்து நலிந்து வெளுத்துவிட்டன. ஆணையை நிறைவேற்ற முடியாமல் புதுமணப் பெண்போல வெட்கித் தலை சாய்ந்து வருணன் முன் நின்றன. விதவைக் கோலத்தில் வந்த மேகங்களைக் கண்டு வருணனும் சினம் அடங்கி

வேறுவழி இன்றிச் சிவனிடம்வந்து சரண் அடைந்தான். தன் ஆணவத்தால் அறிவு கெட்டு இந்த அவல நிலைக்கு ஆளானதை வருணன் உணர்ந்து வானத்து வீதியில் சென்று ஈசனைத் தரிசித்து மன்னிக்கும்படி வேண்டினான்.

இரக்கமே உருவான இறைவன் அவனை மன்னித்து "உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினார். தான் மிரட்டித் தன் வயிற்று நோயைத் தீர்த்துக் கொள்ளலாம் எனக் கருதி அதனால் ஏழு மேகங்களை விரட்டி இங்கு அனுப்பியதாக உரைத்தான். சூலை நோய் தந்து நாவுக்கரசரை ஆட்கொண்ட சிவபெருமான் வருணனின் வயிற்று நோயைத் தீர்த்துக் கொடுத்தார். ஆணவம் நீங்கி அடக்கம் மேற்கொண்டு இறைவனிடம் விடைபெற்றுக் கொண்டு ஏனைய மேகங்களை விடுவித்துக்கொண்டு தன் கடலை இருப்பிடமாக அடைந்தான்.

## 20. எல்லாம் வல்ல சித்தர் ஆன படலம்

அபிடேக பாண்டியனுக்கும் அவன் நாட்டு மக்களுக்கும் வேண்டிய பொருளைத் தருவதற்காக இறைவன் எல்லாம் வல்ல சித்தராக உருக்கொண்டு வந்தார். வட்டமாகிய மயிர்ச் சடையும், 'நீறு பூசிய நெற்றியும் குண்டலம் தரித்த செவியும், புலித் தோல் ஆடையும், காலில் சிலம்பும் பாதுகையும் கொண்டு புன்முறுவல் பூத்த முகத்தினராய் அங்காடித் தெருக்களும் மாளிகைச் சந்திப்புகளும் தேர் வீதிகளும் செல்வாராயினர். ஓர் இடத்திலேயும் தங்க இருப்புச் கொள்ளாமல் விருப்பப்படியே திரிந்து சென்றார்.

முதியவரை இளைஞர் ஆக்கினார். ஆடவரை மகளிர் ஆக்கினார்; மலடியைக் கருஉயிர்க்கச் செய்தார்; ஊமை, குருடு, செவிடு, முடம் இப்பிணிகளைத் தீர்த்து வைத்தார்;

வெள்ளி செப்பு ஈயம் பித்தளை இவற்றைச் செம்போன் ஆக்கினார். செல்வரை ஏழையாக்கினார்; ஏழையர் செல்வர் ஆயினர். எட்டி மரம் இனிய காய்களைத் தரச் செய்தார். கல்லாதவரைக் கற்றவர் ஆக்கினார்; இல்லாதவரை வள்ளல்கள் ஆக்கினார். எல்லாம் தலைகீழாகச் செய்து காட்டினார்.

பாண்டிய நாட்டு மக்கள் இப்புதுமைகளை விழித்த கண் மூடாமல் பார்த்துத் திகைப்படைத்தனர். அவரவர் தாம் விரும்பிய பொருளைச் சித்தர்பால் கேட்டுப் பெற்றனர். கிழவர்கள் வாலிபர்கள் ஆயினர்; கிழவிகள் குமரிகள் ஆயினர்; மூப்பை ஒழித்துவிட்டு இளமையாக்கினார்; பேசாத குழந்தைகளைப் பேசவைத்தார். நோயாளிகள் நலம் பெற்று நல்வாழ்வு பெற்றனர்.

இந்த அதிசயத்தை அரசனுக்கு அறிவித்தனர்; அரசன் ஒற்றர்களை அனுப்பிச் சித்தரை அழைத்து வரும்படி ஏவினான். சென்றவர்கள் திரும்பவே இல்லை; அதே போல அமைச்சர்களை அனுப்பி வைத்தான்; அவர்களும் ஒரு சிலர் திரும்பவில்லை; கற்றவரை அனுப்பி அரசன் அழைப்பதாகச் சொல்லி அனுப்பினான்.

''நாமார்க்கும் குடியல்லோம்'' என்று சொல்லி, வர இயலாது என்று சொல்லி அனுப்பினார். சென்ற அமைச்சர் சிலர் திரும்பி வந்து அரசனிடம் சித்தரின் விசித்திரமான போக்குகளை எடுத்துக் கூறினர் ஆற்றல்மிகு அறிஞராகிய சித்தரைத் தாம் ஒன்றும் செய்ய முடியாது என்று அரசன் அடக்கத்தை மேற்கொண்டான். த்தரின் வருகையால் மக்கள் நன்மை பெற்றதை னால் உணர முடிந்தது.

# 21. கல்லானைக்குக் கரும்பு அருத்திய படலம்

அபிடேக பாண்டியன் சித்தரை அவமதித்துவிட்டோமோ என்று கதி கலங்கினான். தானே சென்று அவரைக் காண அரண்மனை விட்டு வெளியேறி வந்தான்; இதனை அறிந்த சிவபெருமான் இந்திர விமானத்துக்கு வடமேற்குத் திசையில் வந்தருளினார்.

அன்று பொங்கல் திருநாள் ஆகையால் மக்கள் மகிழ்ச்சி பொங்க எங்கும் குழுமி இருந்தனர். அவரை மொய்த்துக் கொண்டிருந்த ஊர் மக்களை விலகச் செய்து அரசன் சித்தரை அணுகினான்.

''நீர் யார்? ஊர் எது? சொந்த நாடு யாது? உறவினர் யார்? இங்கு வந்தது எதற்காக? என்று வரிசையாகக் கேட்டான்.

''யாதும் ஊரே யாவரும் கேளிர்; எமக்கு எந்த நாடும் சொந்த நாடே; காசி நகரத்தில் தங்குவது வழக்கம்; யாசித்து வாழ்க்கை நடத்துவது எங்கள் தொழில்; சித்து விளையாடி மக்களை மகிழ்விப்பது எங்கள் திறமை; வேதம் முதலிய கற்றவன் யான்; ஏதம் எது வந்தாலும் நீக்கித் தருவோம்; எல்லாம் வல்ல சித்தர் என்று என்னை அழைப்பார்கள்'' என்றார்.

பாண்டியன் இவருடைய இறுமாப்பைச் சிதற அடிப்பேன் என்று சொல்லிக் கொண்டான்; அதற்குத் தக்க உபாயம் தேடிக் கொண்டிருந்தான்; அந்தச் சமயத்தில் கழனியிலிருந்து கரும்பு ஒன்றைக் களமன் ஒருவன் கொண்டு வந்து தந்தான்; கமுகு போன்று பருத்துத் திரண்டகணுக்களை உடைய அந்தக் கரும்பைப் பக்கத்தில் விமானத்தில் இருந்த கல்லானை அடுத்து

செய்ய முடியுமா என்று கேட்டான்

ஆழம் தெரியாமல் காலை விட்டவன் கதியாயிற்று. வேழத்திடம் தந்த கரும்பை உயிர் பெற்று எழுந்து கடித்துத் தின்று அதை முறுக்கி வீழ்த்தியது. மதம் கொண்ட யானையாக அது மதர்த்து எழுந்தது. சித்தரின் திருக்குறிப்பை அறிந்து கல்யானை பாண்டியனின் முத்து மாலையை இழுத்துப் பறித்துக் கொண்டது. கஞ்சுக மாக்கள் கைத்தடி கொண்டு துதிக்கை உடைய யானையைத் தாக்க ஓங்கினர்; அது முத்து மாலையைச் சத்தம் செய்யாமல் வாயில் போட்டுக் கொண்டது; பாண்டியன் சினந்து சித்தரை உருத்துப் பார்த்தான். காவலனின் குறிப்பு அறிந்த ஏவலர் சிலர் சித்தரை அடிக்க ஓங்கிய கை அசையாமல் நின்றுவிட்டது. அவர்கள் அடியெடுத்து நகர்த்த மாட்டாமல் பதுமை என நின்றனர்; இந்தப் புதுமை கண்டு விதிர் விதிர்ப்பை அடைந்தனர்; அன்பும், அச்சமும் தோன்றத் துன்பம் தந்தமைக்கு வருந்திச் சித்தரிடம் மன்னிப்புக் கேட்டான்.

அவர் அவனைப் பார்த்துச் சிரித்து ''இவை எல்லாம் எம் சித்து விளையாடல்; உம்மோடு பரிகசித்து விளையாட வந்தோம். நீ வேண்டுவது கேள்'' என்றார். யானை தான் விழுங்கிய முத்துமாலையைத் திருப்பி அவன் கையில் கொடுத்தது.

பொன்னும் பொருளும் மானுடர் முயன்று பெறுவன; கல்வி கற்று அறிவது; ஆட்சி வீரத்தால் விளைவது; செல்வம் தொடர்ந்து வருவது; எல்லாம் உடைய எனக்குக் கட்டி அணைக்க மனைவி உண்டு; என்னை எட்டி

உதைக்கக் குழந்தைகள் இல்லை. மக்கட் செல்வம் தந்து என் துக்கத்தைப் போக்குவீர்'' என்று கேட்டுக் கொண்டான்.

சித்தர் அருளால் நன் மகனைப் பெற்று விக்கிரமன் எனப் பெயரிட்டு அவனைப் பெரியோன் ஆக்கி ஆட்சியை ஒப்படைத்தான். பற்றுகள் நீங்கிப் பரமன் திருவடியில் விழுந்து சிவசக்தியோடு தானும் கலந்து முத்தியை அடைந்தான்.

## 22. யானை எய்த படலம்

சோம சுந்தரருக்கு அமைத்த இந்திர விமானத்துக்கு அருகே வடக்கே அழகிய ஒரு கோயில் கட்டிச் சித்தருக்கு உருவச் சிலை வைத்து விக்கிரம பாண்டியன் கிரமமாக பூஜித்து வந்தான். சைவம் தழைக்கச் சிவன் கோயில் திருப்பணிகள் செய்து வந்தான்.

அவன் வாழ்ந்த காலத்தில் சோழ நாட்டு அரசன் சமண சமயத்தைத் தழுவி இருந்தான்; அங்கிருந்த சமணர் அரசனைத் தூண்டி விட்டுப் பாண்டியனை அழிக்க வேண்டுதல் விடுத்தனர். அரசியல் காரணம் இன்றிப் போர் தொடுப்பது முறையன்று என எண்ணி அவர்களையே மந்திர சக்தியால் அவனை அழிக்கத் துணையாக்கினான். அழிவு தரும் வேள்வி ஒன்றைச் செய்து அதில் முரட்டு யானை ஒன்றைத் தோற்றுவித்தனர். இதனை 'அபிசார ஓமம்'' என்பர். வேள்வியிலிருந்து உருத்து எழுந்த யானை படைத்தவர்கள் ஏவலைக் கேட்டுப் பாண்டிய நாடு நோக்கிப் பாய்ந்தது.

மதம் கொண்ட யானை ஊழித்தீயெனப் புறப்பட்டு வந்தது. அதன் வேகத்தையும் சீற்றத்தையும் கண்டு பாண்டியனின் படையினர் அஞ்சி அதனை எதிர்க்க முடியாது என்பதால்ஓடி ஒளித்தனர். பாண்டியனிடம் பதை பதைப்போடு இச் செய்தியைப் பகர்ந்தனர். விக்கிரமன் தன்னால் அதனை எதிர்த்து ஒழிக்க முடியாது என்பதை அறிந்தவனாய்க் காத்தற் கடவுளாகிய சோமசுந்தரரிடம் சென்று முறையிட்டான்.

அவன் குறை கேட்ட இறைவன் தான் அதனைக் கொல்வதற்கு ஓர் உதவி செய்ய வேண்டும்; உயர இருந்து அம்பு எய்வதற்கு ஏற்றபடி, அட்டாலை மண்டபம்' ஒன்று கட்டித் தரக் கேட்டான். பதினாறு தூண்களை உடைய அம்மண்டபம் தற்காப்புடையதாக அமைந்தது.

வில்லைக் கையில் ஏந்தி அம்பறாத்தூணியை முதுகில் தாங்கிக் கரு நிறமுள்ள காளைப்பருவத்து வில் வீரனாக இறைவன் வந்து தோன்றி அம்மண்டபத்தின் மீது ஏறி யானை வரும் திக்கில் நின்று நரசிங்க அத்திரத்தை யானை மீது தொடுத்தார். அது இரணியனைப் போலக் கதறிக் கொண்டு விழுந்தது. அந்த நரசிம்ம வடிவத்தோடு அந்த அம்பு அங்கு நிலைத்து விட்டது. முனிவர்கள் பலர் வந்து வழிபட்டனர். பிரகலாதனும் அங்குவந்து தவம் செய்து மேன்மைகளைப் பெற்றான் என்று கூறப்படுகிறது.

## 23. விருத்த குமார பாலரான படலம்

விக்கிரமன் ஆட்சி செய்து வரும் நாளில் மதுரையில் விருபாக்கன் என்னும் வேதியன் ஒருவன் இருந்தான். அவன் மனைவி சுபவிரதை; இருவருக்கும் நெடுங்காலம் குழந்தைகளின்றிப் பின் தான தருமங்கள் செய்யு

நிதானமாக ஒரு குழந்தை பிறந்தது. கவுரி என்பது அவள் பெயர்; இளம் வயது முதல் சிவனிடம் சிந்தை கொண்டு சைவ நெறியினைப் போற்றி வழிபட்டு வந்தாள். மணப்பருவம் வந்தது. மனத்துக்கு உகந்த மணாளன் அமையவில்லை; அதனால் பெற்றோர் வருந்தி இருந்தனர்.

வேதியர் குலத்து இளைஞன் ஒருவன் இவர்கள் வீட்டுக்கு விருந்தினனாக வந்தான். கோத்திரம் குலம் விசாரித்துச் சாத்திரப்படி அவனுக்கு மணம் முடிப்பது என்று நிச்சயித்தனர். மதம் மட்டும் மாறுபட்டிருந்தது; வைணவ குலத்தைச் சார்ந்தவன்; இம்முரண்பாடு ஒத்துப் போவதாக இல்லை; எனினும் நிச்சயித்த அவனை உதறித் தள்ள இயலவில்லை.

இருவருக்கும் திருமணம் நடந்தது; வாழ்க்கைப்பட்ட இடத்தில் சிக்கல் ஏற்பட்டது; அவளை அவர்கள் மதித்து நடத்தவில்லை. வீட்டை விட்டு வெளியேறும் போது அவள் சமையல் கட்டுக்குப் போகாதபடி தடுக்கப் பேரறையில் விட்டுப் பூட்டி வைத்தனர். அவள் கையால் சமைக்கக் கூடாது என்பது அவர்கள் விதி.

சிவனடியாருக்குச் சோறு போட்டுப் பழகிய அவள் இப்பொழுது வெறும் சடமாக அறையில் கிடப்பதை வெறுத்தாள். அவள் விழிகள் சிவனடியார் யாராவது வருவார்களா என்று தேடின. எதிர்பார்த்தபடி வயது முதிர்ந்த சிவனடியார் ஒருவர் பசியால் இளைத்து இவள் வீட்டுப்படியில் காலடி எடுத்து வைத்தார்.

வெளிக்கதவைத் திறந்து அவரை உள்ளே விட்டாள்.

சமைக்க முடியாதபடி பூட்டும் தாளும் அவளைத் தடுத்து நிறுத்தின. சிவனடியார் இதை உணர்ந்து

அவர் ஒரு பார்வை பார்த்தார். தாளும் பூட்டும் தாமாகத் திறந்து கொண்டன; உள்ளே சென்று அடுப்புப் பற்ற வைத்தாள். சோறு சமைத்துக் கறியும் செய்தாள். இலை போட்டுச் சோறு பரிமாறி அவர் பசியையும் போக்கினாள்

வள்ளியை மணக்கவந்த முருகன் போல முதிய தோற்றத்தில் வந்த சிவனடியார் காளைப்பருவத்தில் அவள் கண்முன் நின்றார்; கற்பிற் சிறந்த அப்பொற்புடை நங்கை ஆடவன் ஒருவன் தனித்துத் தன் முன் நிற்பதைக் கண்டு அஞ்சினாள்; வியர்த்தாள்; ஒரு புறம் ஒதுங்கினாள்.

வெளியூருக்குச் சென்றிருந்த அவள் மாமனும் மாமியும் கணவனும் அலுத்துக் களைத்து வீட்டுக்குள் நுழைந்தனர்.

அவள் அவப்பெயருக்கு ஆளாக வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. அந்நியன் ஒருவனோடு அவள் பேசிக் கொண்டிருந்தாள். அவள் நிலை அதோ கதி தான்; பால கனாக அவர்கள் முன் தாவத் தொடங்கினார். முதியவ ராக வந்தவர் காளைப்பருவத்தோடு காட்சி அளித்துக் குழந்தையாகத் தவழ்வதைக் கண்டு கவுரி வியப் படைந்தாள்; இறைவன் திருவிளையாடல் இது என்பது அவள் அறிந்து கொண்டாள்.

''பக்கத்து வீட்டுத் தத்தனுடைய குழந்தை அது; பார்த்துச் கொள்ளச் சொல்லிச் சென்றார்கள்'' என்று பக்குவமாக விடை சொன்னாள். எனினும் அக்குழந்தை சைவ வீட்டுப் பிள்ளை என்பதால் அவர்கள் கடிந்து கொண்டனர். ''தூக்கி வெளியே எறி'' என்று சொல்லி அக்குழந்தையை வெளியே போட்டார்கள். அவளையும் வீட்டைவிட்டு வெளியே போகச் சொன்னார்கள்.

சமய வெறுப்பின் அடிப்படையில் மிருகத்தனமாக நடந்து கொண்டதைக் கண்டு அவள் வருந்தினாள். குழந்தை விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்டது; அதனைச் சமய அடிப்படையில் அவர்கள் வெறுத்ததை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

குழந்தையோடு வெளியே நடந்தாள். சோமசுந்தரக் கடவுளிடம் முறையிட்டு அழுதாள்; உமையாரிடத்து அதிக பக்தி இளமை முதல் கொண்டவளாயிற்று; மந்திரம் செபித்தாள்; அதற்கு மேல் அவளைச் சிவனார் சோதிக்க விரும்பவில்லை. அவள் காணும்போதே குழந்தை உருவம் மாறிப் பரம் பொருளாகிய சிவனார் பார்வதியோடு காட்சியளித்தார். இக்காட்சியைப் பாண்டிய நாட்டில் உள்ளவர்களும் கண்டு பேரானந்தம் அடைந்தனர்.

## 24. மாறி யாடின படலம்

விக்கிரம பாண்டியனுக்குப் பின் அவன் மகன் இராசசேகர பாண்டியன் ஆட்சிக்கு வந்தான். அவன் கலைகள் அறுபத்தி நான்கினையும் கற்க வேண்டியவன்; பரதத்தை ஒழித்து ஏனையவற்றை மட்டும் கற்றவனாக விளங்கினான். இறைவன் திருக்கூத்துக் கண்டு அப் பரதத்தைக் கற்பது மரியாதைக் குறைவு என்று விட்டு விட்டான்; அக்கலை பரமனுக்கே உரியது; பாமரனாகிய தான் கற்பது தவறு என்று பரதம் ஒன்று மட்டும் பயிலாத வனாக இருந்தான்.

அவன் வாழ்ந்த காலத்தில் சோழ நாட்டு அரசன் கரிகாற் சோழன் பரதத்தையும் கற்றிருந்தான். அவன் நாட்டில் இருந்து வந்த புலவன் ஒருவன் அதை ஒரு குறை யாகச் சுட்டிக் காட்டினான். ''சோழன் அறுபத்து நான்கு

கலைகளைக் கற்று இருக்கிறான். நீ ஒன்று குறைவாகக் கற்று இருக்கிறாய். பரதம் உனக்கு வராதா?'' என்று தூண்டிவிட்டான்.

மானம் மிக்க அவன் அச்சொற்களைத் தாங்கிக் கொள்ளமுடியவில்லை; வயது ஆனபோதும் பொருட்படுத்தாமல் தக்க ஆசிரியர்களைக் கொண்டு உடம்பை வளைத்து அப்புதிய கலையைக் கற்கத் தொடங்கினான்; அந்த அற்புதக் கலை கற்க உடல் உழைப்பும் பயிற்சியும் தேவை என்பதை உணர்ந்தான்; அவன் உடம்பு களைத்து நோதலை அறிந்தான்; உடம்பெல்லாம் வலி எடுத்தது.

இறைவன் பரதம் ஆடும்போது வலக் காலில் நின்று ஆடுவதைக்கண்டு இவ்வாறே காலை மாற்றிச் கொள்ளாமல் ஆடினால் அவருக்கு எவ்வளவு வருத்தம் ஏற்படும் என்று நினைத்துப்பார்த்து இடக் காலைத் தூக்கி ஆடும் நிலை மாறி வலதுக் காலைத் தூக்கி ஆட வேண்டும் என்று விரும்பினான்; கால் மாறி ஆட வேண்டும் என்று தீவிரமாக நினைத்தான் இறைவனிடம் வேண்டினான்.

அவ்வாறு மாற்றி ஆடாவிட்டால் தன் உயிரை மாய்த்துக் கொள்வதாக மருட்டினான். வாளைத் தயாராகக் கையகத்து வைத்துக் கொண்டான். அன்பன் தொடர்ந்து தரும் வேண்டுகோளைத் தள்ள முடியாமல் இறைவனும் கால்மாறி ஆடிக் காட்டினார்.

இவ்வாறு இந்த நிலையிலேயே அடியவர்க்குக் காட்சி அருள வேண்டும் என்று வேண்டிக் கொண்டான். அது முதல் இன்று வரையும் மாறியாடிய கோலத்திலேயே இறைவன் காட்சி தந்து கொண்டிருக்கிறார்.

## 25. பழியஞ்சின படலம்

இராசசேகரனுக்குப்பின் அவன் மகன் குலோத்துங்க பாண்டியன் ஆட்சிக்கு வந்தான். அவன் ஆட்சி செய்யும் நாளில் இந்த அற்புத நிகழ்ச்சி நடந்தது. திருப்புத்தூரி லிருந்து ஒரு பார்ப்பனன் தன் மனைவியோடு மதுரையை நோக்கிக் காட்டு வழியே வந்து கொண்டிருந்தான். வரும் வழியில் நீர் வேட்கையால் வருந்தும் தன் மனைவியையும் கைக்குழந்தையையும் ஆலமரத்தின் நிழலில் உட்கார வைத்து விட்டுத் தண்ணீர் கொண்டு வரச் சென்றான்.

அந்த ஆலமரத்தினின்று ஓர் அம்பு கீழே விழுந்து அவள் வயிற்றில் பாய்ந்து உதிரம் ஒழுகச் செய்து அவள் இன்னுயிரைப் பிரித்து விட்டது. தண்ணீர் எடுக்கச் சென்றவன் திரும்பி வந்து பார்க்கும் போது இந்தக் கோர மரணத்தைக் கண்டு அதிர்ச்சியும் அவலமும் அடைந்தான்.

அதே ஆலமரத்தில் பறவை வேட்டையாடும் வேடுவன் ஒருவன் அலுத்துக் களைத்து நிழலுக்கு ஒதுங்கினான். அவன் கையில் வில்லும் அம்பும் இருக்கக் கண்டு வேறு ஓர் சொல்லும் சொல்லாமல் அவனை இழுத்துக் கொண்டு அரண்மனை வாயிலில் நிறுத்தினான்; அழுகின்ற குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு செத்துக் கிடந்த பார்ப்பினியை முதுகில் சுமந்து கொண்டு வேடுவனோடு அரண்மனை வந்து சேர்ந்தான்.

''கொலை, கொலை'' என்று கத்தி அரண்மனையில் ஓர் அதிர்ச்சியை ஏற்படுத்தினான். ஒரு பாவமும் அறியாத தன் மனைவியைக் காரணம் இல்லாமல் அந்த வேடுவன் அம்பு எய்து அழித்துவிட்டான் என்றும், தானும் சேயும் அனாதைகள் ஆக்கப்பட்டு விட்டனர் என்றும் முறையிட்டான்.

வேடுவனைப்பிடித்துக் கட்டி அடித்து உண்மையைக் கக்கச் சாட்டையால் அடித்தனர். "சோமசுந்தரன் சாட்சியாகத் தான் தவறு செய்யவில்லை" என்று வற்புறுத்திக் கூறினான். அதற்கு மேல் அவனைத் துன்புறுத்துவதை நிறுத்தினர். அவன் கையிலோ வில்லுண்டு; கொலையுண்டு கிடப்பதைப் பார்ப்பனன் கண்டு வந்து சொல்கிறான்; எது உண்மை என்று அறிய முடியாத நிலையில் அரசன் நீதி வழங்க முடியாமல் வேதனை அடைந்தான்.

ஈமச்சடங்கு செய்து விட்டு மறுபடியும் வரச் சொல்லி அப்பார்ப்பனனை அனுப்பிவைத்தான். வேடனைவிடுவித்துப் பின் நேரே சோமசுந்தரர் திருக்கோயில் அடைந்து இறைவனிடம் விண்ணப்பித்து விடை காண விழைந்தான்.

"யார் இந்தக் கொலை செய்தது என்று தெரியாமல் கவலையுறுகின்றேன்; மதுரை எல்லையிலே இந்தத் தொல்லை வந்து சேர்ந்திருக்கிறது; உன் அருள் இருக்கும் போது இந்த மருட்சி எப்படி நிகழ்ந்தது? தெரியவில்லையே; உண்மை காண விழைகின்றேன்; ஒண்மை வடிவான பொருளே! வழிகாட்டி எனக்கு நன்மை செய்து அருள்வாய் என்று கேட்டுக் கொண்டான். அப்பொழுது ஆகாயத்திலிருந்து ஓர் அசரீரி தோன்றி, 'தென்னவனே' நீ இந்நகர்ப் புறத்து உள்ள செட்டித் தெருவில் இன்றிரவு ஒரு திருமணம் நடக்கிறது. அந்தப் பார்ப்பனனோடு அங்கு வந்து சேர்க, உனக்கு உண்மை உணர்த்துகிறேன்" என்று கூறியது; அத்திருவாக்கைக் கேட்டு அவ்வாறே தானும் பார்ப்பனனும் அம்மண வீட்டிற்குச் சென்று ஒரு புறம் ஒதுங்கி நின்றனர்; மன்னன் மாறு வேடத்தில் அங்கு வந்ததால் அவனை மற்றவர்கள் அடையாளம் கண்டு கொள்ளமுடியவில்லை.

இவர்கள் இருவர் கண்ணுக்கு மட்டும் காலபாசத்தோடு எம தூதர் அங்கு வந்து காத்திருப்பது தெரிந்தது. "அடே இந்த மணமகன் உயிரை எப்படிப் பிடிப்பது? அங்கலக்ஷணத்தோடு தங்க நிறமுடைய இவ் தெரிந்தது. எப்படி உயிர் கவ்வுவது? நோய் நொடி இல்லாதவனைப் பிடி என்றால் எப்படி முடியும்?" என்று கேட்டான்.

"ஆள் அழகனா இளைஞனா என்பதை நாம் ஆராய வேண்டியது இல்லை. கணவனையும் கதறவிட்டுப் பார்ப்பனியின் உயிரைக் கவர்ந்தோமே நாம் அப்பொழுது இரக்கப்பட்டோமா! கணக்கு முடிந்தது; பிணக்குக் கொள்ள முடியாது; நம் கடமையைச் செய்துதான் தீர வேண்டும்; வழிதானா இல்லை; என்றோ தொத்திக் கொண்டிருந்த பழைய அம்பினைக் காற்றில் அசைத்து அவள் வயிற்றில் பாய்ச்சவில்லையா! நினைத்தால் எதையும் சாதிக்க முடியும். மரணம் என்பது பேதம் பார்ப்பதில்லை. இளைஞனா முதியனா என்றோ நல்லவனா கெட்டவனா என்றோ ஆண்டியா அரசனா என்றோ பேதம் பார்ப்பதில்லை. உயிரைப் போக்க எவ்வளவோ வியாதிகளை உற்பத்தி செய்து கொண்டு இருக்கிறோம். வயித்தியர்களுக்கு அகப்படாத புதிய நோய்களைப் படைப்பது நாம் தானே; துரிதமாகச் செல்லும் ஊர்திகளை படைத்ததும் நாம் தானே;விதிஎன்று வந்து விட்டால் எந்தச் சதி செய்தாவது உயிரைப் போக்கி விட முடியும். அதோ கட்டி வைத்த பசுமாட்டைப் பார்; அதனை முட்டி வைக்கத் தூண்டினால் அதன் அருகில் ஒருவரும் நெருங்க முடியாது. நாம் உயிரைப் பிடித்துக் கொள்ளலாம். பழி நம் மீது வராது; அநியாயமாகச் செத்துவிட்டானே என்று கதறுவார்கள். "விதி

முடிந்தது'' என்று இந்த உலகம் பேசும்; அவ்வளவுதான்'' என்று பேசினர்.

பார்ப்பனனும் பார்த்திபனும் பார்ப்பனியின் பரிதாபகரமான சாவு நிகழ்ந்ததன் காரணத்தை அறிந்து கொண்டனர். என்னதான் நடக்கிறது என்று இருந்து கவனித்தனர்.

தாலி கட்டும் நேரம்; 'கெட்டி மேளம்' 'கெட்டி மேளம்' என்று உரக்கக் கூவினார்கள். கொட்டிய மேளமும் ஏனைய வாத்திய முழக்கமும் கலியாணக் கூச்சலும் சேர்ந்து அந்தப் பசுவை மருளச்செய்தது. அது திமிரிக் கொண்டு நேரே பந்தலில் மணத்தவிசில் தாலியைக் கையில் வைத்திருந்த மணமகனைக் குத்திக் கொன்றது. அதன் கூரிய கொம்புகள் அவன் வயிற்றைக் கிழித்து அவனைத் தூக்கி வாரிப் போட்டது. மணமகன் பிண மகன் ஆனான்; வாழ்த்தொலி பறையொலியாகியது. சிரித்துப் பேசி மகிழ்ந்தவர்கள் அழுது அவலித்து வயிற்றிலும் வாயிலும் அடித்துக் கொண்டனர்; பசுந் தோகை போன்ற மணப்பெண் மகிழவேண்டியவள் மனம் குன்றி குமைந்து நின்றாள். அவர்கள் அடைந்த துன்பம் தான் அடைந்த துன்பத்தைவிட மிகுதி என்று பார்ப்பனன் அறிந்தான். அந்த அவலச் சூழ்நிலையில் இருந்து விடுபட்டுப் பாண்டியனோடு அரண்மனை சேர்ந்தான்.

பார்ப்பனனின் முறையீடு தவறு என்று முடிவு செய்யப் பட்டது. அவனுக்கு நிறையப் பொருள் தந்து ''மற்றொருத்தியை மணந்து நீ அக்குழந்தைக்குப் பாதுகாப்புத் தருக'' என்று சொல்லி விடை தந்தான். மதுரைக்கு வந்த பார்ப்பனன் இழப்பை ஈடு செய்யும்

வகையில் பத்தினிப் பெண் மற்றொருத்தியைத் தேடி மணம் செய்து கொண்டான்.

பாண்டியன் குலோத்துங்கன் ஈசுவரன் திருச்சந்நிதியை அடைந்து, "கருணாநிதியே! பழி அஞ்சும் பரம்பொருளே! என் விழி திறந்து உண்மை காணச் செய்தாய்" என்று கூறிப் போற்றி வணங்கித் தம் அரண்மனை நோக்கிச் சென்றான். பின் தன் ஆட்சியைச் செம்மையுற நடத்திச் செங்கோலுக்குச் சிறப்புச் சேர்த்தான்.

## 26. மாபாதகம் தீர்த்த படலம்

குலோத்துங்கன் ஆட்சி செய்த காலத்தில் பாண்டிய நாட்டில் அவந்தி என்னும் நகரில் பார்ப்பனன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரு மகன் இருந்தான். உயர்ந்த குடும்பத்தில் பிறந்தும் அவன் தாழ்ந்த ஒழுக்கத்தை உடையவனாக இருந்தான்; காமம், களவு, கொலை இவற்றுக்கு அஞ்சாதவனாக இருந்தான்.

அவன் தவறான ஒழுக்கத்தை அவன் தந்தை கடிந்து வந்தார். அப்பொழுதும் அவன் திருந்தியபாடு இல்லை. தன் தந்தை தன்னைக் கண்டிப்பதை அவன்விரும்பவில்லை. தாய் தடுத்தும் அவன் தன் தந்தையைக் கொலை செய்து விட்டான்; அவர் உடலை வீட்டுத் தோட்டத்தில் குழி தோண்டிப் புதைத்து விட்டான்.

அங்கே இருந்தால் அரசன் ஆட்கள் பிடித்துச் சிறையில் இடுவார்கள் என்று அஞ்சி வீட்டில் உள்ள விலை மிக்க பொருள்களை எடுத்துச் சுருட்டிக் கொண்டு வேற்றூர் சென்று பிழைக்கலாம் என்று புறப்பட்டான். அவனோடு அவன் தாயையும் அழைத்துச் சென்றான்.

காட்டு வழியில் சென்று கொண்டிருந்தபோது முரட்டுக் கள்வர் சிலர் வழிமடக்கி அவன் பொருள்களைக் கவர்ந்தனர்; அவன் தாயை இழுத்துச் சென்று அவளைக் கொடுமைப்படுத்தினர். அவள் வாழ்க்கை சீரழிந்தது. இவன் மட்டும் அவர்களிடம் இருந்து தப்பித்துக் கொண்டு ஓடி வந்து விட்டான். கைப்பொருளை இழந்தான்; தாயையும் பிரிந்தான்; தந்தையையும் கொலை செய்து விட்டான்.

அரசன் ஆணையில் இருந்து தப்பித்துக் கொண்டான் என்றாலும் அவன் மனம் அமைதியை இழந்து விட்டது. அவன் பழைய காலத் தவறுகள், அந்த நினைவுகள் அவனை அலைக்கழித்தன. சட்டத்தில் இருந்து தப்பியவன் தன்னிடமிருந்தே தப்ப முடியவில்லை. கால் சென்ற வழியே அவன் பித்துப் பிடித்தவன் போல் அலைந்து திரிந்தான். எதுவும் பிடிப்பு இல்லாமல் அடிபட்ட நாய் போல் வேதனையோடு உலாவினான்.

மதுரைத் தெருக்களில் நடந்து சென்றான். மீனாட்சி அம்மை திருக்கோயில் முன் சென்று கொண்டிருந்தான். அப்பொழுது சொக்கேசர் தம் திருக்கோயிலுக்கு வெளியே

மீனாட்சி அம்மையாரோடு சொக்கட்டான் ஆடிக் கொண்டு இருந்தார். கோயிலுள் அடைபட்டு இருந்த அவர்கள் விடுபட்டு வேடுவனும் வேடுவச்சியுமாக அங்கே அமர்ந்து ஆடிக் கொண்டிருந்தனர். அவ்வழியாக வந்த அப்பார்ப்பன இளைஞன் இவர்கள் பக்கம் வந்து நின்றான்.

மீனாட்சி அம்மை இவனைக் கண்ணெடுத்துப் பார்க்க விரும்பவில்லை. கொலைப்பாதகன் என்பதால் அவனை வெறுத்து ஒதுக்கினாள்; ஒளிபெற வேண்டிய மாணிக்கம் சகதியில் விழுந்து விட்டதைப் போன்று அறிவு மிக்க வாழ்க்கை வாழ வேண்டியவன் பாவக் குழியில் விழுந்து பரிதாபத்துக்கு உரியவனாக இருந்தான்; பரமசிவன் அருள் உள்ளம் கொண்டு இந்த மருட்சி கொண்டவனைக் காப்பாற்ற நினைத்தார் வேட்டுவ உருவில் அவனிடம் அங்கு வந்து ஏன் என்று கேட்டு அறிய முற்பட்டார்.

அவன் தான் செய்த பழிபாவங்களை எடுத்துச் சொல்லி விமோசனம் தேட வந்ததாக உரைத்தான். அவன் திருந்தி வாழ முடியும் என்பதை இறைவன் அறிந்தவர். மானுடன் தவறு செய்துவிட்டாலே அவன் வாழத் தகுதியற்றவன் அல்லன் என்பதை அவர் ஏற்றுக்கொள்ள வில்லை. சட்டங்கள் மற்றவர்கள் அந்தத் தவறுகள் செய்யக்கூடாது என்பதைக் காட்டி அச்சுறுத்தவே கடுந்தண்டனைகள் விதிக்கின்றன. இறைவன் பாவ மன்னிப்புத் தந்து புனர்வாழ்வு தர விரும்பினார். பாவம் தீர வழி வகைகளைக் கூறினார்.

''அதோ எதிரே இருக்கும் பொற்றாமரைக் குளத்தில் முழுகி இறைவன் நற்றாளை நாள்தோறும் வணங்கி

வழிபடு; ஊனைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி நீ வாழ முற்படு; விரதங்களை மேற்கொண்டு தூயவனாக நடந்து கொள்க. நாளைச்கு ஒருமுறைதான் உணவு உட்கொள்ள வேண்டும்; வேளைக்கு மூன்று முறை சுற்றி வலம் வர வேண்டும்.

மற்றும் நீ எப்பொழுதும் விழிப்புடன் நடந்து கொள்ள வேண்டும்; மனம் நம்மை ஏமாற்றி விடும்; யாரும் பாக்கவில்லையே, நாம் தவறு செய்தால் என்ன என்று நினைக்கலாம்; நீயே உனக்குச் காட்சியாக இருந்து மனம் நொந்து கொள்ள வேண்டி வரும்; அதுமட்டுமல்ல நமக்கு எல்லாம் மேலே இறைவன் ஒருவன் இருக்கிறான். அவன் நம் செயல்களைக் கவனித்துக் கொண்டுதான் இருக்கிறான்; பாவங்களில் இருந்து தப்பமுடியாது; அவன் அருள் வேண்டி மனம் கரைந்து அழுதால் இறைவன் மன்னிப்பான்; நெருப்பில் புடம் வைத்துக் காய்ச்சும் பொன்போல நீ புத்தொளி பெறுவாய்; மறுபடியும் நீ மனிதனாக வாழலாம்; இளம் வயது; உன் வாழ்வு பாழாகக் கூடாது; திருந்தி வாழ்க'' என்று சொல்லி அனுப்பினார்.

அவனும் அப்புண்ணிய தீர்த்தத்தில் முழுகி நீராடிப் பாவங்கள் தீர்த்து இறைவனை வழி பட்டு மேல்நிலை அடைந்தான்; அவன் செய்த மாபாதகங்கள் மன்னிக்கப்பட்டன. அவன் புதிய மனிதனாக மாறி அத்தகைய தவறுகள் செய்யக் கூடாது என்பதற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்து உயர்வு அடைந்தான். மறுபடியும் அந்தணனுக்கு உரிய நல்லொழுக்கமும், தெய்வ வழிபாடும், கல்வி நலமும் வாய்ந்தவனாகத் திகழ்ந்தான்.

சமுதாயத்தில் அவனும் ஒரு நல்ல குடிமகனாக வாழ்ந்து காட்டினான்.

## 27. அங்கம் வெட்டின படலம்

இதுவும் குலோத்துங்க சோழன் காலத்து நிகழ்ச்சி யாகும். பரதேசி ஒருவன் மதுரைக்கு வந்து சுதேசி போலப் பழகித் தேசிகனாக இருந்து இளைஞர்களுக்கு வாள் பயிற்சி கற்றுத் தந்து வாழ்க்கை நடத்தி வந்தான். அவன் நாளும் இறைவன் தாளை வணங்கி வழிபட்டு வரும் நற்பழக்கம் உடையவனாக இருந்தான். அவன் மாண வருள் ஒருவன் சித்தன் என்பான் வாள் பயிற்சியில் தேர்ச்சி பெற்றுத் தன்னிகரற்று விளங்கினான். ஆசிரிய ருக்குப் போட்டியாகப் பயிற்சிக் கூடம் அமைத்து 'மாண வர்களை ஈர்த்தான். ஆசிரியனைவிட மாணவனே மிக்க வருவாய் பெற்று வந்தான். எனினும் ஆசிரியனை ஒன்றும் இல்லாதவனாகச் செய்ய வேண்டும் என்ற முனைப்போடு செயல்பட்டான்.

இது அவன் செய்த தவறு; அடுத்தது அவன் மனை வியை அடைய ஆசைப்பட்டான்; ஆசிரியர் இல்லாத போது வீட்டுக் கதவைத் தட்டி வெளியே வரவழைத்து அவள் கையைப்பிடித்து இழுத்துத் தகாத உறவு கொள்ள விழைந்தான். அவள் அவனை வெளியே தள்ளித் தாளிட்டுக்கொண்டு வீட்டிற்குள் சென்று விட்டாள்.

கற்பிற் சிறந்த அப்பொற்பினாள் சித்தன் செய்யும் சிறுமைகளைக் கணவனிடம் எடுத்துக் கூறாது மனத்தில் அடக்கிக் கொண்டாள்; சொன்னால் கணவனும் அவனும் மோதிக்கொள்ள வேண்டிவரும். இல்லாவிட்டாலும்

மனம் புழுங்கி வேதனை அடைய வேண்டி வரும். தன் குறையை ஆண்டவன் திருக்கோயிலுக்குச் சென்று அவனிடம் வெளிப்படுத்தினாள்.

சித்தனைச் சிவன் ஆசிரியர் வேடத்தில் சந்தித்து 'இந்த ஊர் மக்கள் காண வாட்போர் நடத்தி நம் கலைத் திறனைக் காட்டிக் கை தட்டலைப் பெறுவோம். நகர்ப் புறத்துப் பொது மேடைக்கு நாளைக்கு வா'' என்று இடமும் நாளும் குறித்து அழைத்தார். காளைப் பருவம் உடைய அவன் முதியவன் என்றும் பாராது போர் நிகழ்ச் சிக்குக் கருத்துத் தெரிவித்தான்.

ஊரவர் திரண்டனர்; வாளை ஏந்தி முதியவரும் சித்தனும் சுழற்றி ஒருவரை ஒருவர் தாக்க முற்பட்டனர். முதியவர் தானே என்று அவன் அவரை எளிமையாகக் கருதினான். இருபது நாழிகை வாளைச் சுழற்றியும் அடி பெயர்த்தும் கலைத் திறனைக் காட்டினர். சூடு பிறந்தது. அங்குள்ளவர் அனைவரும் கேட்குமாறு முதியவராகிய சிவபெருமான், ''உன் குருவின் பத்தினியை நினைத்த நெஞ்சு எது? பார்த்த கண்கள் எவை? தொட்ட கை எது? கூசாமல் பேசிய நா எது? என்று கேட்டு அவற்றைத் தனித் தனியே வடுப்படுத்தி அவன் தலையை உடம்பிலிருந்து வேறுபடுத்தினார். தலை உருண்டிட அவன் பிண மானான். அவர் தலைமறைவு ஆகிவிட்டார்.

மாணவர்கள் ஆசிரியரைத் தேடினார்கள்; களத்தில் இல்லை; இல்லத்தில் இருப்பார் என்று அங்குச் சென்று தேடினார்கள். உண்மையான அம்முதியவர் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்டுவிட்டு மெதுவாக வீடு நோக்கி நடந்தார். மாணவர்கள் அவர் மனைவியிடம் சித்தனை வெட்டி வீழ்த்திய சித்திரத்தைப் பற்றிப் பேசிக்

கொண்டிருந்தனர். அவளால் அதை நம்பவே முடிய வில்லை. கணவர் வந்ததும் உண்மைதானா என்று கேட்டு வினவினாள்.

''யான் ஒரு பாவமும் அறியேன்; கோயிலுக்குச் சென்று இருந்தேன்'' என்றார்.

சுற்றியிருந்த மாணவரும் பொதுமக்களும் அவர் அவன் செய்த தீமையைச் சொல்லிச் சொல்லி ஊறு விளை வித்ததாகச் சொன்னார்கள். வந்தவர் இறைவனே என்பது அறிந்து நிறை உள்ளத்தோடு திருக்கோயில் சென்று அனைவரும் வழிபட்டனர். நாட்டு அரசன் குலோத்துங்கனும் இதுகேட்டு வியப்பு அடைந்து அவனும் கோயிலை அடைந்து வழிபட்டான். அவன் ஆட்சியில் இறைவன் மற்றவர்கள் குறைகளைத் தீர்த்து வைத்து உதவுவது கண்டு உவகை அடைந்தான். ஆணை என்பது அரசனது மட்டும் அன்று; அதையும் கடந்து இறைவனது ஆணைதான் உலகத்தில் தீமைகளை ஒழித்து நன்மைகளை நிலைநாட்டச் செய்கின்றன என்பது உணர்த்தப்பட்டது.

## 28. நாகம் எய்த படலம்

குலோத்துங்கனுக்குப்பின் அவன் மகன் அனந்த குண பாண்டியன் ஆட்சிக்கு வந்தான். அவனும் முன்னை யோரைப் போலச் சைவம் தழைக்கக்கோயிற் பணிகளும் சாத்திரப் பிரச்சாரமும் செய்து வந்தான். மக்கள் சைவ சமயத்தைப் பின் பற்றினர். அதனால் அழுக்காறு கொண்ட சமணர் அவனை ஒழிக்க வேள்வித் தீ ஒன்று

எழுப்பி அசுரன் ஒருவனைப்படைத்து வெளிப்படுத்தினர். அழிவுக்காகப் படைக்கப்பட்ட அசுரன் தனக்கு இடப் பட்ட பணி யாது என்று உருமிக் கொண்டே வந்தான்; மன்னனையும் அவன் ஆளும் தென்னாட்டையும் அழித்து விட்டு வரச் சொல்லி ஏவினர்.

அசுரன் ஆதிசேடன் வடிவம் கொண்டு கொடிய நாக மாக மதுரையை வந்து சூழ்ந்து கொண்டான். நஞ்சு கக்கிக் கொண்டு மக்கள் அஞ்சும்படி வருத்திக் கொல்ல வந்தது; நகர மாந்தர் நாட்டு அரசனாகிய அனந்த பத்மனிடம் ஓடிச் சென்று உரைத்தனர். அவன் அஞ்சுதல் ஒழிந்து நாகம் அணிந்த பினாகபாணியாகிய இறை வனிடம் முறையிட்டு விட்டுத் தெய்வமே துணையாக அக் கொடிய நாகத்தைச் சந்திக்க அனந்த குணபாண்டியன் வில்லும் அம்புமாக விரைந்து சென்றான். நாவும் பல்லும் வெளியே தோன்றும்படி மலைக்குகைபோல் வாயைத் திறந்து கொண்டு ஆலகால விஷத்தைக் கக்குவது போல் எங்கும் நஞ்சைக் கக்கியது. அவன் அஞ்சாமல் அதன்மீது பல அத்திரங்கள் போட்டும் அவை அதன் உடல் மீது பட்டதும் பாறை மீது பட்ட பானை எனத் தவிடு பொடி யாயின. அதற்குப் பிறகு சந்திரபாணம் என்னும் பாணத்தை அதன் மீது ஏவ அது அதைக் கண்டதுண்ட மாக்கியது. எனினும் அது கக்கிய நஞ்சு காற்றில் கலந்து மக்களை மயக்கமுறச் செய்தது. இனி என்ன செய்வது என்று அறியாது திக்கு முக்காடினான். சோமசுந்தரனைத் தவிர ஏம நெறி காட்ட அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்!

சிவனின் திருக்கோயிலுக்குச் சென்று நஞ்சு கலந்த காற்றினைத் தூய்மைபடுத்தியும், அதனால் நோயுற்று உயிருக்குப் போராடிக்கொண்டிருக்கிற மதுரை

மாந்தருக்கு மருந்து அளித்தும் அவர்கள் துயரை நீக்குமாறு வேண்டினான். சிவன் தன் திங்கள் திருமுடியிலிருந்து அமுதத் துளிகள் சிலவற்றை அந்நகரில் தெளித்துச்சோர்ந்த அவர்களுக்கு உயிரளித்துக் காப்பாற்றினார். மறுபடியும் அந்நகர் இம்மதுரத்துளிகள் பட்டு இனிமை அடைந்து மதுரை என்னும் பெயருக்கு உரிய தகுதியைப் பெற்றது. யாவரும் விடம் நீங்கி உமை பாகனை வழிபட்டு மேன்மை அடைந்தனர். பாண்டியனும் தெய்வ அருள் நினைத்து உருகித் துதித்து நன் முறையில் ஆட்சி நடத்தி நாள் பல வாழ்ந்து மேன்மை உற்றான்.

## 29. மாயப் பசுவை வதைத்த படலம்

யானையை ஏவியும் பயன் இல்லை; நாகத்தினை அனுப்பியும் பயனில்லை; அவர்கள் கொல்ல முடியாத சீவனை அனுப்பி வைக்க வேண்டுமென்று சமணர் நினைத்தனர். பசுவை அனுப்பினால் அதைக் கொல்லத் தயங்குவர் என்று முடிவு செய்தனர். அதனால் அழிவு வேள்வி ஒன்று இயற்றி அதில் முரட்டுப் பசுவடிவத்தில் ஓர் அசுரனைத் தோற்றுவித்தனர்.

இட்ட பணியாது என்று பசுவின் வடிவத்தில் இருந்த அசுரன் கேட்டான். பாண்டியன் அனந்தகுணனையும், ஆனந்தம் மிக்க நகர மாந்தரையும் அழிக்க வேண்டும் என்று கட்டளை இட்டனர். அந்த முரட்டுப்பசு தன் கூரிய கொம்புகளைக் கொண்டு வீரியமாகப் போர் செய்யும் வேகத்தோடு மதுரையை நோக்கி ஓடியதும் அரசனும் மக்களும் அஞ்சி அலறி அங்கயற்கண்ணியின் தலைவனாகிய சுந்தரக் கடவுளிடம் சென்று முறையிட்டனர்.

சமணர் திட்டத்தை முறியடிக்கச் சிவனார் தன் இடப வாகனத்தை ஏவி அதனை அடக்குமாறு பணித்தார். சுளை வடிவத்தில் வந்த எருதினைக் கண்டு கன்னி இளம்

அசுரப் பசு இச்சை கொண்டு தன் செயலை மறந்து அதைக்கண்டு ஏங்கி அடங்கி ஒடுங்கி மயங்கிக் கல்லாகச் சமைந்து விட்டது. அது கண்ட தென்னவனும் நகர மாந்தரும் வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்தனர். ஏவி விட்ட சமணர் கட்டிய உடையோடு ஓட்டம் எடுத்தனர்.

எருது வடிவத்தில் வந்த அந்தத் தோற்றம் பெருமை மிக்கதாக விளங்கியது. வாலை உயர்த்திக் கொண்டு நிமிர்ந்த நடையோடும் வளைந்த கொம்போடும் வீறு கொண்ட பார்வையோடும் விளங்கிய அக்காளை அவர்களைக் கவர்ந்தது. அப்பெருமைமிக்க எருது நிலை பெற்றுக் காட்சி அளிக்கவேண்டும் என்று அரசனும் மற்றையோரும் இறைவனை வேண்டிக் கொண்டனர். பருமையான அவ்வடித்தை அங்கேயே விட்டுவிட்டு நுண்மையான ஆவி வடிவத்தில் அவ் எருது ஆண்டவன் திருச்சந்நிதியை அடைந்தது. அந்த எருது ஒரு மலையாக நிலைத்து விட்டது. அதனை இடபமலை என்று செப்பி அனைவரும் வணங்கத் தொடங்கினர்.

இராமன் சீதையைத் தேடித் தென்திசை சென்ற போது வழியில் மதுரை வழியாக வானரங்களோடு சென்றனன். இவ்இடபமலையில் அகத்தியரோடு தங்கி அவர் சொல்லியபடி தாமரைக் குளத்தில் முழுகி இறைவனை வணங்கி அவர் அருளும் ஆசியும் பெற்றுத் தென்னிலங்கை சென்று இராவணனோடு போரிட்டுச் சீதையை மீட்டான். மதுரையில் இராமனும் இலக்குவனும், வானரமும் தங்கிய இடம் அது என்று இன்னமும் பேசப்பட்டு வருகிறது. மறுபடியும் திரும்பி வந்த போதும் அவர்கள் சோம சுந்தரக் கடவுளை வணங்கிப் பின் அயோத்தி அடைந்தனர் என்று கூறப்படுகிறது.

அனந்த குணபாண்டியன் சிவனை வணங்கி அவனருளால் குலபூடண பாண்டியன் என்னும் நன் மகனைப் பெற்று அவனிடம் உரிய வயதில் ஆட்சியை ஒப்படைத்துவிட்டுச் சிவலோகம் சேர்ந்தான்.

## 30. மெய்க் காட்டிட்ட படலம்

குணபூடண பாண்டியனுக்கு நம்பிக்கை மிக்க சேனைத் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் சுந்தர சாமந்தன் என்பது. அவன் சிவனடியாரைப் போற்றி வணங்கி அவர்களுக்கு வேண்டுவன கொடுத்து வந்தான். கொடுத்துக் கொடுத்து அவன் கைகள் சிவப்பேறின. அவன் விழிகள் அடியார் வரும் வழியை எப்பொழுதும் எதிர்பார்த்துக் கொண்டேயிருந்தன. அமைதியான காலத்தில் அறங்கள் பல செய்ய அரசனும் ஒப்புதல் அளித்தான்.

வேடர்களுக்குத் தலைவனாக இருந்த சேதிராயன் என்பவன் தன் எல்லைமீறி அரசனுக்குத் தொல்லை தரக் காத்திருந்தான்; படை பலமும் துணிவும் உடைய அவன் முரட்டுத்தனம் மிக்கவனாக இருந்தான்; அவனை எதிர்ப்பது என்பது எளிய செயல் அன்று. அவன் படை யெடுத்து வருவான் என்ற செய்தி கேட்டு நடுங்கிய பாண் டியன் தன் சேனைத் தலைவன் சுந்தரசாமந்தனை அழைத்து, "நாம் தற்காப்பாக மேலும் சேனைகளைத் திரட்ட வேண்டும். நம்மிடம் உள்ள பரிகளும் குதிரை வீரர்களும் போதா. நால்வகைச் சாதியரிடையே வாட்ட சாட்டமான வாலிபர்களைத் தேர்ந்து எடுத்து அவர் களுக்குப் போர்ப் பயிற்சி தந்து வீரர்கள் ஆக்குவதற்கு எவ்வளவு செலவானாலும் கவலை இல்லை; எடுத்துக் கொடு" என்று சொல்லி நிதிகள் வைத்திருந்த அறை களின் சாவியை அவனிடம் கொடுத்து விட்டான்.

அரச செல்வம் அத்துணையும் அவன் கைக்கு வந்ததும் அவன் தங்கு தடையின்றி எடுத்துச் செலவழிக்க முற்பட்டான்; தனக்கோ தன் குடும்பத்துக்கோ அல்ல; அடியவர் திருக்கூட்டத்திற்கும் கோயில் திருப்பணிகளுக்கும் மண்டபங்கள் கட்டுவதற்கும் அஞ்சுவதில்லை. ஆயிரக்கணக்கில் கோயில் திறப்பதற்கும் பூசாரிகள் வளமாக வாழ்வதற்கும் அறக்கட்டளைகள் ஆயிரக்கணக்கில் தோற்றுவித்தும் வேத பாடசாலைகள், சைவ திருச்சபைகள், தேவாரப் பண்ணிசைக்கும் இசைக்கூடங்கள், சாத்திர ஆராய்ச்சிகள் தெய்வீகச் சபைகள் இப்படி அளவற்றன அமைத்தும், அவற்றிற்கு வேண்டிய நிதிகளை வாரி வழங்கினான்.

படைகள் திரட்டுவதற்கும், தளங்கள் அமைப்பதற்கும், குதிரைகள் கட்டுவதற்குத் தொட்டில்களோ படைக்கலக் கூடங்களோ கட்டவும் செலவிடப்படவில்லை. போரின் அறிகுறியே கண்ணுக்குப் படாமல் நிதிகள் மட்டும் நதிகள் போலப் பாய்ந்து ஓடுவதைக் கண்டு அரசன் ஐயம் கொண்டான்.

படைத்தலைவன் நெருங்கிய நண்பன், நம்பிக்கைக்கு உகந்தவனாகவும் இருந்ததால் கேட்பது எப்படி என்று விட்டு வைத்தான். படை திரட்டுவதன் அறிகுறியே தென்படவில்லையே என்று வெளிப்படையாகக் கேட்டான்; உள்ளூர்ப் படைகள் உளுத்துப் போனவை; வெளுத்துக் கட்ட வெளியூர்ப் படைகள் மேலானவை என்று தெரிந்து ஒருபெரிய பொய்யைச் சொல்லித் தப்பித்துக் கொண்டான்; அரசனும் அவன் கூர்த்த அறிவு கண்டு ஆழ்ந்த மகிழ்ச்சி அடைந்தான்.

அரசனிடம் சொன்ன பொய்கள் ஆயிரம்; அதை மெய்ப்பிக்க வழி என்ன? சோமசுந்தரக் கடவுளிடம் சென்று முறையிட்டான். "இறைவா செய்தது தவறோ

இல்லையோ என்னால் கூறமுடியாது;'' பொதுச்சொத்தை நான் கொள்ளை அடிக்கவில்லை. ஊர்ச் சொத்துக்கு யான் பிள்ளையாகப் பிறக்கவில்லை. நற்பணி மன்றங்களுக்கே அரசனது செல்வத்தைப் பயனிட்டேன்; இதை எப்படி அவனிடம் சொல்வது. சொல்லிவிட்டால் என்ன? சொல்லலாம், சேதிராயன் படை எடுத்து வந்து விட்டால் அப்பொழுது நாட்டையும் அரசனையும் காப்பது எப்படி? எல்லாம் உன் பொறுப்பு'' என்று முறையிட்டான்.

''நாளைக்குச் சேனையோடு வருவோம்; நீ அரசனுக்கு அறிவிப்பாய்'' என்று அசரீரி கூறியது. நம்பியவரை நாயகனாகிய இறைவன் கைவிடான் என்ற மனநிறை வோடு வீடு வந்து சேர்ந்தான்.

மறுநாள் அரசனும் சுந்தரசாமந்தனும் அரண்மனை முகப்பில் நின்று கொண்டு வரப்போகும் சேனைகளைக் காணக் காத்துக் கொண்டிருந்தனர். சிவபெருமான் கணநாதர்களையும் பூத கணங்களையும் படைகளாகவும் இடபத்தைக் குதிரையாகவும் மாற்றிச் சோமசுந்தரர் ஒற்றைச் சேவகராக அதில் ஏறி வந்து சேர்ந்தார். கண்ணுக்கெட்டிய தூரம் குதிரைப் படைகளும் காலாட்படைகளும் அணிவகுத்து நின்றன. சாமந்தனின் திறமையையும் செயலையும் பாண்டியன் வெகுவாகப் பாராட்டினான்.

ஒற்றைச் சேவகனை அருகில் வரப் பாண்டியன் அழைத்தான். அவன் மிடுக்கான தோற்றத்தைக் கண்டு அவனை 'மகா வீரன்' என்று பாராட்டிப் பட்டுத் துகில் களையும் இரத்தின ஆபரணங்களையும் பரிசாகத் தந்தான்.

அவரும் தன் குதிரையைத் தூண்டி நடையை நடத்திக் காட்டச் செய்து சேனை வெள்ளத்தில் மறைந்து சென்றார். அப்பொழுது வேடுவர் தலைவனான சேதி ராயன் புலி வேட்டைக்குச் சென்று உயிர் துறந்தான் என்ற செய்தியை ஒற்றர்கள் வந்து செப்பினர். பகை நீங்கியது! படைகள் கொட்டிலில் அடங்கச் சென்றன; அவை இருந்த சுவடு இன்றி அனைத்தும் மறைந்து விட்டன. இவ்வளவும் சிவன் காட்டியதே என்றும் அவர் திருவிளையாடலே என்றும் அரசன் அறிந்து அகமகிழ்வு கொண்டான்.

மெய்யன்பன் ஒருவனுக்காகத் தெய்வமே வீரனாக வந்து நின்றதும் சேனை வெள்ளத்தைக் காட்டியதும் மறக்க முடியாத நிகழ்ச்சிகள் ஆயின. சுந்தரசாமந்தனுக்கும் பாண்டியன் குணபூடணனுக்கும் நெருங்கிய உறவு மேலும் வளர்ந்தது. பொய்யை மெய்யாகக் காட்டிய இறைவன் திருவிளையாடல் அதனை நினைத்து இறைவன் பெருமையைப் பேசி மகிழ்ந்தனர்.

## 31. உலவாக்கிழி அருளிய படலம்

குணவீர பாண்டியன் தனமெல்லாம் தரும நெறியில் செலவழிக்கப்பட்டது. வளம் குன்றிவிட்டது. எனினும் அவன் இறைவனையே நம்பி விரதங்களைச் செய்து நியம நிட்டைகள் தவறாமல் வழிபட்டு வந்தான். தவவலியால் அந்தணர்களையும் வேத வித்தகரையும் அவன் மதிக்க வில்லை. அதனால் அவர்கள் நாட்டை விட்டு வெளியேறினர்.

வேதம் ஓதாமையாலும் வேள்விகள் நடத்தாமை யாலும் மழை வளம் குன்றியது.

"மழை வளம் கரப்பின் வான் பேரச்சம் பிழையுயிர் எய்தின் பெரும் பேர் அச்சம்" என்று சிலப்பதிகாரம்கூறும்.

மகளிர் கற்பாலும், வேதியர் நல்லொழுக்கத்தாலும், அரசரின் நெறி முறையாலும் மழை பொழியும் என்று கூறுவர். வேதியர்கள் தம்முடைய கடமைகளைச் செய்யாததால் மழை பிழைத்துவிட்டது. கோயில் நற்பணிகளுக்கும் அரசன் அரண்மனையில் பொருள் வளம் இல்லை; இப்படித் தேய்ந்துவிட்ட நிலையில் வறுமையும் பஞ்சமும் தலைவிரித்து ஆடின; வேறு வழியில்லை.

வழிபடும் தெய்வமே அவனுக்கு வாழ்வு அளிக்க வேண்டி இருந்தது. இறைவன் அவன் கனவில் வந்து ''அழியாத பொன் முடிப்பு'' ஒன்று தந்து விட்டு மறைந்தார். கனவு மறைந்தாலும் முடிப்பு மறையவில்லை. ''எடுக்க எடுக்கக் குறையாத அட்சய பாத்திரம் போன்று இந்த முடிப்பு உன்னிடம் தரப்பட்டுள்ளது. இதை வைத்து வேதியருக்கும் வேத நூல் கல்விக்கும் பயன் படுத்துக'' என்று சொல்லி மறைந்தார்.

உலவாக்கிழியாகிய பொன்முடிப்பை எடுத்து தெய்வப்பணிகள் செய்தான்; வேதம் ஓதும் வேதியர்களை வாழ வைத்தான்; மறுபடியும் சோறும் சுகமும் மட்டும் அன்றி அறிவும் ஞானமும் பெருகி நாடு எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் அடைந்தது.

மனிதர் சோறு மட்டும் தின்று வாழ்வதில்லை; தெய்வ வழிபாடு மட்டும் போதாது, கல்வியும் ஞானமும் பெருக வேண்டும். அவற்றை வளர்க்க வேண்டும். அதுவே நாட்டுக்குப் பெருமை தருவதாகும். தமிழருக்கு வள்ளுவர் குறள் அழியாச் செல்வம்; வடமொழியாளருக்கு வேதம் அழியாத செல்வம்; இத்தகைய உயர்ந்த நூல்கள் மாந்தரிடைப் பரவினால் அவர்கள் நன்னெறியோடு வாழ்வர். ஒழுக்கம் குறையாது; மழையும் பெய்யும் என்பதை இறைவன் இத்திருவிளையாடல் கொண்டு உணர்த்தினார்.

## 32. வளையல் விற்ற படலம்

தேவதாரு என்னும் வனத்தில் இருந்த ரிஷிகளின் பத்தினியர் அப்பு அழுக்கற்றவர்கள் என்று திமிர் பிடித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். வாய்ப்பு நேரும் போது அவர்கள் எப்படி நடந்து கொள்கிறார்கள் என்பதைக் காட்ட இறைவன் அவர்கள் முன்னால் பிச்சை எடுக்கும் வாலிப வடிவுடன் ஆடைகள் இன்றி வெறும் கோவணத்துடன் உடம்பெல்லாம் விபூதி பூசிக்கொண்டு வாயில் புன் முறுவலும் காலில் கிண்கிணியும் செருப்பும் அணிந்து கையில் பிச்சைப்பாத்திரம் ஏந்தி, அடிக்க உடுக்கையும் கொண்டு பாடிக் கொண்டே தெருவழியே சென்றார். சிலம்பொலியும் உடுக்கை ஒலியும் கேட்டுச் சோறு ஏந்திய கையோடு பிச்சைக்காரனை நாடி இச்சை மீதூர நச்சினார்கள்.

அவர் பேரழகைக் கண்டு நாணம் கைவிட்டுக் கூந்தலும் ஆடையும் நெகிழப் பசலை மீதூர வளையல்கள் கழலத் தம் வசம் இழந்து அவரை அடைய ஏங்கித் தவித்தனர். மோகம் கொண்ட அவர்கள் தம் கணவர் காண அவமானப்பட்டுப் போனார்கள். பிச்சை எடுக்க வந்த பெருமான் அவர்களைத் தூண்டி விட்டு அவர் வீட்டு எல்லையைத் தாண்டி மறைந்துவிட்டார்.

ரிஷிகள் தம் மனைவியர் இப்படி மன நிலை மாறி நிற்பதற்குக் காரணம் என்ன என்று எண்ணிப்பார்த்தனர். பிச்சைக்காரன் பின்னால் இவர்கள் இச்சை கொண்டு போனார்களே என்று அவர்களைக் கடிந்து கொண்டனர். நிச்சயம் அவன் சிவனாகத்தான் இருக்க வேண்டும் என்று முடிவு செய்தனர். "நீர் ரிஷிபத்தினிகளாக இருக்கத் தக்கவர்கள் அல்லர். சோமசுந்தரனை விரும்பிச் சிவன் பின்னால் போனீர்கள். அவன் மாணிக்கம் விற்ற

போது வைசியனாக வந்தான்; நீங்களும் மதுரை செட்டித் தெருவில் சென்று பிறப்பீர்'' என்று சாபம் இட்டனர். ''விமோசனம் யாது?'' என்று கேட்டனர். ''அவன் வளையல் விற்க வருவான். அவன் உங்கள் கையைப் பிடிப்பான்; நீங்கள் சாப விடுதலை பெறுவீர்'' என்று கூறப்பட்டார்கள்.

அதன்படி மதுரையில் செட்டித் தெருவில் வணிகக் குடிகளில் இவர்கள் பிறந்தார்கள். பெதும்பைப் பருவம் நீங்கி மங்கைப்பருவம் அடைந்த இவர்கள் தெருவில் வளையல் விற்கும் வாலிபனின் குரல் கேட்டு வாயிற் கடைகளைக் கடந்து அவனை விளித்தார்கள். வளையல் விற்பவனின் பேரழகைக் கண்டு தம் மனம் பேதலித்தனர். அவனை அடைந்து இன்பம் அடைவது பிறவிப் பயன் என்று நினைத்தனர்.

''நீ யார்?'' என்றார்கள்.

''வளைக்கும் வியாபாரி'' என்றான்.

''இளைக்கும் எங்கள் கை அளவிற்கு ஏற்ப வளையல் உண்டோ?'' என்று வினவினர்.

''உண்டு'' என்றான்.

கைகளை நீட்டினர்; அவன் அவர்கள் கையைப் பிடித்து வளையல்களை மாட்டினான்.

கைபிடித்துக் கணவனாக அவன் மாறினான்.

அவன் சிவன் என்பதை அவர்கள் அறிந்திலர்; பிச்சை ஏற்க வந்த பிச்சாடனர்தான் வளையல் விற்க வந்த வாலிபன் என்பதும் அறியார்.

முற்பிறவியில் அவனை அடைய முடியாமல் ஏங்கித் தவிர்த்தவர்கள் இப்பிறவியில் கூடி இன்பம் பெற்றனர். அவன் அவர்களை விட்டு மறைந்ததும் வந்தவன் வைசியன் அல்லன்; மதுரைக் கடவுள் என்று அறிந்தனர். பிறவிப் பயன் பெற்றோம் என்று மகிழ்ச்சி அடைந்தனர். அவர்கள் நன்மைந்தர்களைப் பெற்று மன நிறைவோடு வாழ்ந்தனர். அப்பிள்ளைகளும் வலிமையும் ஆற்றலும் அறிவும் சீலமும் பெற்றுப் பெருமை சேர்த்தார்கள்.

ரிஷிகள் ஆணவம் அடங்கினர். அவர் பத்தினிமார்கள் இறைவனைக் கூடும் பேறு பெற்றனர். அதற்காக ஒரு பிறவி எடுத்து அவனுக்காகவே காத்திருந்து நன்மை அடைந்தனர்.

## 33. அட்டமாசித்தி உபதேசித்த படலம்

திருக்கைலாயமலையில் ஆலமர நிழலில் சிவனாரின் திருத்தொடையின் மீது உமையம்மையார் இருந்து கொண்டு அவருக்கு வெற்றிலை மடித்துக் கொடுக்க, பூதத் தலைவர்களுக்கும் சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கும் சிவ நெறிகளையும் தருமங்களையும் உபதேசித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது முருகனுக்குப் பால் ஈந்த இயக்கப் பெண்கள் அறுவரும் அடக்கமாக விபூதியும் ருத்திராட்சிதமும் அணிந்து கொண்டு இறைவனிடம் ''எமக்கு அட்டமாசித்திகளை அறிவித்தருள்க'' என்று வேண்டினார்.

இறைவனும் அவர்களுக்கு அவற்றை உபதேசிக்க அவர்கள் உடனே அவற்றை மறந்துவிட்டனர். மறதி அவர்களுக்கு இழப்பைத் தந்தது. சிவனார் கோபித்துப் பொறுப்பற்ற நீங்கள் பட்டமங்கை என்னுஞ்

ஊரில் பாறாங்கல்லாகக் கிடக்கக்கடவது என்று சபித்தார். ''விமோசனம்'' எப்படி என்று கேட்டார்கள். ஆயிரம் ஆண்டுகள் அங்கே கல்லாகக் கிடந்த பின் அங்கு மதுரையில் இருக்கும் சோம சுந்தரக் கடவுளாக யாம்வருவோம். அட்டமாசித்திகளின் பெயர்களும் அவற்றின் விவரமும் அங்கு மீண்டும் கூறுவோம்'' என்று அறிவித்தருளினார்.

அவ்வாறே அவ்வியக்கியர் அனைவரும் பட்ட மங்கையில் கெட்டொழிந்த கற்களாய்க் கிடந்தனர். ஆயிரம் வருடம் அகன்றபின் சோம சுந்தரர் ஆசிரிய உருவில் அங்கு வந்து அவர்களை எழுப்பினர்; எழுந்த கன்னியர் அறுவரும் ஆசிரியனின் அருளைப் பெறக் காலில் விழுந்து வணங்கினர். அவர் அவர்கள் சிரமேற் கரம் வைத்து அட்டமாசித்திகள் இவை என அறிவித்து அருளினார்.

1) **அணிமா** — சிறிய உயிரினும் தான் பரமாணுவாய்ச் சென்றிருக்கும் சிறுமையாகும்.

2) **மகிமா** — பொருள்களின் உள்ளும் புறமும் வியாபித்திருக்கும் பெருமையாகும்.

3) **லகிமா** — மேருமலையைப் போலச் சுமையாக இருக்கும் பொருளைத் தூக்கினால் எளிதாக (இலகுவாக) இருப்பதாம்.

4) **கரிமா** — எளியதும் வலியதாகத் தோன்றுதல்.

5) **பிராப்தி** — நினைத்த இடத்துக்குச் செல்லுதல்.

6) **பிராகாமியம்**— கூடுவிட்டுக் கூடு பாய்தல்; எங்கிருக்கும் பொருளையும் தருவித்து அடைதல் எதையும் காணுதல் முதலியன.

7) **ஈசத்துவம்** — முத்தொழிலையும் தன் விருப்பப்படி செய்தலும் சூரியன் முதலிய கிரகங்கள் தன் ஏவலைக் கேட்டலும்.

8) **வசித்துவம்** — இந்திரன் முதலான தேவர்களையும் அசுரர்களையும் மனிதர்களையும் விலங்குகளையும் தன்வசியம் ஆக்கிக் கொள்ளுதல்.

இறைவனை அறிந்த யோகியர்கள் இந்தச் சித்திகளை அறிவார்கள்; ஆனால் செயல்படுத்த மாட்டார்கள்; இவை நாடிய பொருளைத் தரும்; தேடிய தகவல்களைத் தரும்; எனினும் அற்ப சுகத்துக்கு ஆசைப்பட்டுச் சித்திகளை அடைய உத்தம யோகியர்கள் விரும்பமாட்டார்கள்; அதை விட உயர்ந்த மனநிலையில் வாழவேண்டுவார்கள் என்று அறிவித்தார்.

ஆசிரியரிடம் சித்திகளைப்பற்றி அறிந்தவர்கள் உமா பார்வதியை மனத்தில் தியானித்து அதன் பயனாக அட்டமாசித்திகளை நன்கு பயின்று விண்வழியே சென்று தாம் உறையும் திருக்கைலாய மலையை அடைந்தனர்.

## 34. விடை இலச்சினை இட்ட படலம்

சோழனுக்கும் பாண்டியனுக்கும் அக்காலத்தில் நல்லுறவு இல்லாமல் இருந்தது. பொதுவாகச் சோழர்கள் அக்காலத்தில் சமண சமயத்தை ஆதரித்து வந்தனர். விதிவிலக்காக ஒரு சோழன் இருந்தான். அவன் காடு வெட்டிச் சோழன் என்று அழைக்கப்பட்டான்.

காடு திருத்தி நாடு ஆக்கியமையால் அவன் காடு வெட்டிச் சோழன் என அழைக்கப்பட்டான். அவன் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டிருந்தான்.

அவன் மதுரை சென்று சொக்கனை வழிபட வேண்டு மென்று சதா ஏக்கம் கொண்டிருந்தான்; தூக்கத்திலும் அந்நினைவோடு இருந்தான். சித்தர் வடிவில் சிவனார் வந்து அவன் மெத்த மகிழ்ச்சி அடையும்படி அவனைப் பாண்டிய நாட்டுக்கு வரச் சொன்னார். அன்று இரவே அவன் மதுரை நோக்கி வந்தபோது வைகையில் வெள்ளம் வந்து அவன் வருகையைத் தடுத்தது. அவன் அங்கயற் கண்ணி மணாளனை நினைத்து முறையிட அவர் அவனுக்காக நீரைக் குறைத்துக் கரை ஏற்றினார். அவனை வடக்கு வழியாக வரச்சொல்லிச் சித்தர் வடிவில் சென்று அவனைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றார். தாமரைக் குளத்தில் அவன் முழுகி எழுந்து பார்வதி மணாளனை வணங்கி வழிபட்டு மன நிறைவோடு திரும்பிச் க்சன்றான்; வடக்கு வழியிலேயே அவனைப் போகவிட்டுக் கோபுர வாயிலின் பெருங் கதவுகளுக்குத் தாளிட்டு இடப இலச்சனையை முத்திரையாக இட்டுத் தம் திருக்கோயில் விமானத்தை அடைந்தார்.

பொழுது விடிந்தது. தொழு பணி செய்யும் காவலா ளிகள் இடபக் குறி இட்டு இருப்பதைக் கண்டு திடுக்கிட் டனர்; கயற் குறி இருந்த இடத்தில் வேறு ஓர் அயற்குறி இருத்தல் கண்டு அரசனிடம் சென்று முறையிட்டனர். அக்காலத்தில் மதுரையை ஆண்டவன் இராசேந்திரன் ஆவுர்ன்.

இடபத்துக்கு உரியவன் இருடிகளின் தலைவனாகிய கயிலை மன்னன் என்பது அறிந்து எல்லாம் அவர் அழகிய

திருவிளையாடல் என உணர்ந்து எல்லை இல்லா மகிழ்ச்சி அடைந்தான். சைவ சமயம் ஓர் எல்லைக்கு உட்பட்ட தன்று; சோழநாடு பாண்டியநாடு மட்டும் அல்ல அரசுகள் எல்லாம் பேரரசு ஆகிய பெருமானின் முன் நில்லா என்பதை உணர்ந்தான்; சோழனையும் தன் ஆருயிர் நண்பனாக மதிக்கத் தொடங்கினான். யார் வந்து வணங்கினாலும் அதற்குத் தடைகூடாது என்று திருந்திய மனம் பெற்றான்.

## 35. தண்ணீர்ப்பந்தல் வைத்த படலம்

காடு வெட்டிய சோழனோடு பாண்டிய நாட்டு அரசனாகிய இராசேந்திரன் நல்லுறவு வளர்த்து அவன் நட்பைப் பெருக்கினான்; அவனும் அன்புக் காணிக்கையாக ஆபரணங்களையும் அழகிய ஆடைகளையும் தந்தான். அதற்கு ஈடாக வரிசைகள் சிலவற்றை அனுப்பினான். நட்பு இருவருக்கும் கொடுத்தல் வாங்கல் உறவுக்கு அடி கோலியது

சோழன் தன் மகளைப் பாண்டியன் இராசேந்திரனுக்குத் தந்து மணமுடிக்க நினைத்தான்; அதற்கு வேண்டிய பேச்சு வார்த்தைகள் தொடர்ந்தன. இதனை அறிந்த இராசேந்திரனின் தம்பி இராசசிங்கன் என்பவன் முந்திக்கொண்டான். அவனே சோழ நாட்டுக்குச் சென்று சோழன் திருமகளைத் தன் துணைவியாக ஆக்கிக்கொள்ள விழைந்தான்; அதற்காக அவன் தலைநகராக இருந்த காஞ்சி நகருக்கு நேரிற்சென்றான். வீடு தேடி வந்த வேந்தனுக்குத் தன் மகளைக் கொடுக்க முடிவுசெய்தான்; இளையவனுக்குத் தன் மகளை மணம்செய்து தந்தான்.

தமையனுக்கு அழைப்பு அனுப்பாமலேயே மணம் முடித்துக் கொண்டனர்.

பெண்ணைக் கொடுத்ததும் மாமனும் மருமகனும் புது உறவு கொண்டு தமையனைத் துறக்க முடிவு செய்தனர். அவனுக்குத் துரோகம் விளைவிக்க முனைந்தனர். சோழர் படை கொண்டு இராசேந்திரனை வீழ்த்தி ஆட்சியைக் கைப்பற்றுவது என அவன் தம்பியோடு உடன் பாட்டைச் செய்து கொண்டான்; சோழன் படை பாண்டிய நாட்டை நோக்கிச் சென்றது. கடல்போல் குமுறிக்கொண்டு வந்த சேனையைப் பாண்டியன் எதிர்க்கும் ஆற்றல் இல்லாமல் சோமசுந்தரர் திருக் கோயில் முன் சென்று முறையிட்டான்.

''கவலைப்படாதே உன் படைகொண்டு அவனிடம் போரிடு; நான்வந்து உதவுகிறேன்'' என்று அசரீரி வழியாக இறைவன் கூறினார். கடலில் சங்கமிக்கும் நதி எனப் பாண்டியன் சேனை எதிரியின் படைகளைச் சந்தித்தன. சோமசுந்தரரின் அருளால் பாண்டியன் படைகள் பன் மடங்காகச் சோழன் படைகளுக்குப் புலப்படும்படிச் செய்தார். இச் சேனையைக் கண்டு மலைந்துவிட்ட சோழனின் சேனைகள் சோர்ந்துவிட்டன. இரு திறத் தினரும் போர் செய்து களைத்துவிட்டனர். குடிக்கவும் நீர் இன்றி அல்லல் பட்டனர்.

சோமசுந்தரர் பாண்டியர் சேனைக்கு இடையில் தண்ணீர்ப்பந்தல் வைத்து அவர்களுக்கு மட்டும் குடிக்க நீர் தந்து உதவினர்; தனி ஒருவராக இருந்து அனைவ ருக்கும் நீர் உதவினார்.

எதிரியின் படை குடிக்க நீர் கிடைக்காமையால் போர் செய்ய முடியாமல் துவண்டு தோற்றது. காடு வெட்டியும்

வெற்று வேட்டு ஆகிய இராசசிங்கமும் சிறைப்பட்டனர். காவலர்கள் அவர்களைக் கட்டி இழுத்து வந்தனர். அவர்களை என்ன செய்வது என்று தெரியாமல் சுந்தரரிடம் முறையிட்டான்.

''அறம் பிழைக்க மாட்டாய் நீ; அறிவுள்ள உனக்கு நான் சொல்ல வேண்டியதில்லை; நீயே முடிவு செய்து கொள்'' என்று இறைவன் அசரீரியாக அறிவித்தார். பகைவனை மன்னிக்கும் பண்பு அவனிடம் இருந்தது; சோழனை விடுதலை செய்து யானை தேர் குதிரை பொருள் சில தந்து நீ போய் ஊர் சேர்'' என்று கூறி அனுப்பி வைத்தான்.

தன் தம்பியையும் மன்னித்து அவன் செல்வத்தையும் செருக்கையும் களைந்து அவனை அடக்கி ஆணவம் நீக்கி விட்டான்.

## 36. இரசவாதம் செய்த படலம்

பாண்டிய நாட்டில் திருப்பூவணம் என்னும் சிவத் தலத்தில் ஆடல் பாடல் அழகு இம்மூன்றும் கூடிய நடனக் காரி ஒருத்தி இறைவனிடம் ஆழ்ந்த பற்றும் அடியாருக்குத் தொண்டும் செய்து வந்தாள். தான் ஈட்டும் பொருளை எல்லாம் தன்னை நாடி வரும் சிவ பக்தர்களுச்குத் தந்து அவர்களைப் போற்றி வந்தாள்.

தான் சிவனுக்கு ஒரு திருஉருவம் செய்ய வேண்டும் என்று விரும்பினாள். அப்படிவம் செய்யத் தன்னிடம் போதிய பொன் இல்லையே என்று கவலை கொண்டாள். இறைவனிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து வேண்டு கோள் விடுத்தாள்.

இறைவன் சித்தராக எழுந்தருளி அவள் வீட்டு விருந்தினராக வந்தார். "நாளும் இளைத்து வருகிறாயே ஏன்? என்று கேட்டார்.

"சுந்தரனுக்கு ஒரு படிவம் அமைக்க வேண்டும் என்று கரு வைத்திருக்கிறேன். அதற்கு வேண்டிய பொன் என்னிடம் இல்லை. அது கிடைக்காமையால் ஏற்பட்ட ஏக்கம்" என்றாள்.

"அதனைப் போக்குவது என் கடமை; வீட்டில் உள்ள பித்தளை, செம்பு, ஈயப் பாத்திரங்களைக் கொண்டு வா" என்றார்.

அவளும் அவ்வாறே கொண்டு வந்து குவித்தாள். அவற்றின்மீது சித்தர் விபூதி தெளித்தார். இவற்றைப் புடம் இட்டு எடுத்துப்பார்; அவை உருகிப் பைம்பொன் ஆகும்" என்றார்.

அவளும் அவ்வாறு செய்வதாக விடை தந்தாள். விடையவனைச் சித்தர் எனவே நினைத்து அவர் அடிகளில் விழுந்து வணங்கி அவரிடம் பொன்னம்மாள் "தின்ன உணவு உண்டு; அருந்திச் செல்க" என்று வருந்தி அழைத்தாள்; அவர் கிடைத்தற்கு அரிய மருந்து என மறைந்து விட்டார்.

அவளும் அவர் சொன்னபடி வீட்டில் உள்ள எல்லாப் பாத்திரங்களையும் பொன்னாக மாற்றி இறைவடிவம் செய்து நிறை உள்ளத்தோடு வழிபட்டாள். அவ் விக்கிரகத்தைக் காதல் சிறுவனைப் போல் கட்டி அணைத்து முத்தமிட்டாள். அவள் நகக்குறி அதில் படிந்தது. தேரிலே வைத்து அதை ஊர்வலம் போகச் செய்து திருவிழாவும் எடுத்தாள்.

அவள் வாழ்நாளுக்குப் பிறகும் அத்திரு உருவம் யுகத்தின் மாற்றத்துக்கு ஏற்பப் பொன் நிலை மாறித் தன் நிலை கெட்டுப் பல உலோகங்களில் நிலைத்து நின்றது. இன்னும் இது பொன்னம்மாள் வடித்த உரு என்று பேசப் பட்டு வழிபாடு பெற்று வருகிறது.

## 37. சோழனை மடுவில் வீட்டிய படலம்

இராசேந்திரனுக்குப் பிறகு அவன் மரபில் வந்தவன் சுந்தரேச பாதசேகரன் என்பான். நாட்டில் வரிப்பணத்தில் ஈட்டியவை கொண்டு சிவப்பணிக்கே செலவிட்டான். நாட்டுக்காவலுக்குத வேண்டிய சேனைகளைத் திரட்ட வில்லை. படை பலம் குறைந்திருந்த அவனைச் சோழன் முற்றுகை இட்டான். 'ஆயிரத்துக்கு ஒரு வீரன்'' என்று புகழப்பட்ட அச்சோழன் முன் இவன் நிற்க முடியவில்லை. இவன் இறைவனிடம் முறையிட அவர் 'அனைத்துக்கும் ஒரு வீரன்'' என்று அறிவித்துக் கொண்டு வேடுவத்தலை வனாக வந்து அவர்களை விரட்டி அடித்தார். அவர் தலை மறைந்ததும் மறுபடியும் சோழன் வந்து தாக்கத் தொடங்கினான்.

இறைவன் சோழனுக்குத் தக்க அறிவு வரவில்லை என்பதால் அவன் அழிவிற்கு வழி செய்தார். இருவரும் மடு ஒன்றில் விழுந்து தவித்தனர். பாண்டியன் இறை அருளால் கரை ஏறினான்;சோழன் ஏறமுடியாமல் இறந்து ஒழிந்தான். மடுவில் வீழ்த்தி அவனை ஒழித்துக் கட்டினார்.

## 38. உலவாக் கோட்டை அருளிய படலம்

நல்லான் என்ற வேளாளன் ஒருவன் மதுரையில் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி பெயர் தருமசீலை என்பது இருவரும் விளைந்த நெல்லைக் கொண்டு இல்லை

எண்ணாமல் பசித்தவர்க்கு உணவு தந்து அறம் பல செய்தனர். சோதனை உண்டாக்க அவர்களுக்கு வறுமை தந்து வேதனை உண்டாக்கினார் இறைவன்.

கொடுத்துப் பழகிய அவர்களுக்கு வறுமை நிலை தடுத்து நிறுத்தியது. இந்த இழி நிலையை வெறுத்து இறைவனிடம் ''பொருள் தருமாறு வேண்டினர்; இல்லா விட்டால் தன் உயிர் விடுப்பதாக அச்சுறுத்தினார்.

அவர்கள் உறுதியைக் கண்டு இறைவன் அவர்கள் அறம் செழிக்க எடுக்க எடுக்கக் குறையாத 'உலவாக் கோட்டை' என்ற சேமிப்பு உறையைத் தந்தருளினார்.

அவர்கள் தொடர்ந்து அறம் செய்து வாழ்ந்து இறைவன் அருளைப் போற்றி வாழ்ந்து முடித்தனர்.

## 39. மாமனாக வந்து வழக்குரைத்த படலம்

மதுரை நகரில் செட்டித் தெருவில் வணிகன் ஒருவன் செல்வனாய் வாழ்ந்து வந்தான். அவன் பெயர் தனபதி; அவன் மனைவியின் பெயர் சுசீலை. மக்கட்செல்வம் இன்றித் தன் தங்கையின் மகனைத் தத்து எடுத்து வளர்த்த னர். குழந்தை தன் உடைமை ஆகியதும் தன் தங்கையை அவனும் அவன் மனைவியும் மதிக்காமல் புறக்கணித்தனர்.

அவளுக்கு அதைத் தாங்கிக் கொள்ள இயலவில்லை; தன் மகனைக் கேட்டுத் திரும்பப் பெற்றுக் கொண்டாள். அதற்குப் பிறகு அவர்களுக்கு அந்த ஊரில் இருக்கப் பிடிக்கவில்லை. தன் சொத்து முழுவதையும் அந்தச் சிறுவனுக்கு எழுதி வைத்து விட்டுத் தேசாந்திரம் போய் விட்டனர். சென்றவர்கள் திரும்பி வரவே இல்லை.

தங்கையின் கணவரும் இறந்து விட்டார்; அந்தக் குடும்பத்திற்கு ஆண்திக்கு இல்லை; அதனால் அந்தச் செல்வனின் தாயாதியர் முரடடுத் தனமாக அவள் சொத்துக்களைக் கைப்பற்றி அவர்களை ஆதரவு அற்ற வர்களாக்கி விட்டனர்.

அவள் இறைவனிடம் சென்று முறையிட்டாள். நீ அவர்கள் மீது வழக்குத் தொடு; நான் வந்து உதவுகிறேன்' என்று கனவில் வந்து கூறினார்.

அதன்படி துணிந்து அவர்களை வழக்கு மன்றத்தில் கொண்டு வந்து நிறுத்தினாள். இறைவன் அச்சிறுவனின் மாமன் வடிவில் வந்து சாட்சி சொன்னார்.

''யான் போட்ட அணிகள் என்ன ஆயிற்று?முடிக்குப் போட்ட தலைமுடி என்ன ஆயிற்று? கழுத்துச் சங்கிலி எங்கே? பட்டு உடை தந்தேன்; இன்று துட்டு எதுவும் இல்லாமல் துவள்கின்றாய். என் சொத்து உனக்கு என்று எழுதி வைத்தேன். அதுமட்டுமல்ல நான் உயிரோடு இருக்கும்போது தாயாதியர்க்கு என்ன உரிமை இருக்கிறது'' என்று வழக்குப்பேசினார்.

அவர்கள் இவன் போலி மனிதன் என்று வற்புறுத்தினர் அவர்களிடம் அவர்கள் வாழ்க்கையில் ஏற்பட்ட மறக்க முடியாத நெருக்கமான நிகழ்ச்சிகளைச் சொல்லித் தான் தான் மாமன் என்பதைக் கூறினான்.

தாயாதியர் தோல்வி அடையத் தங்கை அண்ணனை வீட்டுக்கு அழைத்தாள். சிவபெருமான் தன்பணியை முடித்துவிட்டு மறைந்து விட்டார். சாட்சி சொன்னது இறைவன் என்பதை அறிந்து வியப்பையும் மகிழ்ச்சி யையும் கொண்டனர்.

# 40. வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலம்

வரகுணபாண்டியன் நல்லாட்சி செய்து நாட்டைக் காத்து வந்தான். வேட்டை ஆடக் காட்டை நோக்கிச் சென்றான்; இரவுப் பொழுதில் காட்டில் வழியில் படுத்து இருந்த பார்ப்பனன் ஒருவன் நித்திரை செய்ய அவன் மீது குதிரை தன் காலைப் பதித்தது. அவன் பரலோகம் சென்றான். அதனை அறிந்திலன். அரண்மனை அடைந்த அரசன் விழித்து எழுந்தபோது அந்தப் பார்ப்பனனின் உடலத்தைச் சுமந்து கொண்டு அவன் சுற்றத்தினர் அவன் முன்பு வைத்து நடந்தவைகளை எடுத்து உரைத்தனர். வேண்டிய பொருள் ஈடாகக் கொடுத்து அவர்களைச் சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தான். எனினும் பிராமணனைக் கொன்ற பாவம் அவனை விடுவதாக இல்லை. பிரம கத்தி அவனைப் பிடித்துக் கொண்டது. அவனை விடாமல் பின் தொடர்ந்தது.

சோமசுந்தரர் திருச்சந்நிதிக்குச் சென்று வழிபட்டு வருந்தினான். கோயில் சுற்றி அங்கப் பிரதட்சணம் செய்து தன்னை வருத்திக் கொண்டான். பிரம்மகத்தி தீர என்ன என்ன தானங்கள் செய்ய வேண்டும் என்று பிராமணர்கள் கூறினார்களோ அவ்வளவையும் செய்து முடித்தான். தின்றது தான் மிச்சம்; கொன்றது அதன் பாவம் அவனை விடவில்லை. மீண்டும் சிவன் திருக் கோயில் சென்று முறையிட்டான்.

தவறு நினைந்து வருந்தினான். அவனை மன்னிப்பது தம் கடமை என முடிவு செய்து அசரீரி வாக்கால் அவனுக்கு வழி காட்டினார்.

''நீ உன்னை எதிர்த்த சோழராசனுடன் போர் செய்வாய்; அவனைத் துரத்திக் கொண்டு காவிரி நாட்டை

அடைவாய்; அவன் புறமுதுகிட்டு, அவன் உயிர் தப்பி ஓடுவான். அவனைத் துரத்தும் நீ வழியில் நம்மையே நாம் பூசிக்கும் தலமாகிய திருவிடைமருதூரில் பாவச் சுமை உன்னைவிட்டு நீங்கப்பெறுவாய் பிரம்மகத்தி உன்னைத் தொடராது; புண்ணியனாய் நீ திரும்பி வருவாய்'' என்று. கூறி அருளினார்.

அவ்வாறே சோழனோடு போர் இட்டு அவனைத் துரத்திக் கொண்டு காவிரி நதியை அடைந்தான். அங்கே நீர்த்துறையில் முழுகி அந்நதியின் தென் கரையில் உள்ள திருவிடைமருதூருக்குச் சென்று அக்கோயிலின் கிழக்கு வாயிலைக் கடந்து சென்றார். சென்றதும் அவனைப் பிடித்து வருத்திய பிரம்மகத்தி கோயிலின் புறத்தே அங்கேயே நின்று விட்டது. மறுபடியும் அவன் வருவான் என்று வாயிலில் காத்து இருந்தது. அவனை மேற்கு வாயில் வழியாக மதுரைக்கு வரும்படி ஆண்டவர் வாக்குக் கேட்டது. மேலைக் கோபுரத்திற்கு அரிய சில பணிகள் செய்தும், இங்கே கோயில் திருப்பணிகள் சில செய்தும், அங்கே சில நாட்கள் தங்கி இருந்து பின் மதுரை வந்து சேர்ந்தான்.

பாவம் நீங்கிய புண்ணியனாய்த் திரும்பிய அரசனுக்குப் புது ஆசை ஒன்று உண்டாகியது. புராணங்களில் சிவலோகத்தைப் பற்றிச் சிறப்பித்துப் பேசுவதைக் கேட்டிருக்கிறான். வாழும் போதே அந்தச் சிவ லோகத்தை ஏன் காணக் கூடாது என்ற ஆசை தோன்றியது.

இறைவனிடம் தன் ஆசையை வெளியிட்டான் அதைத்தீர்ப்பதற்கு மதுரைத் திருக்கோயிலைச் சிவ பெருமான் சிவலோகமாக நந்தியைக் கொண்டு

மாற்றினார். கைலயங்கிரிக் காட்சிகளை அவன் மதுரையிலேயே காணமுடிந்தது அங்கே நடக்கும் பூசைகளையும் சிவ வழிபாடுகளையும் இங்கேயே கண்டான். பிறகு அவனுக்கே அந்தக் கற்பனையில் வாழ விருப்பம் இல்லாமல் போய்விட்டது. மறுபடியும் அவன் வேண்டுகோள்படி அம் மனக் காட்சியை இறைவன் மறைத்தருளினார்.

இந்தக் கதையில் ஓர் ஐயம் கேட்பவர்க்கு உண்டாயிற்று. அகத்தியர் இந்தக் கதையைத் தம் மாணவர்க்கு எடுத்து உரைத்தார்.

மதுரைத் திருத்தலத்தில் தீவினைகள் தீராவோ திருவிடை மருதூருக்கு அவனை அனுப்பி வைத்து அவன் பாவச் சுமையைக் கழிப்பித்தது ஏன் என்று கேட்டனர்.

சிவன் உறையும் தலங்கள் அனைத்தும் சீர்மை மிக்கன என்று அறிவுறுத்தற்கும், பாவச் சுமை இங்கேயே குறையும் என்றால் மதுரை நகரத்து மகாஜனங்கள் நிறையப் பாவம் செய்யத் தொடங்குவார்கள்; அதனால் எதையும் செய்யலாம் என்று துணிவார்கள்; அவர்களுக்கு அந்த எண்ணம் உண்டாகக் கூடாது என்பதற்கும் இறைவன் அவனைத்திருவிடை மருதூர்க்குத் திசைதிருப்பியது என்று அகத்தியர் விளக்கிக் கூறினார்.

## 41. விறகு விற்ற படலம்

வரகுணன் ஆட்சிக்காலம்; ஏமநாதன் என்னும் இசைக் கலைஞன் வருகை தந்தான். அரசவையில் அரசன் செவி குளிர யாழிசை வாசித்தான்; அதிமதுர இசை கேட்டு அவனைப் பாராட்டிப் பரிசும் வரிசையும் தந்து

அனுப்பினான்; அவனை அங்கே மதுரையில் தங்குவதற்கு வேண்டிய வசதிகளையும் அமைத்துத் தந்தான். சீடர்களும் சிறப்புப் பெற்றார்கள். அவர்களுக்கு உல்லாசமான வாழ்க்கை கிடைத்தது. அரசன் அவர்களுக்கு விருந்து வைத்து உபசரித்து மகிழ்ந்தான்.

அந்நியன் ஒருவன் என்றும் பாராது அவனை வரவேற்ற போதும் அவன் தன்னியல்பு கெட்டு நிலை கெட்டுச் செருக்கும் கொண்டான்; அரசன் தன்னை மதித்தது சம்பிரதாயம் பற்றி என்று கொள்ளாமல் தன்னைச் சரித்தர புருஷன் என்று நினைத்துக் கொண்டான்; அரசன் தன்னை மகிழ்வித்தது தனக்கு நிகராக இசை பாடுவார் இல்லாமையால் தான் என்று சிந்திக்கத் தொடங்கினான். மேலும் அதனைச் சிலரிடம் சொல்லித் திரிந்தான்.

இது மானப்பிரச்சனையாக உருவெடுத்தது. தன் நாட்டில் யாழிசையில் வல்ல பாணபத்திரனை அழைப் பித்து'' நீ ஏமநாதனை யாழிசையில் வெல்ல முடியுமா?'' என்று கேட்டான். ''சோமநாதன் அருளும் தங்கள் ஆணையும் துணை செய்யின் அவனுக்கு இணையாகப் பாடி வெல்ல முடியும்'' என்றான் பாணபத்திரன். மறு நாளே இசைப் போட்டிக்கு ஏற்பாடு ஆயிற்று.

வீடு சேரும் பாணபத்திரன் வீதிகளில் ஏமநாதனின் சீடர்கள் பாடுவதில் வல்லவராக அங்கங்கே பாடி மக்களைத் திரட்டுவதைப் பார்த்தான். அது கேட்டு உடல் வியர்த்தான். சீடர்களே இத்தகைய சீர்மை பெற்றிருக்கும் போது அவர்கள் குரு எத்தகையவனாக இருப்பானோ என்று அஞ்சினான். ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டோம் என் செய்வது என்று கவலை கொண்டான்;

அரசன் ஆணையையும் மீற முடியாது. அஞ்சி ஓடவும் முடியாது. என்ன செய்வது, நாதன் தான் தனக்குத் துணைசெய்ய வேண்டுமென்று வழியில் கோயிலுக்குச் சென்று ஓலமிட்டுத் தன்னை இக்கட்டிலிருந்து விடுவிக்குமாறு வேண்டினான். வீடு சேர்ந்தான்.

திக்கெட்டும் புகழ் படைத்த ஏம நாதன் இசை பாடி அவன் வெற்றி பெறுவதற்கு முன் இறைவன் அதே அச்சத்தை அவனுக்குத் தோற்றுவிக்க ஓர் உபாயம் மேற்கொண்டார். வயது முதிர்ந்த மூத்த யாக்கையோடு தலையில் விறகு சுமந்து வீதிதோறும் சென்று அந்த ஏமநாதன் வீட்டுத் திண்ணையில் சுமையை இறக்கி வைத்து இளைப்பாறி இன்னிசை பாடினார்; தேனினும் இனிய கானம் ஏமநாதன் காதில் வந்து துளைத்தது. தமிழும் குழைத்துப் பாடியதால் அது அமிழ்தம் என இசைத்தது. வெட்டியாள் யாரோ பாடுகிறான் என்று எட்டிப் பார்த்தான்; அது விறகு வெட்டி என்பதை அறிந்தான்.

கந்தல் துணியும், அழுக்குத் தலையும், நரை திரை கண்ட யாக்கையும், அழுக்கும் வியர்வையும் படிந்த மேனியும் உடைய அவன் நாதம் மட்டும் கீத ஒலியாகக் கேட்கிறதே என்று வியந்தான்.

''யார்?'' என்று அவன் பேர் கேட்டான்.

'இதுவரை யாரும் என்னை முழுவதும் அறிய மாட்டார்கள்'' என்றார்.

''ஊர் பேர் சொல்ல வேண்டாம், இசை எங்குக் கற்றாய்? அதுவாவது சொல்'' என்றான்.

இசை கற்கு ம பாண பத்திரனின் மாணாக்கரில் ஒருவன் யான்; அவரிடம் இசை கற்கச் செல்வதுஉண்டு. அவர் என்னைப் பார்த்து ''நீ தசை எல்லாம் ஒடுங்க மூத்தாய்; இசைபாடுவதற்கு நீ இசைக்க மாட்டாய்; மூப்படைந்த நீ யாப்பமைந்த பாட்டைப் பாட இயலாது; காட்டில் விறகு தேடி எங்காவது பிழைத்துப் போ என்று என்னை அனுப்பி விட்டார். அவ்வப்பொழுது அவரிடம் கேட்டபாடல்கள் சில எனக்குப் பாடம் உண்டு; அதைப் பாடுவதும் எனக்குப் பெருமை சேர்க்கும். நான் கண்டபடி பாடுவதில்லை; நிமலனை நினைத்துத் தான் பாடுவது வழக்கம். நீலகண்டனைப் பாடுவது தான் எனக்கு வழக்கம்'' என்றார்.

''நீ பாடிய பாடலைத் திரும்பப் பாட முடியுமா?'' என்றார்.

''பக்க இசை இல்லை என்றாலும் தக்க குரலில் யான் பாட முடியும்'' என்றார்.

''உன் பாட்டைக் கேட்டு நான் கிறுகிறுத்து விட்டேன். அதை மீண்டும் கேட்க விழைகிறேன்'' என்றான்.

யாழும் அவன் உடன் கொண்டு வந்திருந்ததால் அதை மீட்டிக் குரலும் யாழும் இசையப் பாடினான்.

சுதி சேர்த்து உடல் அசைவு இன்றிக் குற்றங்கள் நீங்கிச் சித்திரப்பாவை போல் அசையாமல் சாதாரிப் பண்ணில் ஒரு பாடலைப் பாடினான்.

மலரவனும் மாலும் அறியாத மதுரை நாயகனின் மலர்ப்பதத்தைச் சிறப்பித்துப் பாடினான். இறைவன்

பாடிய இசை உலகம் எங்கும் நிறைந்து ஒலித்தது. இசை ஒலி எழுந்தபோது மரம் செடி கொடிகள் அசையவில்லை கடலும் ஒலி அடங்கியது; நதிகளும் தன் ஓட்டம் தணிந்தது; விஞ்சையரும் தலை குனிந்தனர்; தேவர்கள் கேட்டு அவ்உலகமே இன்பத்தில் அமிழ்ந்தது; ஏமநாதன் புளகித்துப் போனார்; உரோமம் சிலிர்த்தது; நெஞ்சும் நினைவும் இசை வெள்ளத்தில் முழுகியது; அதிலிருந்து கரை ஏற முடியாமல் தவித்தான். திண்ணையில் தூங்கிய விறகுச் சுமையாளன் விண்ணையும் கவரக்கூடிய இசை பாடினார். பின் அந்த இடத்தைவிட்டு மறைந்து தன் திரு உரு ³வக் கலைத்தான்.

உள்ளே சென்ற ஏமநாதன் அந்தச் சாதாரிப் பண்ணைப் பற்றிச்சிந்திக்கத் தொடங்கினான். தமிழ் மண் இசையோடு பிறந்தது; அதன் பண் ஈடு இணையற்றது. இதனைப் பாடியவன் சந்தனம் கமழும் மார்பும் பட்டு பீதாம்பரம் உடுத்திய படாடோபமும் உடையவன் அல்லன்; வயதில் மூத்து வாழ்க்கையின் கரை ஓரத்தில் ஒதுக்கப்பட்டவன்; யாரும் அக்கரை காட்டாதவன்; ஒதுக்கப்பட்டவனே இவ்வளவு சீரும் சிறப்புமாகப் பாடுகிறான் என்றால் அவன் ஆசிரியர் எவ்வளவு புலமை வாய்ந்தவனாக இருக்கமுடியும் பாணபத்திரன் சிந்திய சோற்றைத்தின்று வளர்ந்தவனே பத்தடி பாய்கின்றான் என்றால் அவனை வளர்த்தவன் நூறு அடி பாயாதிருக்க மாட்டான். சிறுத்தையே சீறுகிறது என்றால் அதைப் பெற்று ஆளாக்கிய புலி எப்படிப் பாயும் என்று அஞ்சினான். 'பாணபத்திரன்' அந்தப் பெயரே பாணிசை பாடுகிறது. சிங்கத்தின் குகையில் யானை வலிய தலையிட்டுக் கொள்வது போலத்தான் இருக்கிறது வலிய நாமே இசைப் போட்டியில் மாட்டிக் கொள்வது. 'வந்தோமா கொடுத்ததைப் பெற்றுக் கொண்டோமா என்று இல்லாமல்

வாய்க் கொழுப்பால் வம்பினை விலைக்குப் பேசி வாங்கி விட்டோம். நாளை இசைப் போட்டியில் கலந்து கொள்வதை விடத்தவறான செய்கை வேறு இருக்க முடியாது. இருள் அகலும் முன் நாம் அனைவரும் அகன்று போய் விடுவதுதான் அறிவுடைமை என்று தீவிரமாகச் சிந்தித்தான்.

தன் சீடர்களிடம் தான் கேட்ட இசையின் பெருமையை வாய்விட்டுப் பாராட்டிக் கூறினான். அவர்கள் துட்டைக் காணோம், துண்டைக் காணோம் என்று சொல்லிவிட்டு வேகமாக வெளியேறச் செயல் பட்டார்கள். மூட்டை முடிச்சுகளை எடுத்துக் கட்டிக் கொண்டு இரவோடு இரவாய் அரசனிடமோ ஆத்தான அதிகாரிகளிடமோ எதுவும் சொல்லிக் கொள்ளாமல் வடபுலம் நோக்கி வந்த வழியே கம்பி நீட்டினர்.

அன்றிரவு பாணபத்திரன் கனவில் இறைவன் வந்து நடந்ததைக் கூறி ''இனி ஏமநாதன் இசை வாதுக்கே வரமாட்டான்'' என்று அறிவுறுத்தினார். பாணபத்திரனுக்கு அடிமை என்று சொல்லி விறகு ஆளாய்ச் சென்றதை எடுத்துச் சொல்லினார். அவன் அஞ்சி ஊரைவிட்டே ஓடி விட்டதையும் கிளத்தினார்.

பாணபத்திரன் இறைவன் தனக்காக விறகு சுமக்க நேர்ந்ததே என்று வருந்தினார். தமிழ் நாட்டின் இசைப் பெருமையைக் காக்க இறைவன் செய்த ஆக்கத்தைக் கண்டு இறும்பூது எய்தினான். அவர் விறகு சுமந்ததை விடத் தான் தோல்வியைச் சுமந்து இருக்கலாமே என்று கூறி வருந்தினான். ஏமநாதன் சென்றான் என்பதைவிடச் சோமநாதன் விறகு சுமந்தான் என்பது கேட்கவே சோகமாக இருக்கிறதே என்று துக்கித்தான்.

மறுநாள் அரசன் ஆணைப்படி பத்திரன் அரச அவைக்கு வந்தான். ஏமநாதனுக்கு ஆள் அனுப்பப் பட்டது. அவன் முகவரியே இல்லாமல் இரவோடு இரவாக அஞ்சி ஓடிவிட்டதை அறிந்தான். பாணப்பத்திரன் கனவில் வந்த இறைவன் காட்சியையும் அவர் சொல்லிய உரை களையும் விடாமல் சொல்லித் திருவருளின் துணையை விளக்கினான்.

பாண்டியனும் இறைவன் காலடிகள் நோகக் கடும் வெய்யிலில் விறகுகளைச் சுமக்க வைத்ததற்காக வருந் தினான். அவர் வாயால் நாத இசை எழுந்து ஏமநாதன் புறங்கண்டது அவனுக்கு மகிழ்ச்சியைத் தந்தது. பாண பத்திரனுக்குச் சிறப்புகள் செய்து பொன்னும் பொருளும் தந்து பாராட்டினான். அவனும் அவற்றைத் தக்க மாணாக்கர்களுக்குப் பகிர்ந்து அளித்துப் பரமன் அடி நினைத்து வாழ்ந்தான்.

## 42. திருமுகங் கொடுத்த படலம்

இறைவன் விறகு வெட்டியாக வந்து பாணபத் திரனுக்கு அருள் செய்தமையின் இறைவனையே பாடும் தொழிலை அவன் மேற்கொள்ளும்படி வரகுண பாண் டியன் அறிவுறுத்தினான். அதன்படி கோயிலுக்குச் சென்று முப்பொழுதும் அவன் புகழ் பாடுவதையே நியமமாகக் கொண்டான். அரசன் திருமுன் சென்று அவையில் பாடுவதை நிறுத்திக் கொண்டான். அதனால் வருவாய் இழந்தான்.

வருவாய் இன்மையால் வறுமை வந்து சேர்ந்தது. அவனுக்குப் பொருள் தந்து ஆதரிக்க இறைவன் திருவுளம் கொண்டார், அரசனின் பண்டாரத்தில் இருந்து ஆபர ணங்களையும் பொருளையும் மணியையும் கொண்டு

வந்து அவன் முன் வைத்தார். அதை ஆண்டவனால் அளித்த சன்மானம் என்று வீட்டுக்கு எடுத்துச் சென்று பொன்னையும் உயர் அணிகலன்களையும் விற்றுப் பொருளாக்கித் தானும் உண்டு. தன் சுற்றத்தாருக்கும் தந்து விருந்தினருக்கும் போட்டுச் சேர்த்து வைக்க வேண்டுமென்ற எண்ணமில்லாமல் வாழ்ந்து விட்டான்.

சில நாளில் அவனுக்குச் சோதனை தர இறைவன் பொருள் கொடுப்பதை நிறுத்திவிட்டார்; எனினும் அவன் கோயிலுக்கு வந்து பாடுவதை நிறுத்தவில்லை, நித்திரையில் வந்து அவன் மனத்திரையில் இறைவன் தோன்றி "இதுவரை பாண்டியனின் பொருளைக் கொண்டு வந்து கொடுத்தோம்; பொருள் இருந்த அறையையே காலி செய்து விட்டாய்; நிறைந்திருந்த பொருள் எங்கே என்று பாண்டியன் தேடுவான்; மனம் வாடுவான்; காவலரைச் சாடுவான்; இனி எடுப்பது உகந்தது அன்று.

என் அன்பன் சேரனுக்குத் திருமுகம் தந்து அவனுக்கு உன்னை அறிமுகம் செய்கிறேன்;அவன் உனக்கு வேண்டிய செல்வம் விரும்பித் தருவான்; அதனைப் பெற்று ஊர் திரும்புக" என்று சொல்லித் திருமுகப்பாசுர ஓலையை அவன் கையில் சேர்த்து மறைந்தருளினார்.

திருமுகம் எடுத்துக் கொண்டு மலைநாடு கடந்து திருவஞ்சைக் களத்தை அடைந்து அங்கே ஒரு தண்ணீர்ப் பந்தலில் காத்திருந்தான். சேரனின் கனவில் இவன் வருகையை இறைவன் அறிவித்திருந்தார்.

ஏவலரை அனுப்பி அவ்இசை வல்லவனைச் சேரன் யானை மீது ஏற்றி அழைத்து வந்தான். வந்த விருந்தினரை மாளிகையில் தங்கவைத்து உணவு தந்து உபசரித்தபின் பொன்னறையைத் திறந்து காட்டி "பாணபத்திரரே! செல்வம் முழுவதும் நீர் காண இங்கு வைத்திருக்கிறேன்; மேகம் நாண யாம் தரும் செல்வம் அனைத்தும் நீவிர் எடுத்துக் கொள்ளலாம்" என்றார். அவர் தமக்கு வேண்டியதை மட்டும் எடுத்துக் கொண்டு எஞ்சியதை அங்கு விட்டுவைத்து வீடு திரும்பினார். தம்மை நாடி வந்த புலவர்க்கும், கூடி மகிழும் சுற்றத்தவர்க்கும், வாடி வருந்தும் அறிஞர்க்கும், கேடு நீங்கிய நல்லோருக்கும் தந்து பங்கிட்டு வளமாக வாழ்ந்தான்.

## 43. பலகையிட்ட படலம்

பாணபத்திரன் செல்வம் வந்தபோதும் அவன் சிவனை வணங்குவதில் குறைந்தது இல்லை; நடு இரவிலும் சென்று யாழிசை மீட்டு நாதனைப் பாடுவதில் சலிப்பு அடைந்த தில்லை. சிவனார் நள்ளிரவில் முத்துச் சிவிகையில் ஏறி யாழிசை கேட்டுக் கொண்டு திருப்பள்ளியறைக்கு எழுந்தருளினார். அங்கே நாதன் தாள் வாழ்த்திப் பாணபத்திரன் பாடிக் கொண்டே இருந்தான். அடாது மழை பெய்தாலும் விடாது பாடுவது அவன் வழக்கமாக இருந்தது. அவன் தீவிர ஈடுபாட்டையும், பாடும் இசைப் பாட்டையும் மக்களும் நாடும் அறியவேண்டும் என்பதற்கு ஒரு நாள் நள்ளிரவில் கொள்ளை மழை பெய்வித்தார். பள்ளத்தில் நீர் நின்றாலும் அதை உள்ளத்தில் கொள்ளாது நின்று நிலைத்துப் பாடிக் கொண்டேயிருந்தார்.

பகை ஒன்று இட்டு அவரை அதில்அமர்ந்து பாட வைத்தார்; இறைவன் தந்த பலகை அவனைப் பள்ளத்தில்

இருந்து உயர்த்தியது. சேற்றில் கால் வைத்துப் பாடும் பாணபத்திரன் மேட்டில் பலகை மேல் நிற்க உலகு அறிந்து அவனைப் பாராட்டிப் போற்றியது.

அரசன் இது அறிந்து அவனை ஆத்தான இசைப் புலவன் ஆக்கிப் பரிசும் பொருளும் தந்து அவனைச் சிறப்பித்தார்.

## 44. இசைவாது வென்ற படலம்

வரகுணன் ஆட்சி முடிந்தபின் அவன் மகன் இராச ராசன் அரியணை ஏறினான். அவன் இன்பத்துறையில் எளியனாக நடந்து கொண்டான்; கட்டிய மனைவியர் இருந்தும் புதுமை விரும்பிய அவன் பதுமை நிகர் அழகியரைக் காமக் கிழத்தியராகக் கொண்டான். அவர்களுள் ஒருத்தி சங்கீதப் பிரியள்; பாடுவதிலும் வல்லவள்.

பாணபத்திரனின் மனைவி பாடிப் புகழ்பெற்றவள். அவ்வளைச் சாடி அவளோடு மோதிக் கொண்டாள்; பாணபத்திரன் மனைவியின் மீது பொறாமைகொண்டாள். பாண்டியனிடம் தன் மோதலை எடுத்துச் சொல்லி அவள் ஆணவத்தை அடக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டாள். இன்பம் தரும் காமக் கிழத்தியை மகிழ்விக்க அவன் விரும்பினான். ஈழ நாட்டில் இருந்து இசைபாடும் விறலி ஒருத்தியை வரவழைத்து அவளை ஊக்குவித்தான்.

விறலியை அழைப்பித்து நீ பாணபத்திரனின் மனைவியை இசைவாதுக்கு அழை; அதற்கு இசையாது இருந்தால் வம்புக்கு இழு; மறுத்தால் வசை மழை பொழிக'' என்று கூறினான். அது போலப் பாணனின்

மனைவியிடம் "நீ ஏனோ தானோ என்று இருக்காதே. ஈழ நாட்டுக்காரி அவள் இசைவாதுக் கழைத்தால் முடியாது; என்று சொல்லாதே பாட ஒப்புக்கொள்" என்றான். இருவரையும் மூட்டிவிட்டான். இசைப் போட்டி நடந்தது; ஈழ மகளே வெற்றி பெற்றதாக அரசன் ஒரு சார் தீர்ப்புக் கூறினான். அதை அவையோரும் ஆமோதித்தனர்.

"கவர்ச்சியால் தவறாகத் தீர்ப்பு அளித்தாய்; அவள் அழகி என்பதை ஒப்புக்கொள்கிறேன்; ஆனால் இசையரசி அல்ல" என்றாள்.

"மற்றொரு நாள் பாட வை; பார்க்கலாம்" என்றாள் பாடினி.

மறுநாளும் அதே தீர்ப்பு வழங்கப்பட்டது ,'மகேஸ்வரன் தீர்ப்புத்தான் ஏற்றுக் கொள்ள முடியும்; கோயில் முன் பாடுவோம்; அங்கே இந்த மகாசபையர் ஆண்டவனுக்கு அஞ்சித் தீர்ப்புக் கூறுவர்; நீயும் நடுநிலை பிறழ மாட்டாய்" என்றாள்.

"அப்படியானால் தோற்பவர் மற்றவர்க்கு அடிமை இதற்கு ஒப்புக்கொள்கிறாயா?" என்று அரசன்கேட்டான்.

"ஆண்டவனுக்கு அடிமையாகிவிட்ட என்னை யாரும் அடிமைப்படுத்த முடியாது. இறைவன் என்னைக் கைவிட மாட்டான்" என்றாள் பாடினி.

பாடினி இறைவன் திருக்கோயில்சென்றுமுறையிட்டாள். "கவலற்க பாடட்டும்; நாம் வந்து உதவுவோம்" என்று வாக்கு எழுந்து அவளை ஊக்குவித்தது.

இறைவன் இசைப்புலவர் வடிவில் அவையில் வந்து அமர்ந்தார். மூன்றாம் நாள் முடிவு கூறுவது நிச்சயம் என்று அனைவரும் காத்திருந்தனர்.

முதலில் விறலி பாடினாள்; அது கேட்க இனிமையாகவே இருந்தது; இருக்கையில் இருந்தவர்கள் அவள் பாடிய பாட்டுக்குக் காது கொடுத்தார்கள்.

பாடினி இறைவனை நினைத்துப் பாடிய பாட்டு நெஞ்சை உருக்கியது.

மிடற்று அசைவே இல்லாமல் தலையும் ஆட்டாமல் கண் இமைக்காமல் பல் வெளிப்படாமல் புருவம் நிமிராமல் கன்னம் தடியாமல் பாடிய மிடற்றிசை கேட்டு அவையோர் வியப்பும் திகைப்பும் மகிழ்வும் அடைந்தனர். பாண்டியனும் ஒருசார் பேச நினைத்தவன் கோயில் திருச்சபையில் நிலை தடுமாறவில்லை; முன்னே இருந்து இசைப்புலவனாக வந்த சோமசுந்தரரின் பார்வை அவன் மீது பட்டது; அது அவன் நெஞ்சைச் சுட்டது; அவன் காமவல்லியிடம் கொண்டிருந்த பற்று கெட்டது; கைதட்டி ஆரவாரித்துப் பாடினியைப் பாராட்டியது வானத்தைத் தொட்டது.

யாழிசைபாடும் ஈழநாட்டுப் பெண் தோல்வியை ஏற்றுப் பாடினி ஏறி அமரத் தோள் கொடுத்தாள். பாடினி வெற்றி அடைந்தும் அவள் ஆரவாரத்தைக் காட்டவில்லை. அவளை ஊக்குவித்த காமக்கிழத்தி வாயடங்கிப் போனாள். அரசனைத் தவறான பாதையில் திருப்பியதற்கு நாணினாள்.

வெளிநாட்டில் இருந்து அழைத்து வந்த ஈழத்து இசைக்காரியை அவமானப் படுத்தாமல் அவளுக்கு வேண்டியபொருள் கொடுத்துச் சமாதானப்படுத்தினான். பாடினிக்குப் பொருளே அன்றி வரிசைகள் தந்து சிறப்புச் செய்தான்.

## 45. பன்றிக் குட்டிக்குப் பால் கொடுத்தபடலம்

குரு விருந்து துறை என்னும் ஊரில் சகலன் என்னும் பெயரினன் ஒரு வேளாளன் இருந்தான். அவன் மனைவி சகலை என்பாள் பத்துக்கு மேல் இரண்டு புதல்வர்களைப் பெற்றாள். பன்றி குட்டிகளைப் போடுவதைப் போல் அளவு மிக்குப் பிள்ளைகளைப் பெற்றாள் அவர்களை வளர்ப்பதில் கருத்தும் கவலையும் செலுத்தவில்லை' செல்வம் கொடுத்து வளர்த்து அவர்களைப் பாழாக்கி விட்டார்கள். விதிவசத்தால் சதிபதிகள் இருவரும் உயர் கதி அடைந்து விட்டார்கள். அடக்குவதற்கும் அன்புடன் அணைப்பதற்கும் அன்னையும் தந்தையும் இல்லாமல் போய்விட்டார்கள்.

ஊர் சுற்றும் தறுதலைகளாக மாறிவிட்டார்கள். பெரியவர்களை மதிக்கும் பெருமை அவர்களிடத்தில் இல்லாமல் போய்விட்டது. தேவ குருவாகிய பிரகஸ்பதி அங்கே மதுரையில் தவம் செய்து கொண்டிருக்க அவருக்குத் தொல்லைகள் தந்தனர். கல்லெடுத்து எறிந்து அவர் சினச் சொல்லை எழுப்பி வைத்தார்கள். ''வேளாளராய்ப் பிறந்த உங்களைப் பிள்ளைகள் என்று சொல்வதை விடப் பன்றிகள் என்று தான் சொல்ல வேண்டும்' என்றார் அவர்.

நன்று என்று கூறி நகைத்தார்கள். ' பன்றிகளாகவே பிறக்கக் கடவீர்'' என்று சாபம் இட்டார். சாபம் கேட்ட வுடன் தாங்கள் செய்த பாவத்துக்கு வருந்தினர். வீணாகக் கோபத்தை எழுப்பிவிட்டோமே என்று அழுதவாறு சாபம் தீர வழி கேட்டனர். மறுபடியும் மனிதராக ஆக வேண்டு மானால் உங்களைப் படைத்த பிரமன் தான் வரவேண்டும்; நீங்கள் சோறு தண்ணீர் இன்றிப் பன்றிகளாகத் திரியும் போது உம்மீது இரக்கப்பட்டுச் சிவனே தாய்ப்பன்றியாக

வந்து முலை தந்து உம் நிலையை மாற்றுவார் அப்பொழுதுதான் உமக்கு விதித்த சாபம் தீரும்'' என்று சொல்லிப் போனார்.

அச்சாபத்தின்படி பன்றிக் குட்டிகளாக அவ்வூர்ப் புறங்காட்டில் பிறந்தனர். அவற்றின் தந்தையும் தாயும் பன்றி அரசனாகவும் அரசியாகவும் இருந்தனர்.

இராசராச பாண்டியன் வேட்டையாட வந்த போது காட்டு விலங்குகளைக் கலங்க வைத்தான்; பன்றிகள் பதறின; நான்கு பக்கமும் சிதறின. அவை அவர்கள் அரசன் அரசியிடம் வந்து கதறின. வீரம் மிக்க பன்றி அரசனை எதிர்ப்பது என்று முடிவு செய்தது. பன்றிகள் எல்லாம் ஒன்று சேர்ந்து குன்று போல் குவிந்து தாக்கின; இறுதியில் ஆண் பன்றியும் பெண் பன்றியும் போரிட்டு உயிர் துறந்து வீர சுவர்க்கம் அடைந்தன.

பால் கொடுக்க முடியாமல் பரமன் திருவடியை இப் பன்றிகள் அடைந்து விட்டபடியால் அதன் குட்டிகள் பன்னிரண்டும் அனாதைகள் ஆயின. அவை அழுத அழுகை மீனாட்சி அம்மையின் செவிகளில் பட்டது; அவர்களிடம் இரக்கங்காட்டும் அம்மையாரின் குறிப்பறிந்து உயிர்களின் பரமபிதாவாகிய இறைவன் பன்றியின் உரு வெடுத்து அவற்றிற்கு முலைப்பால் ஈந்தார்.

அடுத்த பிறவியில் மானிட உருவும் பன்றியின் முக மும் கொண்ட கலவைப் பிறப்பைப் பெற்றனர். அவர்கள் அமைச்சர்களாக இருந்து பணியாற்றினர்.

பன்றி போரில் பட்டு உயிர் துறந்த இடம் மலையாக மாறியது; பன்றிமலை என்று யோகிகளும் தவசிகளும்

அங்கு வந்து தங்கித் தவம் செய்து உயர்பேறு பெற்றார்கள்' பன்றியாகப் பிறந்தாலும் வீரத்தோடு போரிட்டு உயிர் துறந்ததால் அம்மலை சக்தி வாய்ந்ததாக விளங்கியது.

## 46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

பன்றி மலையில் இப்பன்னிருவரும் பிறந்து கலவைப் பிறப்பாகக் காட்சி அளித்தனர். முகம் மட்டும் பன்றி; உடம்பு அறிவு ஆற்றல் இவற்றில் மானிடராக இருந்தனர். இறைவன் முலைப்பால் குடித்ததால் தெய்வ ஞானமும் கூர்த்த அறிவும் தருமம் அறிந்து செயல்படும் திறமும் அவர்கள்பால் அமைந்தன.

பாண்டியன் இராசராசன் கனவில் சோமசுந்தரக் கடவுள் தோன்றிப் பன்றிகள் பன்னிருவரையும் அமைச்சர்களாக ஏற்றுக் கொள்ளுமாறு அறிவித்தார். முகலட்சணம் பொருந்திய அமைச்சர்கள் இருந்த இடத்தில் அவலட்சணம் மிக்க இவர்களை அவன் அமைச்சராக்கினான்.

உருவு கண்டு எள்ளாமை வேண்டும் என்று வள்ளுவர் கூறியதற்கு ஏற்ப அவர்கள் உருவைக் கண்டு அரசன் இகழ்ச்சி காட்டவில்லை. அவனுக்குக் கவசம் போல் இருந்து அவர்கள் காத்து வந்தனர். சாபத்தால் பன்றிக் குட்டிகள் ஆகப் பிறந்தவர்கள் இறைவன் திருவருளால் அமைச்சர்கள் ஆயினர்.

பழைய அமைச்சர்களின் குமாரிகளை இவர்களுக்குத் திருமணம் செய்வித்து அவர்களுக்கு நல்வாழ்வு கொடுத்தான். அவர்களும் இவர்களைப் பன்றி முகத்தவர் எனக்

கொண்டு அருவெறுப்புக் காட்டவில்லை. கடவுள் அருள் பெற்றவர்கள் என்பதால் அவர்களிடம் ஞான ஒளியும் பேரழகும் மிக்குக் காணப்பட்டன.

மனித முகங்களைப் பார்த்துப் பழகியவர்களுக்கு இது புதுமையாக இருந்தாலும் இப்படியும் வாழ முடியும் என்ற ஒரு புதுமையைக் காணமுடிந்தது. மனிதன் என்றால் இப்படித்தான் இருக்கவேண்டும் என்று பழகிய பின் இப்படிக் கலவையாக இருந்தால் எப்படி இருக்கும் என்ற கற்பனைக்கு இவர்கள் உருத்தந்தார்கள். இரண்டும் கெட்ட நிலையில் அவர்கள் வாழ முடிந்தது.

மனிதர்களுள் பலர் குரங்கு முகமும் பன்றி முகமும் பெற்று இருப்பதாக எள்ளி நகையாடல் உண்டு; அது உண்மையாகவே இருந்தது என்பதற்கு ஏற்பப் புதுமையான படைப்பாகும்.

## 47. கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்த படலம்

இராசராசனுக்குப்பின் அவன் மகன் சுகுண பாண்டியன் ஆட்சிக்கு வந்தான். அவன் ஆட்சிக் காலத்தில் ஒருவன் தருமங்கள் பல செய்தும் பாவம் சில செய்ததால் கரிக்குருவியாகப் பிறந்தான். கரிக்குருவிக்குப் பகையாகக் காகங்கள் அமைந்தன. கரிக்குருவி மிகச் சிறிய வடிவமாக இருந்ததால் காக்கையின் குத்தலுக்குத் தப்ப முடியவில்லை. அவை தலையைக் குத்திக் குத்திப் புண் ஆக்கிவிட்டன; கத்திக் கத்திப் பார்த்தும் பயன் இல்லை; தத்தித் தத்திப் பறந்து நகரத்தைவிட்டு வனத்துக்குச் சென்று தப்பிப் பிழைத்தது. அங்கே ஒரு மரத்தின்

கிளையில் ஏறி உட்கார்ந்து கொண்டது. தனக்கு விமோசனமே இல்லையா என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தது.

தான் இருந்த மரத்தின் அடியில் தவ முனிவர் ஒருவர் சீடர் சிலருக்குச் சிவத்தலங்களின் பெருமையைச் சொல்லிக் கொண்டிருந்தார். தீர்த்தம், தலம், மூர்த்தி இம் மூன்றாலும் சிறந்து பாவங்களைத் தீர்த்து வைக்கும் பரமன் இருக்குமிடம் மதுரைதான் என்று தெரிவித்தார். அங்குச் சென்று வழிபடுவோருக்குப் பாவ விடுதலை கிடைக்கும் என்றும் பயன் மிகுதி உண்டாகும் என்றும் கூறிக்கொண்டிருந்தார். அவற்றைக் கேட்கும் போதே அதற்குத் தன் சென்ற பிறவியின் நினைவுகளும் இப்பிறவியில் ஏற்பட்ட இடும்பைகளும் விளங்கின.

மதுரை நோக்கி விண்ணில் பயணம் செய்தது. வைகை நதி வந்ததும் வையகமே தன் கைக்கு வந்து விட்டது போன்ற உணர்வு ஏற்பட்டது. பொற்றாமரைக் குளத்தில் முழுகி எழுந்து இறைவன் நற்றாளை வழிபட்டு மூன்று நாட்கள் தொடர்ந்து இச்செயல்பாட்டில் இறங்கியது. தவசிகளும் யோகிகளும் அரசர்களும் தேவர்களும் வழிபடும் காட்சியைக் கண்டு வந்த மீனாட்சி அம்மையாருக்குக் கரிக்குருவியின் செயல் வியப்பை தந்தது.

''இந்தக் கரிக்குருவியைப் பார்த்தீர்களா? இதன் செய்கை புதுமையாக உள்ளதே'' என்றாள் மீனாட்சி அம்மை.

''தெரியும், அது முற்பிறவியில் செய்த தவறு இப்பிறப்பில் கரிக்குருவியாகிவிட்டது; கரிய நிறமுள்ள

காகமாகவும் பிறக்கவில்லை. கொத்தித் தின்று உயிர் வாழும் குருவியாகவும் பிறக்கவில்லை. இரண்டும் சேர்ந்த தனிப்பிறவி இது'' என்றார்.

''தருமங்கள் பல செய்தவர் ஆயினும் அவர்கள் கருமங்கள் அனைத்தும் விரும்பத்தக்கவையாக இருக்க வேண்டும். பாவ காரியம் சில செய்ததால் இப்பிறவியில் பரிதவிக்கும் சூழ்நிலை ஏற்பட்டுள்ளது. தவறு நினைத்துத் திருந்தி விட்டதால் அதனை மன்னித்து ஏற்றமிகு வாழ்வு தரவேண்டுவது நம் கடமை'' என்றுகூறி அக்கரிக்குருவியை ஆட்கொண்டார்.

''உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்று கேட்டார்

''வலிமை வேண்டும்; கரியான் என்ற பெயர் மாறி வலியான் என்ற பெயர் நிலவ வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டது.

''அப்படியே ஆகுக'' என்று இறைவன் அருள் செய்தார்.

''எனக்கு மட்டுமல்ல; எங்கள் இனத்துக்கே இப்பெயர் நிலவ வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டது.

''தக்கவன் வாழத் தன் கிளையும் வாழும் என்னும் பழமொழிக்கேற்ப அப்பறவை இனத்துக்கே இப்பெயர் அமைவதாயிற்று.

## 48. நாரைக்கு முத்தி கொடுத்த படலம்

பாண்டிய நாட்டிலே தென் திசையில் ஓர் ஊரில் ஒரு தாமரைக் குளம் இருந்தது. அதில் உள்ள மீன்களைத் தின்று வாழ்ந்து வந்த நாரை குளம் வற்றிப்போக அ

விட்டுப் பறந்து நீண்ட தூரம் சென்று காட்டிலே ஒரு வாவியை அடைந்தது. அங்கே அளவற்ற மீன்கள் அக் குளத்தின் வளத்தைக் காட்டின. அங்குமுழுகிக் குளித்துத் தவம் செய்து வந்த முனிவர்களின் மேனியில் பட்டு அவை புனிதம் பெற்றன. பட்டினி கிடந்தாலும் அவற்றைத் தொட்டு உண்பதற்கு அந்நாரை விரும்ப வில்லை.

அம்முனிவர்கள் அத்தீர்த்தத்தில் முழுகிக் கரை ஏறி மதுரைப் புராதனம் குறித்து மதுரமாகப் பேசி அதன் தீர்த்தம் தலம் மூர்த்தி இவற்றைச் சிறப்பித்துப் பேசினார். அதைக் கேட்டு அந்த நாரை தானும் அங்குச் சென்று பயன் அடைய விரும்பியது.

மதுரை பொற்றாமரைக் குளத்துக்குச் சென்று அதில் முழுகி ஈசனை வழிபட்டது. அதில் துள்ளி எழுந்த மீன்களை அள்ளித் தின்ன ஆசைப்பட்டது. பசி எடுத்தும் அதன் சுவை தன்னை ஈர்த்தும் அங்கே மீன் பிடிக்க விரும்ப வில்லை.

அக்குளத்து மீனை உண்பது அதன் புனிதத்தைப் பாழ்படுத்துவதாகும் என்று நினைத்தது; மீன் உண்ணா மலேயே பட்டினி கிடந்தது. ஒட்டிய வயிற்றோடு இறை வனை வழிபட்டுக்கொண்டு வந்தது.

நாரை வடிவத்திலேயே இறைவன் அதற்குக் காட்சி அளித்து, "நீ, வேண்டும் வரம் யாது?" என்று கேட்க அதற்கு அந்தநாரை தனக்கு என்ன வேண்டும் என்பதை விடுத்து அக்குளத்துப் புனிதத் தன்மையைப்போற்ற வேண்டிய தேவையை வற்புறுத்தியது.

அக்குளத்தில் மீன்களே இருக்கக்கூடாது என்று நாரை கேட்டுக் கொண்டது. மீன் இருந்தால்தானே அவற்றைப் பறவைகள் தின்ன வேண்டி வரும்; தின்றால் அவை பாவத்துக்கு ஆளாக வேண்டிவரும்; அதனால் குளத்தில் மீன்கள் எந்தக்காலத்திலும் தோன்றக்கூடாது என்று வேண்டிக்கொண்டது. நாரையின் பக்தியையும் தூய உள்ளத்தையும் மதித்து இறைவன் அதற்கு முத்தி அளித்துச் சிவலோகம் சேர்த்துக் கொண்டார். நந்தி கணத்துள் அது ஒன்றாகச் சேர்க்கப்பட்டது.

## 49. திருவாலவாயான படலம்

சுகுண பாண்டியனுக்குப்பின் அவனுடைய வாரிசுகளில் குறிப்பிடத் தக்கவன் வம்மிசசேகர பாண்டியன் ஆவான். அவன் காலத்தில் மதுரை நகர் விரிவடைந்தது. மக்கள் பெருக்கம் அதிகம் ஆகஆக வீடுகளும் தெருக்களும் பெருகிப் புறநகர்ப் பகுதிகள் விரிவடைந்தன. நகர் ஆட்சி கட்டுக்குள் அடங்காதது ஆயிற்று.

அரசனுக்கு மதுரை நகர் எல்லை எது என்ற ஞானம் இல்லாமல் திட்டமிட்ட பணிகளைச் செய்ய முடியாமல் போயிற்று.

அந்நகரத்தின் எல்லை எது என்று தெரியாமல் இருந்ததால் கிராமம் எது நகரம் எது என்ற வேறுபாடு மறைந்து விட்டது. அதனால் ஆட்சிச் சிக்கல் ஏற்பட்டது. வரம்பு மீறிய எல்லையையும் அவன் கட்டிக் காக்க விரும்பவில்லை.

மதுரையின் புனிதமும் பிற எல்லைகளின் கலப்பால் கெட்டு விடுகிறது என்பதால் இறைவனும் அது செயற்

படுத்த வேண்டிய ஒன்று என்று முடிவு செய்தார். எப்படி எல்லையைச் சுட்டிக்காட்டுவது என்ற தொல்லை, ஏற்பட்டது.

அதற்கு வழியையும் கண்டார்; தன் கரத்தில் ஆபரண மாகச் சுற்றிக்கொண்டிருந்த ஆலகால நஞ்சைக்கொண்ட பாம்பினை ஏவினார். அது தன் வாலையும் தலையையும் தொட்டுக் கொண்டு ஒரு சுற்று சுற்றியது. அதுவே மதுரையின் நில எல்லையாகியது.

பாண்டியன் சுற்றிலும் சுவர் எழுப்பிக் காவல்மதிலை எழுப்பினான். தெற்கு வாயிலுக்குத் திருப்பரங்குன்றமும், வடக்கு வாயிலுக்கு இடப மலையும், மேற்கு வாயிலுக்குத் திருவேடகமும். கிழக்கு வாயிலுக்குத் திருப்பூவணமும் எல்லைகளாக அமைந்தன. மதிலுக்கு ஆலவாய் மதில் எனவும் நகருக்கு ஆலவாய் நகரம் எனவும் பெயர்கள் அமைந்தன. அந்நகரத்தில் புத்தம் புதிய மண்டபங் களையும் கோபுரங்களையும் மாளிகைகளையும் கட்டி அழகுபடுத்தினான். நகர் என்றாலேயே மாளிகை என்ற பொருள் உண்டு. அதற்கேற்ப அவன் ஆட்சிக் காலத்தில் நகரில் மாளிகைகள் எழுந்தன.

திங்களின் மதுரத் துளிகள் பட்டதால் மதுரை என்றும், மேகங்கள் மாடங்களைப் போலக் கவிந்து நகரைக் காப் பாற்றியதால் கூடல் என்றும், இப்பொழுது திருவாலவாய் என்றும் அந்நகருக்குப் பெயர்கள் அமைந்தன.

## 50. சுந்தரப் பேரம்பு எய்த படலம்

பாண்டியர்களுக்கும் சோழர்களுக்கும் அவ்வப் பொழுது போர்கள் மூண்டன. பாண்டியர்கள் கோயில்

திருப்பணிகளில் அரசுப் பொருளைச் செலவிட்டபடியால் படைகளைப் பெருக்க இயலவில்லை; வகுத்தல் கணக்குப் போட்டவர்கள் பெருக்கல் கணக்கில் தவறிவிட்டார்கள் வம்பி சேகர பாண்டியன் ஆட்சிக் காலத்தில் விக்கிரம சோழன் என்பவன் வடபுல வேந்தர்களான கயபதி' நரபதி, துரகபதி முதலியவர்களைத் துணைக் கொண்டு எதிர்த்தான்.

வடக்கும் கிழக்கும் சேர்ந்து தெற்கைத் தாக்கின. அவை முடிவில் மேற்கைப் பார்க்க வேண்டி ஏற்பட்டது. பாண்டியன் சோமசுந்தரக் கடவுளிடம் முறையிட்டுப் பகைவர்கள் போர் தொடுத்திருப்பதைத் தெரிவித்தான். பாண்டியர்களுக்கு எப்பொழுதும் வங்கிப் பணம் போல இருந்து உதவும் சோமசுந்தரர் ''நீ அஞ்சாமல் போர் செய். யாம் துஞ்சாமல் உமக்கு உதவுவோம்'' என்று அசரீரி வடிவில் குரல் தந்தார்.

''யாமிருக்கப் பயமேன்'' என்று இறைவன் கூறியபின் அவனுக்குத் துணிவு பிறந்தது; பெரும் படையுடன் வந்த வடபுலத்தவனை எதிர்த்தான். ஆரம்ப வெற்றி சோழனுக்கே சென்றது. பின்னிட்டுக் கால் எடுத்து வைக்கும் நேரத்தில் முன்னிட்டு இறைவன் வேடுவ வேடத்தோடு களத்தில் புகுந்து அம்பு எய்தான். அவற்றில் சுந்தரேசன் என்ற பெயர் பொறிக்கப்பட்டு இருந்தது. வேடுவனாக வந்தவர் சோமேசர் என்பதை அறிந்த சோழன் கதி கலங்கினான். களத்தைவிட்டு அவன் புறமுதுகிடத் தொடங்கினான்.

வடபுலத்தவன் அஞ்சிப் புறமுதுகிட்ட சோழனை இழிவுபடுத்தினான். போருக்கு வந்த பிறகு உயிருக்கு அஞ்சி ஊர் திரும்பிய அவன் கோழைத் தனத்தைக் கண்டு

சினந்தனர். அவர்கள் மட்டும் நின்று போர் செய்து வீர மரணம் அடைந்தனர். பாண்டியன் வெற்றி அடைந்து விழாக் கொண்டாடினான்.

கோயில் திருப்பணிகள் பல புதியன செய்து வில்லும் அம்பும் பொன்னால் செய்து அந்தப் போர் நினைவுக்கு வடிவு தந்தான். சுந்தரனின் திருநாமம் அவ்வம்பில் பொறிக்கப்பட்டது.

## 51. சங்கப் பலகை தந்த படலம்

மதுரையில் சங்கம் இருந்தது என்றும், நாற்பத்தெட்டு புலவர்கள் இருந்து தமிழ் ஆராய்ந்தனர் என்றும், நாற்பத்து ஒன்பதாவது புலவராகச் சோமசுந்தரர் அங்குத் தலைமை ஏற்றார் என்றும் கூறப்படுகின்றன.

பிரமனுக்கு மூன்று மனைவியர்; சரசுவதி, சாவித்திரி, காயத்திரி என்பவர் ஆவார். இம்மூவருடன் பிரமன் காசிப்பதியில் எட்டு அசுவமேத யாகம் செய்து முடித்தபின் கங்கையில் முழுகிக் காசி விசுவநாதரை வழிபடச் சென்றான். வழியில் சரசுவதி வித்தியாதரப் பெண் ஒருத்தி பாடிக் கெபண்டிருந்த இசை கேட்டு மயங்கிக் காலம் தாழ்த்தினாள். பிரமன் மற்றைய இருவரோடும் முழுகி எழுந்து கரை ஏறினான்.

காலம் தாழ்த்தி வந்த கலைமகளைப் பிரமன் கடிந்து கொண்டான். ‘‘நீ மானிட உலகுக்குச் சென்று பல காலம் உழல்வாயாக’’ என்று சபித்தான். உன் நாவில் குடி கொண்டிருக்கும் நான் உன்னைவிட்டு எப்படிப் பிரிய முடியும்? கல்வித் துணையில்லாமல் வாழ்க்கைத்துணைக்கு

மற்றவர்கள் இருந்தால் உனக்குப் போதுமா? பிரமனிடம் உலகம் ஞானத்தை எதிர்பார்க்கிறது. அதை எடுத்துச் சொல்லக் கல்வித் துணையாக நான் இல்லாமல் எப்படி இயங்க முடியும். நான் அப்படிப் பெரிய தவறு ஒன்றும் செய்யவில்லையே; இசைக் கலை என்னை இழுத்தது; அதை நீர் வசைச் செயலாகக் கருதுவது பொருந்துமா? ஊனப் பிறவி எடுத்து உழல்வதைத் தவிர்த்து ஞானப் பிறவி எடுக்கும்படி சபியுங்கள்'' என்றாள்.

அவ்வாறே அதனை மாற்றிப் பாண்டிய நாட்டில் அகரம் நீங்கலாக மற்றய எழுத்துக்கள் நாற்பத்து எட்டும் நாற்பத்தெட்டுப் புலவராகப் பிறக்கட்டும் என்று சாபத்தை மாற்றித் தந்தார். அகரம் முதல் எழுத்து; அது போல் ஆதிபகவனே உலகத்துக்கு முதல்வனாவான்; சோமசுந்தரர் தாம் அம்முதலிடத்துக்குப் புலவராக வருவார்'' என்று கூறி அருளினார்.

அவ்வாறே நாற்பத்தெட்டு எழுத்துக்களும் நூற் புலவர்களாகத் தோன்றினர். அவர்கள் வடமொழியும் தமிழும் நன்கு கற்றவராக விளங்கினர். அகத்தியர் முதலாகத் தொல்காப்பியர் வரை எழுதிய இலக்கண நூல்களை ஆராய்ந்தனர். முன்னோர் பாடிய பாடல் களைத் தொகுத்து அருளினர். அவர்களும் அகம் புறம் என்னும் பொருள் பற்றிப் பலபாடல்களைப் புனைந்தனர். அவர்களை எல்லாம் அழைத்துச் சோமசுந்தரர் ஒரு புலவராக அவதரித்து மதுரைக்குக் கொண்டு வந்தார்.

பாண்டியன் வம்மிச சேகரனைச் சுந்தரர் கோயிலுக்கு வடமேற்கே மண்டபம் ஒன்றைக் கட்டி அதிலே அவர்

களை அமர்த்தினார். அது கண்டு பழம் புலவர்கள் சிலர் மனம் புழுங்கினர். புதுப்புலவர்கள் சிலர் அங்கு இடம் தேடி வந்தனர். அவர்கள் இந்த நாற்பத்து எட்டுப் புலவருடன் வாதிட்டும் புதிய கவிதைகள் புனைந்தும் கல்வித்திறம் காட்டியும் அங்கு இடம் பிடிக்க முனைந் தனர் வந்தவர்கள் அனைவரும் தோற்று அங்கு இட மின்றித் திரும்பினர்.

இந்த வாதுகளையும் மோதல்களையும் தவிர்க்கப் புலவர்கள் சோமசுந்தரக் கடவுளிடம் முறையிட்டனர். அவர்கள் குறை கேட்டுக் கறை மிடற்றன் ஆகிய சுந்தரர் புலவர் வடிவில் வந்து கையில் ஒரு பலகையை ஏந்தி வந்தார். "இது ஒரு முழம் சதுர அளவு கொண்டது; ஓர் ஆள் அமரக் கூடியது; புலவர்கள் அமர இது நீளும் தன்மையது; தகுதி உடைவர்க்கே இது இடம் கொடுக்கும்" என்றார். சங்கப் பலகை அம்மண்டபத்தில் வைக்கப் பட்டது. பரம் பொருளாகிய இறைவனைத் தலைமைப் புலவராகக் கொண்ட அந்தத் தமிழ்ச் சங்கம் பல பாடல் களைப் படைத்துத் தந்தது. முன்னோர் பாடிய பாடல்கள் பலவற்றை ஆராய்ந்தது. அவற்றை யார் பாடியது என்று இனம் காண முடியாமல் அவர்கள் தடுமாறினர். எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என வழங்கும் சங்கப் பாடல்களைப் புலவர்கள் பெயர் அறிவித்து இன்னார் பாடியவை என்று தெரிந்து சுந்தரர் பிரித்துக் காட்டினார். மற்றும் அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, கலித்தொகை, ஐங்குறுநூறு, நற்றிணை, பரிபாடல், பத்துப்பாட்டு எனப் பொருள் பற்றியும் அடி வரையறை பற்றியும் அவற்றைத் தொகுத்துத் தந்தனர். அச்சங்கத்தில் பங்கு கொண்டவர்களுள் கபிலர், பரணர்,

நக்கீரர், அவ்வையார் முதலிய புலவர்கள் குறிப்பிடத் தக்கவர் ஆவர். இவர்கள் ஆய்வு மன்றங்களுக்குச் சோமசுந்தரரே தலைமை வகித்தார்; இவர்கள் முன்னோர் செய்த நூல்களையே யன்றிச் சம காலத்து நூல்களையும் தரம் கண்டு பிரித்து வகைப்படுத்தினர்.

சைவம் தழைத்த மதுரையில் தமிழ் மணமும் கலந்து வீசியது. கோயில் வழிபாடுகள் மட்டும் பேசப்பட்ட அக்கோயில் வளாகத்தில் தமிழ்க் கவிதையும் இடம் கொண்டது. தமிழுக்கு ஆக்கமும் ஊக்கமும் தந்து பாண்டியர்கள் தமிழ் வளர்க்க முற்பட்டனர்.

மதுரைத் தலவரலாற்றிலேயே இது ஒரு திருப்பு முனையாக அமைந்தது இதுவரை சோழரோடு பாண்டியர்கள் செய்த போர்களும் அத்தலத்தில் வழிபட்டோர் அடைந்த சிறப்புகளுமே கூறப்பட்டு வந்தன. இனிப் புலவர்களின் வரவும் தமிழ் வளர்ச்சியும் மதுரைக்குப் பெருமை சேர்க்க இச்சங்கம் பெரிதும் உதவியது என்ற செய்தியும் கூறப்படுகின்றன.

## 52. தருமிக்குப் பொற்கிழி அளித்த படலம்

வம்மிச சேகர பாண்டியனின் மகன் வம்மிச சூடாமணி ஆட்சிக்கு வந்தான். அவன் சண்பகப்பிரியனாக இருந்தான். அதனால் அவன் சண்பகவனம் ஒன்று அமைத்தான். அதனால் அவனுக்குச் சண்பகப் பாண்டியன் என்று சிறப்புப் பெயரும் அமைந்தது மணம் கமழும் சண்பக வனத்தில் அவ்வப்பொழுது தன் அரசமாதேவியோடு சென்று தென்றல் சுகத்தையும் பூவாசத்தையும் நுகர்வது உண்டு.

கோடையில் இளவேனிற்காலத்தில் ஒரு நாள் வெப்பம் தாங்காது குளிர்ச்சியை நுகரும் பொருட்டுத்

தன் தேவியோடு இளம் பூங்காவிற்குச் சென்றான்; அவளைக் கட்டி அணைப்பதற்கு முன் பூ மணம் கமழும் அவள் கூந்தலைத் தொட்டு மகிழ்ந்தான். கட்டிக் கரும்பே என்று பேசிக் கவிதை புனையும் அவன் மெய் தொட்டுப் பயின்று கூந்தலின் மணத்தை நுகர்ந்தான். அவள் கூந்தல் மணம் அவனைக் கவர்ந்தது பக்கத்தில் வண்டுகள் அங்கே வந்து மொய்த்தன.

''அவன் அந்த வண்டைப்பார்த்து விளிப்பது போன்று ஒரு கவிதை புனைந்தான். ''பூவுலகில் நீர் அறியாத பூ இல்லை; இவள் கூந்தலின் நறுமணத்தையும் நீ நுகர்கிறாய் பூவை நாடும் நீ இந்தப் பூவையரைச் சுற்றி வருவது ஏன்? எனக்கு ஓர் ஐயம் எழுகிறது; இந்த என் தலைவியின் கூந்தலின் மணம் பூவின் மணம் எந்த மணம் சிறந்தது? அதை எனக்குத் தெரிவி; நீ ஒரு பூக்களின் ரசிகன்; நான் பாக்களின் ரசிகன் என்று பாண்டியன் கூறினான். நீ சுற்றிவரும் பூக்கள் நிறம்மாறியவை; மணம் மாறியவை. கலைத் திறன் படைத்த அவற்றின் நிலைமை அறிவாய்

இத்தலைவியின் கூந்தலின் மணத்துக்கு நிகராக எந்தப் பூவின் மணம் உள்ளது. என்று கூறித் தலைவியின் நலம் பாராட்டினான் அந்த நினைவோடு அவன் அரசவை அடைந்தான்.

அக வாழ்க்கையில் ஏற்பட்ட ஐயம் அவனுக்கு ஓர் இலக்கியப் பிரச்சனையை உருவாக்கியது. அதைப் பொதுப்பட வைத்துப் புலவர்களின் ஆய்வுக்கு விட முற்பட்டான். எனினும் அவன் உள்ளக் கிடக்கையைப் பளிச்சிட்டுச் சொல்ல அவன் மானம் அவனைத் தடுத்தது. அதனால் அவன் ஒருபொற்கிழியைக் கோயிலில் அவர்கள் முன் வைத்து ஓர் அறிவிப்புச் செய்தான், தான் உள்ளத்தில் நினைப்பதைக் கவிதையாக்கித் தந்தால் அவர்களுக்கு ஆயிரம் பொற்காசு என்று அறிவித்தான்.

புலவர்கள் அரசனின் கற்பனையை அறிய வாய்ப் பில்லை. அவன் சண்பகச் சோலை சென்றதும், பாண்டி மாதேவியின் நலம் பாராட்டியதும், அவ் ஏந்தல் கூந்தலைப் பற்றிவிசாரணை நடத்தியதும், அவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லை. அதனால் அவர்கள் கவி யாதும் புனைய வில்லை; விடுகதை என்று அதை விட்டுவிட்டனர்.

அந்த நிலையில் தருமி என்ற குடுமி வைத்த பார்ப்பன இளைஞன் இதனைக் கேள்விப்பட்டான். வயது ஆகியும் வாலிபப் பருவத்தில் மண வைபவத்தை அவன் கண்டது இல்லை. வறுமை அவனைச் சிறுமைப்படுத்தியது. மணம் செய்து கொள்ள ஆசை இருந்தது. பணம் இல்லை என்பதால் ஏங்கிக் கிடந்தான். கோயில் தெய்வத்திடம் முறையிட்டால் ஓசியில் கவிதையாவது கிடைக்காதா என்ற நினைவு ஓடியது

இறைவனிடம் பொன்னும் பொருளும் நேரிடையாகக் கேட்கவில்லை; கவிதை ஒன்று தந்தால் அதைத் தான் காசாக்கிக் கொள்ள முடியும் என்று இறைவனிடம் முறையிட்டான்.

''அகப்பொருட்பாடல் வேண்டுமா?
புறப் பொருள் பாடல் வேண்டுமா? எது வேண்டும்?''
என்று தெய்வக் குரல் எழுந்தது.

''காதற்பாட்டு வேண்டும்; அவ்வளவுதான்; அகமா புறமா இது எல்லாம் எனக்குத் தெரியாது'' என்று கூறினான்.

கவிதை ஏடு ஒன்று அவன் முன் வந்து விழுந்தது. அதனை நாடி எடுத்துப் படித்துப் பார்த்தான்.

''கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியும் பூவே''

என்று எழுதி இருந்தது.

படித்துப் பார்த்தான்; பொருள் விளங்கவில்லை; அதனாலேயே அது கவிதையாகத் தான் இருக்க வேண்டும் என்ற நம்பிக்கை பிறந்தது.

''தேனைத் தேடிச் சுற்றி வரும் வண்டே விருப்பு வெறுப்பு என்று ஒரு பக்கம் பேசாமல் உண்மையைச் சொல். பூக்களை நாடி அவற்றின் தரம் அறிந்து தேன் உண்டு மயங்கி வருவது உன் பிழைப்பு. மலர்களின் மணம் அதைப் பற்றிய குணம் அனைத்தும் நீ அறிந்து பழகி உள்ளாய். மயிலின் சாயலும் முல்லை போன்ற பற்களும் உடைய என் காதலியின் கரிய நீண்ட கூந்தலையும் நீ அறிவாய்; நறிய பூ அதனினும் உண்டோ? இருந்தால் சொல்க நீ'' என்பது அதன் பொருள். அது அவனுக்குத் தெரியாது.

இதை எடுத்துக் கொண்டு புலவர் அரங்கு ஏறினான். சங்க மண்டபத்தில் இக்கவிதையைத் தங்கு தடையின்றிப் படித்தான்; அங்கு அமர்ந்திருந்த அரசனும் இப்பாட்டைக் கேட்டு உள்ளம் தடித்தான்; தன் மனத்தில் அலை மோதிக் கொண்டிருந்த சித்திரத்தை எழுது கோல் கொண்டு தீட்டியது போல் இருந்தது. ''யான் நினைத்ததை, சொல்லக் கருதியதை இப்பாவலன் படைத்துக் காட்டினான். இந்த நாவலனுக்குப் பொற்கிழி கொடுத்தனுப்புக'' என்று ஆணையிட்டான்.

அங்குச் குழுமி இருந்த புலவர்கள் பொறாமையால் பொருமிப் புழுங்கினர். "இது தான் அரசன் நினைத்தது என்று தெரிந்திருந்தால் அப்பொருள் பற்றி ஒரு துறைக் கோவையாக நூறுஆயிரம் பாடல்கள்பாடி இருப்போமே; இவன் ஐந்தடிப் பாட்டு ஒன்று பாடி ஆயிரம் பொன் பெறுகிறானே இது அக்கிரமம், என்று நினைத்தனர்.

பாட்டில் ஏதாவது குறையிருக்கிறதா என்று யாப்பறிந்த புலவர்கள் கோப்பு அறிந்து பார்த்தார்கள். எதுகை மோனை அடிதொடை யாப்பில் எந்தக் குறையும் இல்லை.

புலவர் நக்கீரனால் இதைப் பொறுத்துக் கொள்ள இயலவில்லை. பிராமணனைப் பார்த்து 'நில்' என்றான்; அந்தச் சொல் அவனை அச்சுறுத்தியது.

"இதில் பொருட் குற்றம் உள்ளது" என்றான். கைப் பொருளுக்கே அவன் வெடி வைப்பது பார்த்து இடிகேட்ட நாகம் போல மனம் நொடிந்து போனான். சோம சுந்தரனை வேண்டினான்.

"சுந்தரனே; பரிசு இல்லை என்றாலும் எனக்குக் கவலை இல்லை; உன் கவிதையைக் குற்றம் சொல்கிறாரே இந்த நக்கீரர். நற்றமிழ் அறிந்த நீ வந்து உன் மானத்தைக் காத்துக் கொள்" என்றான் அப்பார்ப்பன இளைஞன்.

"நக்கீரரே நீர் கண்ட பொருட் குற்றம் யாது?" என்று சிவன் அவைப் புலவராக உடை உடுத்திச் சென்று வினா எழுப்பினார்.

''இந்த ஐயம் வந்திருக்கத் தேவையில்லை; மகளிர்க்கு மணம் சார்பு பற்றி வருவது; கூந்தலுக்கு இயற்கை மணம் இருந்தால்தானே ஒப்புமை கூறிப் பேசமுடியும்'' என்றான் அவன்.

''மானிட மகளிர் கூந்தலுக்கு மணம் இல்லாமல் இருக்கலாம், தேவமகளிர்க்கு?'' என்று கேட்டார்.

''அவர்களும் மந்தார மலர் அணிவதால் சௌந்தரிய மணம் வீசுகிறது'' என்றான்.

''பதுமினிப் பெண்களுக்கு?''

''எந்த மினுக்கிகளுக்கும் அப்படித்தான்'' என்றான்''

''நீ வழிபடும் சோமசுந்தரரின் துணைவி மீனாட்சிக்கு''? என்று கேட்டார். ''தான் ஆட்சி செய்தாலும் அவர் களுக்குத் தனி மணம் உண்டாகாது'' என்றான்?.

''நீ யாரிடம் பேசுகிறாய் என்று தெரிந்து பேசு''

''முக்கண்படைத்த சிவன் என்பது அறிந்து தான் பேசுகிறேன்'' என்றான்.

''அக்கண் கொண்டு எரித்து விடுவேன்'' என்றான்

''நெற்றிக் கண் திறந்து அச்சுறுத்தினாலும் குற்றம் குற்றமே'' என்றான்.

புலவனின் இறுமாப்பு அவனை வீழ்த்தியது. சிவனின் சினத்தால் அவன் வெந்து பொற்றாமரைக் குளத்தில் விழுந்தான். அவன் தவறு செய்தானா இல்லையா என்பதை இதுவரை யாரும் முடிவு செய்ய இயல வில்லை.

## 53. கீரனைக் கரை ஏற்றிய படலம்

நக்கீரனின் அஞ்சாமை போற்றப்படுகிறது. சிவனே ஆயினும் குற்றம் குற்றமே என்று பேசிய வீரம் தமிழ்ப் புலவர்களுக்கு உள்ள பேராண்மையைக் காட்டுகிறது

வேகத்தில் அவனை எரித்த கடவுள் நிதானத்தில் அவன் செய்தது தவறு அல்ல என்பதை உணர்ந்தார். அவன் தெய்வ நிந்தனையாக எதுவும் கூறவில்லை. உள்ளதை உள்ளவாறு கூறும் புலவன் அவன் என்பதை அவர் உணர்ந்து அவனை மன்னித்தார். கவிதையில் இயல்பு நவிற்சியே தேவைப்படுவது. உயர்வு நவிற்சி கூடாது என்பதை அவன் உணர்த்தினான் என்பதையும் அறிந்தார்.

''அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பது இல்லையே
உச்சி மீது வானிடிந்து வீழுகின்ற போதினும்''

என்று பாடிய பாரதியின் குரல் அவன் பேச்சில் ஒலித்தது. தமிழினத்துக்கு ஒரு பண்பாடு உண்டு. அச்சமில்லாமல் உண்மையை உலகுக்கு உணர்த்தும் வீரம் அது. அதனால் நக்கீரனைத் தமிழகம் என்றும் போற்றி வருகிறது. நக்கீரன் அஞ்சாமையின் உருவகம்.

அத்தகைய நக்கீரனை இழந்து சங்க மண்டபம் பங்க முற்றது கண்டு புலவர்கள் வருந்தினர். நிலவு இல்லாத வானத்தைப் போலவும், ஞானமில்லாத கல்வி போலவும் அச்சங்கம் இருந்தது.

சோமசுந்தரரிடம் புலவர் அனைவரும் சென்று மன்றாடினர். ''கீரனின் சொல்லில் கீறல் விழுந்து விட்டது. கல்விச் செருக்கால் உம்மை எதிர்த்துக்

குறுக்கே பேசி விட்டான்; பாதை பிறழ்ந்து விட்டது; கவிதையில் குற்றம் காணவேண்டியவன் இறைவியின் கூந்தலைப் பற்றி ஆராய்ந்தது தவறுதான்; மன்னிக்க வேண்டுகிறோம்'' என்று முறையிட்டனர்.

புலவர்களின் கட்சிக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு நக்கீரனும் இறைவனின்புகழைப்பாடிகைலைபா, காளத்திபாதி அந்தாதி, பெருந்தேவ பாணி, திருவெழு கூற்றிருக்கை, முதலிய நூல்களைப்பாடினார். மாபெரும் புலவனை மன்னிப்பதை முதற்கடமையாகக் கொண்டு சினந்தணிந்து மீண்டும் அவனைச் சங்கப்புலவராக ஏற்றுக் கொண்டார்.

## 54. கீரனுக்கு உபதேசித்த படலம்

செருக்குமிக்க புலவனாகிய நக்கீரன் தமிழிலக்கியம் கற்றவன்; ஆனால் பொருள் இலக்கணம்,முழுவதும் கற்றிலன். தமிழ் மொழிக்கு எழுத்து, சொல் இவற்றிற்கே யன்றிப் பொருளுக்கும் இலக்கணம் உண்டு என்பதை மறந்து விட்டான்; அதை அவன் சரியாக அறியவில்லை என்பது தெரியவந்தது.

வழு நிலை, வழா நிலை, வழு அமைதி என்ற மூன்று நிலைகள் உண்டு. வழு நிலை என்பது தவறாகக் கூறுதல் என்பதாகும். பானை உடைந்தது என்று கூற வேண்டியதைப் பானை உடைந்தான் என்று கூறுவது வழு நிலையாகும். இது பிழை பட்ட தொடராகும்.

பாவை வந்தாள்; பூங்கொடி வந்தாள் என்பவை பாவை போன்றவள் வந்தாள், பூங்கொடி போன்றவள் வந்தாள் என்று பொருள் தருவனவாகும். இவை உயர்திணை முடிவு கொண்டது வழு எனவும் அவை

பெண்ணை உணர்த்துவதால் வழு அமைதியாகும் என்றும் கூறுவர்.

அதே போலக் காதல் உணர்வால் தன் காதலியின் கூந்தல் மணம் இயற்கையானது என்று கருதுவது தக்கதாகும்.

இந்த நுட்பத்தை எல்லாம் அறியாமல் எல்லாத் தொடர்களும் வழா நிலையாகவே இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்தது போதிய இலக்கணப் பயிற்சி இன்மையே யாகும். அதனால் நக்கீரன் பொருள் இலக்கணம் கற்க வேண்டும் என்று இறைவன் விரும்பினார்.

அதற்குத் தக்க ஆசிரியர் யார் என்று ஆராய்ந்தார். அகத்தியர் தம்மிடம் பொருள் இலக்கணம் கற்றுப் பொதிகை மலையில் தங்கி இருப்பது அவருக்குத் தெரியும். அவரை வரவழைத்து நக்கீரனுக்குத் தமிழ் வழாநிலை வழு அமைதிகள் பற்றிய இலக்கணம் அறிவித்தார்.

கவிஞன் உணர்வுபடப் பாடும்போது அதில் பொருட் குற்றம் காண்பது அறியாமையாகும்.

''நிலா நிலா ஓடிவா நில்லாமல் இங்கு ஓடிவா'' என்று பாடுவதாகக் கொண்டால் நிலா எப்படி நிலம் நோக்கி வரும் என்று கேட்டால் அந்தப் பாட்டுக்கே வாழ்வு இல்லாமல் போய்விடும்.

சிறுவர்களுக்குக் கதைகள் கூறும்போது காக்கை நரி பேசுவதைச் சொன்னால் அது எப்படிப் பேசும் என்று கேட்டால் கதைகளே சொல்ல முடியாமற் போய்விடும்.

புராணங்களும் தெய்வங்களைப் பற்றியும் கடவுளரைப் பற்றியும் கதைகள் கூறுகின்றன. இந்திர உலகம் எங்கே இருக்கிறது, சிவ லோகம் எங்கே உள்ளது. வைகுந்தம் பிரம லோகம் என்பவை வரை படங்களில் இல்லையே என்று கேட்டால் இப்புராணங்களுக்கே இடமில்லாமல் போய்விடும். இவை எல்லாம் மானிடர் உயர்வதற்குச் சொல்லப்படும் கதைகள். இவற்றில் பொருள்குற்றம் காண்பது பிழையாகும்.

அகத்தியர் சென்ற பின்பு மீனாட்சி அம்மையார் 'அகத்தியரைக் கொண்டு ஏன் நீர் இலக்கணம் சொல்லித் தர வேண்டும்? நீரே நேரில் சொல்லித் தரக் கூடாதா என்று சோமசுந்தரரைக் கேட்டார். அதற்கு அவர் "நக்கீரன் எதிர்க்கட்சியில் இருந்து பழகியவன். அதனால் ஆளும் கட்சி எது சொன்னாலும் குற்றம் காண்பது அவன் இயற்கை; செவி கொடுத்துக் கேட்க மாட்டான். நம்பவும் மாட்டான். அதனால் தான் அகத்தியரைக் கொண்டு சொல்ல வேண்டுவதாயிற்று" என்று விளக்கினார்.

## 55. சங்கத்தார் கலகம் தீர்த்த படலம்

தமிழ்ச் சங்கம் முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் என மூன்று இருந்தன. கடைச் சங்கமே மதுரையில் நிலவியது; கபிலர், பரணர், நக்கீரர் இம்மூவரும் கடைச் சங்கப் புலவர்கள் எனக் கருதப்படுகின்றனர். முதற் சங்கப் இடைச் சங்க காலத்தில் எழுந்த நூல்கள் கிடைத்தில. அவற்றின் பெயர்களே அறியப்படுகின்றன. கடைச் சங்க காலத்து நூல்களே எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும் ஆகும்.

இப்புலவர்கள் தனித்தனியே பாடிய பாடல்கள் தரம் மிக்கவை; சில பொருள் சுவை சிறந்தவை; சில அணி நயம் சான்றவை; சில ஓசை நயம் கொண்டவை. புலவர்கள் படைத்த கவிதைகள் அவற்றைக் கேட்டுப் படிக்கும் சான்றோர்களின் நன் மதிப்பை ஒட்டிப் பாராட்டப் படுபவை ஆகும். அவர்களே தங்களுக்குள் தம் கவிதை தரம் சிறந்தவை என்று போட்டி போட்டுக் கொண்டு பேசுவது சரியன்று; நாகரிகமும் ஆகாது; அவற்றின் தரம் அறிந்து மதிப்பீடு செய்யும் விமரிசகர்கள் அக்காலத்தில் இல்லை

புலவர்கள் அனைவரும் இறைவனிடம் வந்து முறையிட்டார்கள்; புலவர்கள் பலர் இருப்பினும் மதிக்கத்தக்க உயர் புலவர்கள் யார் என்று அறுதி இட்டுச் சொல்ல முடியவில்லை மேலும் மற்றவர்களின் தகுதியும் திறமையும் அறிய வாய்ப்பில்லை. தாமே எழுந்தருளி இதற்கு ஓர் முடிவு தர வேண்டும் என்று சடைமுடி தரித்த சுந்தரரை அழைத்தனர்.

கவிதையின் தரத்தை அறியக் கடவுள்கள் வர வேண்டும் என்றால் அவர்கள் மக்கட் கவிஞர் ஆகார்; மானுடன் மதிக்கத் தக்க கவிதைகளே மாண்புடையவை; இறைவன் வந்து இதில் இடம்பெறக் கூடாது என்பதை உணர்த்தச் செந்நிறம் மாறாத சிவனார் வழி கூறினார்.

' மதுரை நகரில் தனபதி என்ற வணிகன் இருக்கிறான். அவன் மனைவி குணசாலினி என்பவள்; அவர்களுக்குப் பிள்ளை இல்லாமல் தவம் செய்து ஒரு மகனைப் பெற்றிருக்கிறார்கள். உருத்திரசன்மன் என்பது அவன் பெயர்; ஐந்து வயதும் நிரம்பாத சிறுவன்; அவன் பிறவி ஊமை; பேச மாட்டான். அவனை அழைத்துச் செல்லுங்கள்; அவன் உம்பாடலைக் கேட்டு முடிவு கூறுவான்'' என்று சொல்லி அனுப்பினார்.

ஊமை எப்படி ரசிகனாக இருக்க முடியும்? பேச முடியாதவன் எப்படி நா அசைப்பான் என்ற ஐயங்கள் எழுந்தன, எனினும் சுந்தரருக்கு மறுப்புச் சொல்லாமல் அவனைச் சங்கத்துக்கு அழைத்துச் சென்று அவரவர் தம் கவிதைகளைப் படித்தனர்.

உப்புச் சப்பு அற்ற உதவாக்கரைக் கவிதை களைக் கேட்கும் போது அவன் எந்த வித மெய்ப்பாடும் காட்டவில்லை; சொற் சுவை உடையதாக மட்டும் இருந்தால் கண்களில் சுவையைக் காட்டினான். பொருட் சுவை இருந்தால் மெய்ம்மயிர் சிலிர்த்து மகிழ்ச்சியை வெளிப்படுத்தினான்; அணி நயமும், இசையும் இணைந் திருந்தால் புளகித்துக் கண்களில் மகிழ்ச்சியில் நீர் அரும்ப முகமலர்ந்து அவற்றைப் பாராட்டினான்.

அவன் முன் பாடிய புலவர்களுள் கபிலர், பரணர், நக்கீரர், தலை சிறந்தவர். இம் மூவரே தலைமைக்கு உரியவர் ஆயினர்.

கவிதைப் போட்டிகளில் நடுவர்கள் அமைதியாக இருந்து தீர்ப்புக் கூறுவது போல இத்தீர்ப்பு அமைந்தது. மற்றவர்களும் அவரவர் தகுதிக்கு ஏற்பப் பாராட்டு தலைப் பெற்றனர். கவிதை எழுதுவதற்குப் புலமைடு திறனும் ஆற்றலும் அறிவுப் பெருமையும் கருவில் திருவும் அமைய வேண்டும் என்று கூறலாம்; அதைச் சுவைக்க ஒரு ஊமையே போதும்; ஐந்து வயதும் நிரம்பாத சிறுவனே முடிவு கூற முடியும் என்று இங்குச் கூறப்பட்டது.

# 56. இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம்

சண்பகப் பாண்டியனுக்குப் பின் அவன் சந்ததியில் குலசேகர பாண்டியன் ஆட்சிக்கு வந்தான்; கல்வி கேள்விகளில் இலக்கண இலக்கியங்களில் புலமையும் நிறைவும் உடையவன் ஆதலின் அவனுக்குச் சங்கப் பலகை இடம் தந்தது அதனால் அவனுக்குத் தலைமையும் கிடைத்தது.

கற்றவன் ஒருவன் அரசனாக இருக்கின்றான் என்று அறிந்த இடைக்காடன் என்ற புலவன் அவன் முன்பு கவிதை பாடிப் பாராட்டுதலைப் பெற விரும்பினான். அவன் கபிலரின் நண்பனாகவும் இருந்தான். மதிக்கத் தக்க புலவன் துதிக்கத் தக்க கவிதையைப் பாட அதன் சொற்சுவையையும் பொருட் சுவையையும் புலவர்கள் மதித்தனர்; புரவலனாக இருந்த அரசன் தன்னினும் கற்றவன் பாடிய கவிதையை மதித்தால் தன் மதிப்புக் குறைந்து விடும் என்பதால் அதனைப் பாராட்டவில்லை; பாராமுகமாக இருந்தான்; சுவைத்து அதன் அழகை முகபாவனையில் காட்டவில்லை. ஜீவனற்ற சடலமாக அங்கே அவன் அசைவற்று இருந்தான்.

கவிஞன் மனம் புண்பட்டது; மானம் பிடர் பிடித்து உந்தியது; தான் அடைந்த இடரை இறைவனிடம் கூறி முறையிட்டான். ''என்கவிதை உன்னைப் பற்றித் துதித்துப் பாடிய பாடலாகும்'' அதை மதிக்காமல் மதிகுல மன்னன் அப்பகவிக்கே இழுக்கு இழைத்தான்; இந்தப் பிழை பொறுக்கத் தக்கது அன்று; இறைவா நீ நியாயம் வழங்க வேண்டும்'' என்று முறையிட்டான்.

''கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது பழமொழி அறம்'' தழைக்காவிட்டால், நீதி நிலைக்காவிட்டால் ஒழுக்கம் சிறப்பிடம் பெறாவிட்டால்,

மன்னன் கோல் கோடினால் அங்கே தெய்வம் தங்கி நிலைத்து இருக்காது. தெய்வம் வாடல் கொண்டு கூடல் நகரை விட்டு வெளியேறியது. கோயில் சிவலிங்கம்; இடம் பெயர்ந்து விட்டது. மதுரை நகரை விட்டு வெளியேறிவிட்டது. திருக்கோயிலுக்கு நேர் வடக்கே வைகையாற்றின் தெற்குப் பகுதியில் ஒரு புது ஆலயம் எழுப்பி அங்குத் தானும் மீனாட்சி அம்மையும் குடி பெயர்ந்தனர். சங்கப் புலவர்களும் உடன் சென்று அங்குச் சங்கத்தை மாற்றிக் கொண்டனர்.

வழிபட வந்தவர்கள் பழைய கோயிலுக்குள் இருந்த சிவலிங்கத்தைக் காணாமல் திகைப்புற்றனர். செய்தி அறிந்த அரசன் உய்தி அடைவது எப்படி என அலமரல் உற்றான். தான் செய்த தவற்றை உணர்ந்து இடைக்காடனை மதிக்காததால்தான் விடையேறு உகந்தோன் நடை காட்டினார் என்பதை அறிந்தான். புதுக்கோயில் இருந்த இடத்துக்கு விரைந்து ஓடிச் சென்று அங்குக் குடிகொண்டிருந்த தெய்வக்கோமகனைக் கண்டு தரிசித்துப் பாடல்கள் பல பாடி வழிபட்டுத் தன் வழிக்கு வர அழைத்தான்.

இத்தலம் உத்தர ஆலவாய் என்று இனிப் புதுப்பெயர் பெறும்; கடம்ப வனத்திலும் உறைவோம்; இப்புதிய தலத்திலும் தங்குவோம்; கவலற்க; அவலம் நீங்குக இடைக்காடன் இடம் பெறாத மதுரையில் எனக்கு என்ன வேலை? அதனால் தான் வந்துவிட்டேன்; நீ கற்றவனாக இருக்கலாம்; அதனால் நீ உற்ற பெருமையால் மற்றொரு கவிஞனை மதிக்காதது தவறு; இடைக்காடன் உன்னோடு நேரில் மோத முடியாது; புலவர்கள் எல்லாரும் நக்கீரனாக இருக்க முடியாது'' என்றார்.

'அவர்கள் பால் நீ இரக்கம் காட்டமுடியவில்லை;அதனால் ஏற்பட்ட அந்தப்பிணக்கு தீர்ந்தது;இனி இடைக்காரரிடம் மன்னிப்புப் பெறுக'' என்று சொல்லி அனுப்பினார். குலேசபாண்டியனும் நடந்ததை லேசாகஎடுத்துக்கொண்டு பூவும் சந்தனமும் கொண்டு புலவரின் விலாசம் அறிந்து அவரைச் சந்தித்து மதித்துப் பொருளும் பொன்னும் தந்து அவரைப் பாராட்டி அவரோடு நல்லுறவு கொண்டான். சங்கம் மறுபடியும் மதுரை வந்து அடைந்தது.

## 57. வலை வீசின படலம்

உத்தர ஆலவாயில் மீனாட்சி அம்மையோடு தனித்து இருந்த போது சுந்தரர் வேதப் பொருளை எடுத்து விளம்பினார். அம்மையாரின்மனம் அதில் ஈடுபாடு பெறாமல் இருந்தது. அன்பு மொழி பேச வேண்டிய தனிமையில் கனமான பொருளைப் பேசியதால் பார்வதி அம்மையார் பராமுகமாக இருந்து விட்டார்.

வேதப் பொருளை உதாசீனம் செய்ததால் மீனவப் பெண்ணாகப் பிறக்க என்று சபித்து விட்டார். விமோசனம் பற்றிய விசனம் எழுந்தது. தாமே வந்து உமையாரை மணப்பதாக உறுதி தந்தார். அப்பொழுது அங்கு மீண்டும் வேதம் கேட்டு ஏதம் நீங்கலாம் என்று விதித்தார்.

இந்தச் சின்ன விஷயத்துக்கு இவ்வளவு பெரிய தண்டனையா? முருகனும் விநாயகனும் வேத புத்தகங் களை ஓதம் மிக்க கடலில் தூக்கி வீசி எறிந்தனர்; இந்த

அரட்டைகளை யார் உள்ளே விட்டது என்று நந்தியை விரட்டினார். சொந்தப்பிள்ளைகள் ஆயிற்றே என்று எந்தத் தடையும் செய்யவில்லை என்று சொல்லிப் பார்த்தான். "கடலில் கோள்சுறாவாக நீ நாள் கடத்துக" என்று சாபமிட்டார். முருகனை ஊமையனாக மதுரையில் வணிகன் வீட்டில் பிறக்கத் தண்டித்தார். ஏற்கனவே யானைமுகமும் பானைவயிறும் பெற்றவனுக்கு அதைவிட வேறு தண்டனை கொடுக்கமுடியாது என்பதால் அவனை மன்னித்து விட்டு விட்டார்.

இஃது இவ்வாறு இருக்கப் பாண்டிய நாட்டில் கீழைக் கரையில் பரதவர் தலைவன் ஒருவனுக்கு மகப்பேறு இல்லாமல் சோமசுந்தரரிடம் முறையிட்டுக் கொண்டிருந்தான். புன்னை மரநிழலில் அன்னை உமையாள் சின்னக் குழந்தையாகத் தவழ்ந்து கிடந்தார். அக் குழந்தையை வாரி எடுத்துக் கொண்டு தன் மனைவியிடம் தந்து அவள் ஏக்கத்தைப் போக்கினான். மகள் வளர்ந்து கதாநாயகியின் அந்தஸ்தைப் பெற்றாள்.

கடலில் நந்தி சுறாவாகப் பிறந்து மீனவர் வலைக்குத் தப்பித் திரிந்தது. அந்தச் சிறுவர்கள் சிதறிய வேத நூல்களைத் தேடிக் கரை சேர்த்தது. அதை மீனவர்கள் அடக்க முடியாமல் இடக்கு விளைவித்தது. மீனவர் தலைவன் யார் அதைப் பிடித்து அடக்குகிறானோ அவனுக்கே தன் மகள் உரியவள் என்று கூறி ஒரு சனகனாக மாறினான்

இறைவன் மீனவ இளைஞனாக அங்கு வந்தார். "நீ யார்? செய்தி யாது?" என்று மீனவன் கேட்டான். "வலை வீசி இங்குப் பிழைக்க வந்தேன்" என்றார். "அலை வீசும் கடலில் உள்ள முரட்டுச் சுறாவினைப் பிடித்தால் பரிசு தருவேன்" என்றான்.

அதனை அடக்கி மடக்கிக் கரை சேர்த்தான். மீனவர் மகளைக் கொண்டு வந்து முன் நிறுத்தினான்'

"மீன் கண் உடையவளாக இருக்கிறாளே" என்றார்.

"மீனாட்சி" என்றான்.

"அவள் தான் ஆட்சி செய்த இடம் இம் மதுரை யாயிற்றே" என்றார்.

"சுந்தரன் நீ; இவளை ஏற்றுக் கொள்" என்றான்.

கைவலையில் சுறாவும், அவர் கண் வலையில் மீனாட்சியும் சிக்கினர்; அவளை மணம் செய்து கொண்டு விமோசனம் அளித்தார்.

சோமசுந்தரர் அவசரப்பட்டு மதுரைக்குத் திரும்ப வில்லை. திருவுத்தர கோச மங்கை என்னும் தலத்தில் தங்கி உமா தேவியார் வணங்கிக் கேட்க வேதத்தின் மறை பொருளை உரைத்துத் தெளிவு படுத்தினார். அங்கு வந்து வழிபட்ட பக்தர்களுக்கு வேண்டிய வரங்கள் தந்து பின் மதுரை வந்து அடைந்தனர்.

## 58. திருவாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்

ஊனைச் சுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தவர் மாணிக்க வாசகர். தேவாரம் பாடிய மூவருக்கும் பின் தோன்றியவர். மாணிக்க வாசகமும், தேவாரமும் இறைவனுக்குச்சூட்டப் படும் இசைப் பாமாலைகள் ஆகும். திருவாசகம் தத்துவக் கருத்துகளைக் கொண்டதாகும். உயிர்களின் இயல்பை

விளக்கி அவை தழைக்க இறையருள் வேண்டும் என்று கூறியவர். அவரைச் சுற்றிய கதைகள் இங்குக் கூறப்படுகின்றன.

அவர் பிறந்த ஊர் திருவாதவூர் என்பதாகும். அது பாண்டிய நாட்டில் வைகைக் கரையில் உள்ளது. அவருடைய இயற்பெயர் அறிந்தலது; அவர் பாடிய நூலைக் கொண்டு மாணிக்க வாசகர் என்று அழைக்கப்படுகிறார். ஊர் பெயரைக் கொண்டு திருவாதவூரர் என்று அழைக்கப்படுகிறார்.

திருவாதவூரில் அமாத்தியப் பிராமண குலத்திலே சைவம் தழைக்கப் பிறந்தவர் என்று கூறப்படுகிறது. வேதியர் குலத்தில் பிறந்தும் அவர் படைக்கலப் பயிற்சியும் போர் பற்றிய கல்வியறிவும் வல்லவராக இருந்தார். புற உலகில் அவர் பேரறிஞர் எனப் பாராட்டப் பெற்றார். அமைச்சர்களுள் அவர் தலைமை பெற்று விளங்கினார்,

நாடகத்தில் நடிப்பது போல அவர் புற வாழ்வு இயங்கியது. அவர் மனம் இறைவனுக்குத் தொண்டு செய்வதையே விரும்பியது. அது வெறியாகவும் அவரிடம் செயல்பட்டது.

அரிமர்த்தன பாண்டியன் தான் பொருள் பெட்டகத்தை அவரிடமே தந்து அதன் பொறுப்பையும் அவருக்கே உரியது ஆக்கினான். போருக்குச் சீரமைப்புத் தேவைப்பட்டது, படைகள் குதிரைகள் இன்றி வலுவிழந்து இருந்தன. சேனைத் தலைவர்கள் அரசனிடம் குதிரைகள் வாங்க வேண்டிய தேவையையும் அவசரத்தையும் உரைத்தனர்.

திருப்பெருந்துறை என்ற கடற்கரைப் பட்டினம் சென்று அங்கே இறங்கும் வெளிநாட்டுக் குதிரைகளை வாங்கிவரத் தக்கவர் திருவாதவூரரே என்று முடிவு செய்யப்பட்டது.

அவர் மனமெல்லாம் திருப்பெருந்துறைக்குச் சென்று அங்கே கோயில் திருப்பணி செய்வதிலேயே சுழன்றது.

பொருட் பெட்டகத்தின் திறவு கோலைத் தந்து வேண்டிய பொன்னையும் பொருளையும் எடுத்துப் போகவும் என்று கூறி அரசன் அனுப்பினான்.

திருப்பெருந் துறையில் குருந்த மரத்து நிழலில் ஞானகுருவாக இறைவன் அமர்ந்திருந்தார். சீடர்களும் சுற்றி நின்று கொண்டிருந்தனர். வாதவூரர் ஞானகுருவாக வந்த மோனத் தவசியை வணங்கி மன இருள் நீங்கப் பெற்றார்; அவரைக் கண்டு ஞான உபதேசம் பெற்ற பின் அக்குருந்த மரத்தை நாடி மறுபடியும் சென்றார். தாம் கண்ட ஞானியரின் திருவுருவைக் காணமுடியவில்லை. காதலனிடம் நெஞ்சைப் பறி கொடுத்த காதலியின் நிலை அவருக்கு ஏற்பட்டது. ஞான தேசிகனைக் காணாமல் அவர் மனம் சுழன்றது. பித்தம் பிடித்தவர் போல் சுற்றிச் சுற்றி வந்தார்.

கொண்டு சென்ற பொருள் தெய்வத் தொண்டுக்குப் பயன்பட்டது; செலவழித்த பொருளுக்குக் கணக்கு வைக்கவில்லை. அரசனின் பொன்னும் பொருளும் ஆபரணங்களும் கல்லும் சிற்பமும் ஆக உருவெடுத்தன.

அரசன் தந்த காலக் கெடுவும் தீர்ந்தது; பணியாட்கள் அவரை நினைவுபடுத்தினர். குதிரைகள் வாங்காமல் எப்படித் திரும்புவது என்ற வினாவை எழுப்பினர்.

''நான் யார் என் உள்ளம் யார்'' என்ற ஆய்வில் இருந்தவர்; தான் ஒரு அமைச்சர்; குதிரை வாங்க வந்த பொருளைத் தொலைத்த குற்றவாளி என்பதை உணர ஆரம்பித்தார். அரசன் ஆணை அவரை அச்சுறுத்தியது. எனினும் இறைவன் கைவிடமாட்டான் என்ற நம்பிக்கை இருந்தது.

''திருப்பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவனிடம் முறையிட்டார். குதிரை வாங்குதற்குரிய பொருள் உனக்கே செல விட்டேன்; நீ குதிரையைக் கொண்டு வருவது உன்கடமை'' என்று விண்ணப்பித்தார். ''குதிரை வரும்; நீ கவலைப் படாமல் மதுரை போ'' என்று இறைவன் குரல் கேட்டது.

நகர் வந்ததும் அரசனிடம் உறுதியாகக் குதிரைகள் வரும் என்று உறுதி அளித்தார். அரசனும் ஆவலாகத் காத்திருந்தான். எனினும்அவன் நெருங்கிய சுற்றத்தினருக்கு அந்த நம்பிக்கை அறவே இல்லாமல் இருந்தது.

## 59. நரி பரியாக்கிய படலம்

ஆடி மாதம் முடிவதற்குள் குதிரைகள் வந்து சேரும் என்று ஓடி அரசனிடம் உரையுங்கள் என்று சொல்லப் படைத் தலைவர்களை வாதவூரர் அனுப்பிவைத்தார். அதே சமயத்தில் கோடிப் பொன் கொண்டு கோயிற் பணி செய்து அழித்ததையும் அவர்கள் சென்று உரைத்தனர்' அரசன் அவசரப்பட்டு ஆவேசம் கொள்ளாமல் அவர்குறிப் பிட்ட மாதம் ஆடி வரை உரையாடாமல் காத்திருந்தான்.

ஆடி இறுதியில் மாணிக்க வாசகரை அழைத்துப் பாண்டியஅரசன் ''இனிக்குதிரைகள் எப்பொழுதுவரும்?''

என்று விசாரித்தான். அவர் ''இன்று முதல் மூன்று நாட்களில் அவை வந்து விடும்''. என்று கூறி அவை நிற்றற்குக் கொட்டகைகளையும், குடித்தற்கு நீர்த் தொட்டிகளையும், கட்டி வைக்கக் கயிறுகளையும் தயாரித்து வைக்கச் சொன்னார்.

அவர் குறிப்பிட்ட மூன்று நாட்களும் கழிந்தன நம்பிக்கை இழந்து அரசன் அவரைக் கட்டி இழுத்து வந்து ஒறுக்குமாறு கட்டளை இட்டான்.

கொலையாட்கள் அவரை இழுத்து வந்து அவர் மீது கற்களை அடுக்கி வைத்துச் சுமை ஏற்றினர், சொற்களைக் கடுமையாக்கி வருத்தினர். கால்களில் விலங்கிட்டு இழுத்துச் சென்றனர். கைகளில் கிட்டி இட்டு இறுக்கினர். அவர்கள் கடுமையான தண்டனைக்கு அஞ்சாது இறைவனை நினைத்து அவர் திருவடிகளே சரணம் என்று செயலிழந்து நின்றார். இறைவன் திருவருளால் அவரை அவர்கள் எவ்வளவு வாட்டினாலும் அவர் அதனால் பாதிக்கப்படவில்லை.

அதற்கு மேலும் காலம் தாழ்த்தக் கூடாது என்று இறைவன் கருணை கூர்ந்து ஆடி முடிவதற்குள் அன்று மாலைப் பொழுது காட்டில் உள்ள நரிகளைப் பரிகளாக்கி (பரி-குதிரை) கண நாதர்களைக் குதிரைச் சேவகர் களாக மாறச் செய்து, தானும் அவர்களுள் ஒருவனாகத் தலைமை தாங்கிக் குதிரைகளோடு நகர் வந்து சேர்ந்தார். வரவை எதிர்பார்த்தஅரசனுக்கு அக்காட்சி துயர் தீர்க்கும் மருந்து ஆகியது.

குதிரை வீரர்களுள் தலைமை தாங்கி வந்த இறைவன் அக்குதிரைகளை அரசனிடம் சேர்ப்பித்தார். ''அரசனே!

உமது அமைச்சர் உமது பொருளைக் கொண்டு எமக்கும் எம்மவர்க்கும் கொடுத்துச் செலவிட்டார்; அதற்கு ஈடாக விலை மதித்தற்கு அரிய குதிரைகளை உம்மிடம் சேர்க்கிறோம். அதற்கு அடையாளமாக நீர் கயிறு மாற்றிக் கொள்க'' என்று கூறி அவனிடம் அடையாளத்துக்கு ஒரு குதிரையின் சேணக் கயிற்றை மாற்றிக் கொடுத்து ஒப்படைத்தார்.

''இன்று குதிரைகளை உம்மிடம் ஒப்படைத்து விட்டோம், இனி அவற்றைக் காப்பதும் காவாததும் உம்முடைய பொறுப்பு. மாணிக்க வாசகரிடம் நீர் ஒப்புவித்த கடமை முடிந்து விட்டது'' என்று கூறி இறைவன் விடை பெற்றார்.

சேவகனாக வந்த இறைவனின் தனித்தோற்றம் பாண்டியனைக் கவர்ந்து விட்டது தன்னையும் அறியாமல் எழுந்து நின்று வரவேற்றுப் பேசினான். அதே போல விடை கொடுத்து அனுப்பிய போதும் கரங்குவித்து விடை தந்தான்.

மாணிக்கவாசகர் விடுதலை செய்யப் பெற்றார். குதிரை வீரர்களுக்குப் பொன் பட்டாடை தந்து அவர்களைச் சிறப்பித்தான், இறைவனுக்கும் உயரிய பட்டாடை அணிவித்துச் சிறப்புச் செய்தான். குதிரைகள் கொட்டிலில் கட்டி வைக்கப்பட்டன. வேதமாகிய குதிரையில் ஏறிவந்த இறைவன் அந்த ஒரு குதிரையை மட்டும் தன்னிடம் வைத்துக்கொண்டு மற்றையவற்றை அரசனிடம் ஒப்புவித்தார். அரசனுடைய பணியாட்கள் குதிரைகளை வரிசையாகக் கட்டி வைத்து அன்று இரவு பராமரித்தார்கள்.

விடுதலை பெற்ற வாசகரை அவர் மாளிகைக்கு அனுப்பி வைத்து அரசன் வந்திருந்தவருக்கு உபசாரம் செய்து பிரிந்து தன் அரண்மனையை அடைந்தான். வாசகர் நேரே சோமசுந்தரர் திருக்கோயிலை அடைந்து அவர் அற்புதத் திருவிளையாட்டை எண்ணி எண்ணி இறைவனுக்குத் தம்நன்றியைத் தெரிவித்துக்கொண்டார்.

## 60 பரி நரியாகிய படலம்

கட்டி வைத்த பரிகள் அன்று இரவு உரு மாறின; கொட்டி வைத்த கொள்ளும் புல்லும் தின்னாமற் கிடந்தன. பரிகள் நரிகள் ஆயின. காட்டில் திரிந்து கொண்டிருந்த தம்மை இப்படிக் குதிரைகளாகக் கட்டிப் போட்டார்களே என்று அவை வருந்தின. நத்தையும் நண்டும் தின்று பழகிய தமக்கு இந்தச் சொத்தைப்புல்லைப் போட்டு வாட்டினார்களே என்று வேதனைப்பட்டன. எப்பொழுது விடுதலை பெறுவோம் என்று காத்துக் கிடந்தன.

கட்டிய கயிறுகளை அறுத்துக் கொண்டு ஓடுவதில் முனைந்தன. பிணமும் அழுகலும் தின்று பழகிய அவற்றிற்கு ஊனும் இறைச்சியும் தின்ன வேட்கை பெருகியது. ஏற்கனவே கட்டி வைத்த குதிரைகளைக் குதறித் தின்றன; அவை கதறி ஓலமிட்டன; ஊருக்குள் புகுந்து ஆடுகளையும் கோழிகளையும் கடித்துக் கொன்றன. குதிரைகளின், கனைப்பொலி கேட்ட கொட்டகைக் காவலர்கள் நரிகள் ஊளையிடும் குரலைக்கேட்டு அதிர்ச்சி அடைந்தனர். நடு இரவில் கொள்ளை அடிக்கப் புகுந்த கள்வர்களைப் போல நரிகள் நாலாபுறமும்ஓடி ஊரை அல்லோலகப்படுத்தியது. அவரவர் தம் உடைமைகளாகிய ஆடு மாடுகளை நரிகள் குதறித் தின்பதைக் கண்டு கதறி முறையிட்டனர்.

ஊர்க் காவலர்கள் கடுக ஓடி அரசுக் காவலனிடம் இச் செய்தியை உரைத்தனர். பரிகள் என்று கட்டி வைத்த குதிரைகள் மாயமாய் மறைந்து விட்டன. அவை உருமாறி நரிகள் ஆகிவிட்டன. அவை ஏற்கனவே கட்டி வைத்திருந்த குதிரைகளையும் கடித்துக் குதறிவிட்டன. ஊரில் புகுந்து உயிர்களைக் கொன்றுவிட்டன. அவை அனைத்தும் காடு நோக்கி ஓடி விட்டன. முடமும் கிழமும் மட்டும் கட்டுக்குள் இருக்கின்றன'' என்று கூறி முறையிட்டனர்.

நடந்தன எல்லாம் கனவோ களவோ என்று அறியாமல் அச்சமடைந்நான்; வாசகர் உரைத்தவை யெல்லாம் மோசடி என மதிப்பிட்டான். பித்தளையைப் பொன்னாக்கித் தருவோம் என்று சொல்லும் மோசடி வித்தையைப் போன்றது இது எனக் கருதினான். கொண்டு சென்ற பொன்னைக் கொட்டி அழுது விட்டுக் காட்டு நரிகளைக் கட்டிப்பிடித்து ஆடிய நாடகம் இது என மதித்தான். வந்தவர் அனைவரும் மோசடி செய்யும் வேடதாரிகள் என்று கணித்தான். குட்டிமத்தான் சாத்தான் கண்கட்டி வித்தை இது என்று முடிவு செய்தான்.

எல்லாம் இனிதே முடிந்தது என்று கதையை எழுதி வைத்து ஏடுகளை மூடி வைக்கும் எழுத்தாளனைப் போல அமைதியாக மன நிறைவோடு உறங்கி விழித்து எழுந்த மாணிக்க வாசகரைக் கட்டி இழுத்து வந்து காவலன் முன் நிறுத்தினர். அரசன் கடுஞ்சினத்தோடு ஏவலர்களுக்கும் ஆணை இட்டான். ''இவன் கொட்டி வைத்த பொன்னைக் கோயில் கட்டி வைக்க ஒழித்துவிட்டுக் காட்டு நரிகளை ஓட்டு குதிரைகளாக மாற்றிக் கொண்டு வந்து நிறுத்தி இருக்கிறான். கொண்டு சென்ற பொன்னை மீண்டும் வந்து நிறுத்தும் வரைக் கடும் வெய்யிலில் நிறுத்திக் கால் கடுக்கச் செய்து கோல் கடுக்க அடித்துக் கக்க வையுங்கள்.

யார் வீட்டுப் பணம் இது; மக்கள் பணம்; அவர்களைக் காக்கக் குதிரைகள் வாங்கச் சொன்னால் கோயில் கட்டிக் கும்மாளம் போடுகிறான் இவன். இவனைக் கட்டி வைத்து அடியுங்கள்'' என்று அரிமர்த்தன பாண்டியன் அரி என முழங்கினான்.

வைகை ஆற்று மணலில் நடுப்பகலில் வாசகரை நிறுத்திவைத்து நிதி கொண்டுவந்து வைக்கஎன்றுசொல்லிச் சவுக்கால் சாடினார். பட்டுப்போன்ற அவர்மேனி சல்லடைகள் ஆயின; குருதி வடியும் வடிவுகள் கண்ணீர் வடித்தன. தண்ணீர் இல்லாத அந்த வைகை குருதி யாகிய தண்ணீரைத் தாங்கிச் செந்நிறம் பெற்றது

''இனி பொறுப்பதில்லை; அவன் கதறி அழுவதை நாம் தாங்கிக் கொள்ள முடியாது'' என்று சிவனார் வைகைக்கு ஆணையிட்டார்.

''நீ காட்டு யானைபோலச் சீறிப் பாய்க; கடல் உன்னிடம் தோற்க வேண்டும்; உன் மிடல் கொண்டு தாக்கு; கரைகளைப் போக்கு; ஊரை அழிக்க நீ புறப் படுக'' என்று ஆணையிட்டார்.

காலைச் சுட்ட வெப்பம் தணிந்தது, வெள்ளம் வருதல் கண்டு ஊரவர் அஞ்சி அலறினர். அடைத்துக்கொண்டிருந்த ஆட்கள் தற்காப்புக்காக அந்த இடத்தை விட்டு அகன்றனர். கரை உடைத்துச் செல்லும் வெள்ளம் கண்டு

மனக்கலக்கம் அடைந்தனர். தம் தட்டு முட்டுச் சாமான்களைக் கட்டி எடுத்து வைக்கத் தம் வீடுகள் போய்ச் சேர்ந்தனர். வாசகர் எல்லாம் இறைவனின் செயல் என்று நினைத்தவராய்ச் சோமசுந்தரக் கடவுள் திருக்கோயில் சென்று இறைவனைத் தியானித்துக் கொண்டு சுற்றுப் புறத்தை மறந்து நின்றார்.

## 61. மண் சுமந்த படலம்

வைகையில் வெள்ளப் பெருக்கு எடுத்தது; அதனைச் சுருக்கக் கரைகள் கட்டும் பணியை வகுத்துத் தந்தனர், வீட்டுக்கு இவ்வளவு கரை என்று அளந்து தந்தனர். அளப்பரிய கருணைக்கடலாகிய சோம சுந்தரரிடம் ஈடு பாடும் வழிபாடும் கொண்டிருந்த வந்தி என்னும் கிழவிக்கு உரிய பங்கை அளந்து விட்டனர். பிட்டு விற்று அதனால் வரும் துட்டைக்கொண்டு காலம் கடத்தும் அவள் தனியாளாக இருந்தாள். கட்டியவனும் இல்லை. அன்பு கொட்டி வளர்க்கும் காதல் மகனும் தனக்கு இல்லை. வீட்டுக்கு ஒரு ஆள் அனுப்பப்படும் நிலையில் அவள் என்ன செய்வாள்.

தான் வழிபடும் தெய்வமாகிய சோமசுந்தரரிடம் முறையிட்டாள். "கல்விப்பெருக்கைப் போல் தடைபடாமல் வரும் வெள்ளப்பெருக்கை அடக்க அவரவர் தம் கடமை செய்கின்றனர் உன்னைத் தவிர வேறு உடைமை எனக்கு இல்லாத நிலையில் எனக்கு நீ உதவ வேண்டும்" என்று முறையிட்டுக் கரையிட்டு மண் கொட்ட ஆள் கேட்டவளாய்த் தன் தொழிலில் ஈடுபட்டவளாக இருந்தாள். வழக்கம்போல் பிட்டு அங்கு விற்றுக்கொண்டிருந்தாள்.

மண் வாசனையை நேரில் அறிய விண்ணவர் வழிபடும் தேவனாகிய சோமசுந்தரர் தலையில் சும்மாடுகட்டி மண்வெட்டியோடு இடுப்புக்கு ஒரு ஆடையும் மேலுக்கு ஒரு ஆடையும் தாங்கி வாட்ட சாட்டமான வாலிபத் தோற்றத்தோடு ''கூலிக்கு ஆள் தேவையா?'' என்று குரல் கொடுத்துக் கொண்டு வந்தியை நோக்கி வந்தார்.

''சுந்தரனே; இங்கே வா; என்று அழைத்தாள் அந்தப் பாட்டி. எந்திரம் போல் சுற்றி வந்து அவள் முன் நின்றான்.

''கூலிக்கு ஆள் வர முடியுமா?''

''வருகிறேன்; என்ன தருகிறாய்?''

''பிட்டுத் தவிரத் துட்டு என்னிடம் இல்லை தம்பி''

''உதிர்ந்த பிட்டுகளைத் தந்தால் போதும் பசியாறக் கொடு; அது போதும்''

'சரி' என்றாள்

''களைத்து வந்திருக்கிறேன்; முதலில் பிட்டு கொடு'' என்றான்.

''தேவர் அமுதினும் இனியது'' என்று சுவைத்துப் பாராட்டினான்.

வேலை செய்யாமலேயே ஓடிப்பாடி ஆடித்திரிந்து விட்டுப் ''பசிக்குது'' என்று சொல்லிக் கை நீட்டினான்.

அம்முதியவளும் முகம் கோணாமல் சுட்ட பிட்டை எல்லாம் அவனுக்கே தந்து மனம் மகிழ்ந்தாள்.

11

மற்றவர்கள் பங்கெல்லாம் அடைபட்டு முடிந்தன; கிழவியின் பங்கு மட்டும் அப்படியே இருந்தது. அதன் வழியாக வெள்ளம் கரை மீறி வெளியேறியது.

''யாரது? யாருடைய பங்கு?'' என்று அதட்டிக் கேட்டனர் மேலதிகாரிகள்.

''வந்தியின் பங்கு'' என்றார் கூலியாள்.

''ஏன் அடைபடாமல் இருக்கிறது''

''தடைபடாமல் பிட்டு உண்கிறேன். தின்று முடிய வில்லை'' என்று எதிர் பேசினான்.

அரசனிடம் ஆட்கள் கோள் மூட்டினர். ''இந்த ஆள் மட்டும் தன் கடமையைச் செய்யவில்லை. பார்த்தால் பசி தீரக் கூடிய அழகு அவனிடம் இருக்கிறது. பரம்பரைத் தொழிலாளியாகத் தெரியவில்லை; பார்த்திபன் மகன் போல் மேனிப்பொலிவோடு இருக்கிறான்; பெரிய வீட்டுப் பிள்ளை போல் இருக்கிறான்; அவனை அடிக்க எங்களுக்கு மனம் வரவில்லை;கட்டிப் பிடிக்க அவன் அகப்படவில்லை என்று அறிவித்தனர். பாண்டியன் கையில் பொற்பிரம்பு ஒன்று ஏந்திக் கட்டிய கரைகளையெல்லாம் பார்த்துக் கொண்டு மன நிறைவு கொண்டு வந்தவன் பல் ஒன்று உடைந்த பொக்கை வாய் போன்று இருந்த இந்தக் கரைப் பகுதியையும் கண்டான்.''யார் இக்கரைகட்டவேண்டியது அக்கரை காட்டவில்லையே'' என்று வினவினான்.

குந்தியிருந்த வந்தி எழுந்து நின்றாள். ''என் பங்கு இது'' என்றாள். ''ஏன் அடைக்கவில்லை'' என்று கேட்டான் ''என் ஆள் இன்னும் பிட்டுத் தின்று முடிக்க வில்லை'' என்று கூறினாள்.

''யார் இங்கே வா'' என்று அழைத்தான்.

பார் மகிழப் பாடிக் கொண்டே வந்து நின்றான்.

''உன்னைப் பார்த்தால் வேலை செய்பவன் போல் தெரியவில்லை''

''கண்ணுக்குச் தெரியாது; ஆனால் நான் தான் இருந்து ஆற்றுகிறேன்'' என்றான்.

''மண்ணைச் சுமக்க வந்த நீ பண்ணைச் சுமந்து பாடுவது ஏன்?''

''கோயிலில் இசை கேட்டுப் பழக்கம்''

''மற்றவர்கள் எல்லாம் தம்பங்கை முடித்து விட்டார்களே'' என்றான்.

''பிட்டுக் கிடைத்திருந்தால் அவர்களும் தின்று இருந்திருப்பார்கள். சுவை என்னைக் கட்டுப்படுத்தி விட்டது''

''சுவைபடப் பேசுகிறாய்'' கவைக்கு நீ உதவ மாட்டாய்'' என்றான் அரசன்.

''உன் பெயர் என்ன?''

''அழகாக இருப்பதால் சுந்தரன் என்று அழைப்பார்கள். முடியில் பிறை அணிந்திருந்தேன்; அதனால் சோம சுந்தரன் என்றும் கூறுவர்''.

''உன் ஊர் எது?''

''இனிமை மிக்க மதுரை''

''எங்கே தங்கி இருக்கிறாய்?''

''வீடு என்பது எனக்கில்லை; கோயில் சுடுகாடு''

''மனைவி?''

''அவள் பாதியாகி விட்டாள்''

''பிள்ளைகள்?''

''பெரியவன் கொழுக்கட்டைப் பிரியன்; சின்னவன் மயிலேறும் பெருமாள்''

''உன்னைப் பார்த்தால் பிள்ளைகுட்டிக்காரனாகத் தெரியவில்லையே''

''என்றும் இளமையோடிருப்பேன்; அதனால் தெரியாது''

''நான் இந்த நாட்டு அரசன்; என்னைக் கண்டால் நீ அஞ்சுவதாகத் தெரியவில்லையே''

''நாம் யார்க்கும் குடியல்லோம்''

''நாவுக்கரசர் போல் பேசுகிறாயே''

''தேவாரப்பாடல் கேட்டுப் பழக்கம்''

''கலையுள்ளம் படைத்த நீ கடமை செய்வதற்குத் தகுதியில்லை''

''இந்தக் கிழவி என்னையே வேண்டினாள்; அவள் வேண்டுகோளை மறுக்க இயலவில்லை''.

''அதிகப் பிரசங்கியாக இருக்கிறாய் நீ''

''கோயிலில் பிரசங்கங்கள் கேட்கும் பழக்கம் அவ்வளவுதான்''.

''இங்கே வா'' என்றான்.

''அடிக்காதீர்கள்'' என்றார்.

''அடியாத மாடு படியாது'' என்றான்.

''மனிதனை மனிதனாக நடத்துவதுதான் மரியாதை'' என்றான்.

''உனக்கு என்ன மரியாதை வேண்டி இருக்கிறது; கொடுத்த வேலை செய்யவில்லை; மரியாதையாகத் தட்டைத் தலையில் வை; வெட்டியில் மண்ணைத் தோண்டு; கரை கட்ட முயற்சி செய்''

''எனக்கு அக்கரை இல்லை'' என்றான்.

பிரம்பால் ஓர் அடி முதுகில் வைத்தான்; அடுத்த வினாடி அவன் தலையில் வைத்திருந்த கூடையோடு மண்ணைக் கரையில் போட்டு உரு மறைந்தான். கரை ஏறியது; கட்டி முடித்தாகி விட்டது; ஆனால் இறை அங்கு இல்லை.

பிரம்படி அவன் முதுகில் பட்டது; அது இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள எல்லா ஜீவன்கள் மீதும் பட்டுப் பாண்டியனின் முதுகிலும் பட்டது. அவன் அருகில் இருந்த அமைச்சர் மீதும் பட்டது; சுவர்களில் உள்ள சித்திரங்களிலும் பட்டது;

பாண்டியன் தான் செய்த தவற்றை உணர்ந்தான். வந்தவர் சோமசுந்தரக் கடவுள் என்பதை அறிந்து வருந்தினான். தெய்வ வாக்கு வானில் எழுந்தது. பாண்டியன் செய்த தவற்றைச் சுட்டிக் காட்டியது.

வந்திக்கு விமானம் வந்தது; அவளுக்கு வானவர் வரவேற்புத் தந்தனர். விண்ணுலகவாசியாக அவள் அங்கு அனுமதிக்கப்பட்டாள்.

மாணிக்க வாசகரிடம் அரிமர்த்தன பாண்டியன் சென்று வணங்கித் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்; "எல்லாம் இறைவன் திருவிளையாடல்" என்று கூறி அரசனிடம் அமைச்சர் பதவியிலிருந்து விலகி நின்றார்;

திருவாசகம் பாடித் தெய்வ அருள் வாக்கைப் பரப்பினார் சிதம்பரம் சென்று நடனத் தலைவனைக் காண விடைபெற்று மதுரையை விட்டு நீங்கினார். அரசனின் தொடர்பு நீங்கி ஆனந்தத் தாண்டவம் ஆடும் பேரின்பப் பொருளையே நினைத்து அல்லும் பகலும் அவன் புகழ்பாடி இறையுணர்வு நிரம்பியவராக வாழ்ந்தார்.

அங்கே சோழ அரசனின் மகள் ஊமையாக இருந்தாள். அவளைப் பேச வைத்தார். புத்தர்களோடு வாதிட்டு வென்று சைவ சமயத்தை நிலைநாட்டினார். தமிழும் சைவமும் தழைக்க அவர் பணி தொடர்ந்தது; அங்கேயே அவர் முத்தி நிலையையும் அடைந்தார்.

## 62. பாண்டியன் சுரம் தீர்த்த படலம்

அரிமர்த்தன பாண்டியனுக்குப் பின் அவன் சந்ததியர் ஆட்சிக்கு வந்தனர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவன் கூன் பாண்டியன் என்பவன் ஆவான். அவன் சோழ மன்னனின் மகள் மங்கையர்க் கரசியரை மணந்து வாழ்ந்து வந்தான். சோழ நாட்டில் இருந்து அரசியோடு குலச்சிறை என்ற அமைச்சர் உடன் வந்தார்.

அரசன் எவ்வழி குடிகள் அவ்வழி என்பர். பாண்டியர்கள் தொடர்ந்து இதுவரை சைவ சமயத்தையே தழுவி வந்தனர். இவன் ஒருவன் மட்டும் விதி விலக்கானான்; சமண மதத்தில் அவன் ஈடுபாடு காட்டினான்.

மங்கையர்க்கரசியார் அறிவும் ஆற்றலும் மிக்கவர்; சைவ சமய ஈடுபாடும் சோமசுந்தரரின் வழிபாடும் கொண்டவராக விளங்கினார். குலச்சிறையாரும் சைவ சமய வளர்ச்சியில் அக்கறை காட்டினார்.

அரசன் சமண சமயத்தைத் தழுவியதால் நாட்டு மக்களும் மதம் மாறுவர் என்ற அச்சம் அரசியாருக்கு ஏற்பட்டது. அரசனைத் திருத்தி வழிப்படுத்த அவள் முனைந்தாள். வெற்றி பெறவில்லை சோமசுந்தரர் கோயிலுக்குச் சென்று வழிபட்டுத் தம் கணவனைச் சமயம் மாறும்படி உதவ வேண்டினாள். அப்பொழுது அங்கே சீர்காழியிலிருந்து வந்த பிராமணர் ஒருவர் சோம சுந்தரரைத் தரிசிக்க வந்திருந்தார். அப்புதியவரிடம் பேச்சுக் கொடுத்து அவர் ஊர் செய்திச் சிறப்புகள் குறித்து மங்கையர்க்கரசியார் விசாரித்தார்.

''சீர்காழி'' என்றான் அவன்.

''அங்குச் சிறப்புச் செய்தி உளதோ?'' என்றாள்.

''சீர்காழியில் சிவபாத இருதயர் என்னும் அந்தணருக்கு ஞான சம்பந்தர் என்னும் அருட் செல்வர் மகனாகத் தோன்றியுள்ளார். மூன்றாம் வயதிலேயே உமை தந்த பாலை உண்டு ஞானம் பெற்றார். தேவார இன்னிசைப் பாடல்களைத் தலந்தோறும் சென்று வழிபட்டு வருகின்றார். அவர் வயதில் இளைஞர்; அறிவில் முதிர்ந்தவர்;

சமணரோடு வாதிட்டு வென்று வருகிறார்; அவர் புகழ் சோழ நாடு எங்கும் பேசப்படுகிறது; திருநாவுக்கரசரோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்; முத்துச் சிவிகையில் அவர் பல தலங்களுக்குச் சென்று பாடல் பல பாடி வருகிறார். இது சிறப்புச் செய்தி'' என்று அறிவித்தான்.

குருடனுக்குப் பார்வை கிடைத்தது போன்ற மகிழ்ச்சி அவ் அம்மையாருக்கு உதித்தது. அருட் செல்வராகிய ஞான சம்பந்தர் வந்தால் தம் கணவர் சமயம் மாறுவார் என்ற நம்பிக்கை பிறந்தது. ஞான சம்பந்தர் வேதாரணியத்தில் இருப்பதாகக் கேள்விப்பட்டார். அந்தப் பிராமணனிடம் ஓர் ஓலை எழுதித் தந்து அவரிடம் சேர்ப்பித்து இங்கு வருமாறு செய்தி அனுப்பினார்.

குலச்சிறையாரும் மங்கையர்க்கரசியாரும் சேர்ந்து எழுதிய ஓலையைப் படித்துச் சிவப்பணி காத்துக் கிடக்கிறது என்பது அறிந்த ஞான சம்பந்தரும் புறப்பட முனைந்தார்.

வயதில் மூத்தவரும் சமணரின் கொடுமைகளுக்கும் ஆளாக்கப்பட்டவரும் ஆகிய திருநாவுக்கரசர், ஞானசம்பந்தர் அங்குச் செல்வது உயிருக்கு ஆபத்து என்றும், சமணர் கொலைக்கும் அஞ்சாதவர் என்றும், நாளும் கோளும் சரியில்லை என்றும் அறிவித்தார்.

இறைவனிடம் நம்பிக்கையும் மன உறுதியும் உடையவரை நாள் என் செய்யும் கோள் என் செய்யும் என்று கூறினார். இறைவன் காப்பாற்றுவான் என்ற நம்பிக்கை முழுவதும் இருந்ததால் உயிருக்கு அஞ்சுவது தேவை இல்லை என்றும் போவதே தக்கது என்றும் கூறிப் புறப்பட்டார்.

திருஞானசம்பந்தர் பல தலங்களுக்கும் சென்று வழிபட்டு இறைவனைப் பாடி ஒரு திருக்கூட்டத்தோடு மதுரை வந்து சேர்ந்தார். அங்கே வாசீசர் என்ற முனிவர் அவரை வரவேற்றுத் தம்முடைய திருமடத்தில் தங்குமாறு வேண்டிக்கொண்டார். அதற்கு அவரும் இசைந்து ஓர் இரவு அங்குத் தங்கித் திருவமுது செய்தார்.

ஞானசம்பந்தரின் வருகையை அறிந்த சமணர்கள் அவரை அங்கேயே ஒழித்து விடுவது என்ற முடிவு செய்தனர். அவர் இருந்த மடத்துக்குத் தீவைத்தனர். அத் தீ அவரைப்பற்றவில்லை. அந்தச் சமணர்கள் மூட்டிய தீ பாண்டியனைப் பற்றுக என்று ஏவிவிட்டார். அது வெப்ப நோயாக அவனைப் பற்றி எரிந்தது.

அரசனுக்கு வெப்ப நோய் வந்தது குறித்து மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மிகவும் வருந்தினர்; மருந்துகள் பலவும் தந்து அரசனைக் குணப்படுத்த முயன்றனர். மருத்துவம் அவரைக் குணப்படுத்தவில்லை; மதிமிக்க மாந்தரீகம் அவரைத் தொட்டுத் துயர் நீக்க முயன்றது. சமணர்கள் தொடத் தொட வெப்பம் மிகுந்ததேயன்றிக் குறைந்தபாடு இல்லை. சமணத் திறம், அதன் நிபுணத்துவம் அவற்றில் அரசனுக்கு நம்பிக்கை குறைந்துவிட்டது.

அந்த நிலையில் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அரசனை அணுகி "நோய்தீர வழி உள்ளது; ஞானசம்பந்தரை அழைத்து வந்தால் அவர் திருநீறு தந்தாலே நோய் பறந்தோடும்" என்று கூறினார்.

மயிற் பீலி கொண்டு சமணர் வயிற்றில் இடப் பக்கத்தைத் தடவினர்; அது நெருப்பு வைத்துக் கொளுத்து

வது போல இருந்தது; குளிர்வதற்கு மாறாக நோய் தளிர்த்தது. அவர்கள் தோல்வியை ஒப்புக் கொண்டனர். அடுத்தது வலப்பக்கம்; திரு நீறு இட்டதும் தொட்டபகுதி யெல்லாம் குளிர்ந்து நோய் தீர்ந்தது. இடப்பக்கமும் அவரையே தீர்க்க வேண்டி அரசன் வேண்டினான்.

வெப்பு நோய் நீங்கி ஞானசம்பந்தர் செப்பும் சைவத்தின் மேன்மையை ஒப்புக் கொண்டான். வெப்பு நோயோடு அவனுக்கு முன் இருந்த வளைவு ஆகிய கூனும் தீர்ந்து நிமிர்ந்து நின்றான். எழில்படைத்த மேனியைப் பெற்றான். கூன் பாண்டியன் என்ற பெயர் மறைந்து அழகன் என்ற பொருளுடைய சவுந்தர பாண்டியன் என்ற பெயர் வழங்கத் தொடங்கியது. சைவத்தைத் தழுவிக் கொண்டு முழுச் சைவனாக மாறினான்.

## 63. சமணரைக் கழுவேற்றிய படலம்

கூன் பாண்டியனின் வெப்பு நோயைத் தீர்த்த அற்புதம் பெரிய மாற்றத்தை விளைவித்தது; பாண்டியனின் உடல் நோயும் தீர்ந்தது; மன இருளும் அகன்றது. மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அதனைத் தொடர்ந்து சமண சமயத்தை ஒழித்துச் சைவ சமயத்தை நிலை நாட்ட முயன்றனர். சமண சமயம் மக்களையும் மன்னனையும் இறுகப் பிடித்து இருந்த அப்பிடிப்பினை அகற்றிச் சமணருக்கு சிறந்தபடிப்பினையைப் புகட்ட விரும்பினார்.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் திருஞான சம்பந்தரை அணுகிச் சைவ சமயத்தை நிலை நாட்ட அதன் தத்துவங்களையும் கொள்கைகளையும் பரப்ப உதவ வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். அவர்களோடு

வாதம் செய்து சைவத்தின் பெருமையை நிலை நாட்ட வேண்டும் என்று விவரித்தனர். அரசனிடமும் அனுமதி பெற்றனர். சமணர்களுக்குச் செய்தி சொல்லி அனுப்பப் பட்டது. அவர்களும் அதற்குச் சளைக்கவில்லை. நோய் தீர்த்து விட்டதாலேயே சைவம் உயர்ந்தது என்று கூற முடியாது அது தனிப்பட்ட மனிதரின் மந்திர சக்தியாக இருக்கலாம். வாதிட்டு வெல்வதே சாதனை என்று அறிவித்தனர்.

அவர்கள் இரண்டு தேர்வுகள் வைத்தனர். ஒன்று அவரவர் சமயக் கோட்பாடுகளை எழுதி வைக்கும் ஓலையை நெருப்பில் இடுவது; அவற்றுள் எது எரியாமல் நிலைத்து இருக்கிறதோ அதுவே வென்றது என்று ஒப்புக் கொள்வது; மற்றொன்று வைகையில் அவ்வேடு களை ஓடும் வெள்ளத்தில் இடுவது; எது எதிரேறி வெள்ளத்தில் அடித்துச் செல்லாமல் நிலைத்து நிற்கிறதோ அதுவே வெற்றி கொண்டது என்று ஏற்பாடு செய்தார்கள்.

இரண்டு தேர்வுகளிலும் அவர்கள் தோல்வியையே கண்டனர். அவர்கள் முதலில் இட்ட ஏடு தீக்கு இரை யாகியது. ஞானசம்பந்தர் இட்ட ஏடு எரியாமல் பசுமை யாகவே நின்றது. அதே போல வெள்ளத்தில் சமணர் இட்ட ஏடு பள்ளம் நோக்கி அடித்துச் சென்றது. ஞானசம்பந்தரின் ஏடு எதிரேறிச் சென்று கரையில் ஒதுங்கியது.

திருஞான சம்பந்தர் அவர்களை மன்னித்து இனியேனும் சைவ சமயத்தின் உயர்வை ஒப்புக் கொள்ளும்படி அறிவித்தார். ஒரு சிலர் திருநீறு அணிந்து

சைவர்களாக மாறினர். பலர் தாம் அடைந்த தோல்வியை ஒப்புக் கொண்டு வலியக் கழுவில் ஏறி உயிர் துறந்தனர். எஞ்சியவர் ஆணைக்கு உட்பட்டுக் கழுவில் ஏற்றப்பட்டனர். சமணம் தலைசாய்ந்தது; சைவம் தலை நிமிர்ந்தது.

மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அரசனைச் சைவ வழிக்குக் கொண்டு வந்து அவனைச் சைவனாக்கியதோடு நாட்டு மக்களிடமும் சைவத்தைப் பரப்பினர்.

## 64. வன்னியும் கிணறும் லிங்கமும் அழைத்த படலம்

கடலோரக் கவிதை என்று சொல்லத் தக்க அழகுடைய கடற்கரைப் பட்டினத்தில் செல்வம்மிக்க வணிகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரு மகள் பிறந்தாள். அவள் கன்னிப் பருவம் அடைந்து தன்னிகரற்ற அழகியாக விளங்கினாள். தன் தங்கை மகனுக்கே மணம் முடிக்கக் கருதினர். அவன் ஏற்கனவே மணமானவனாக இருந்தும் உறவு கெடக் கூடாதே என்பதால் இந்த முடிவுக்கு வந்தனர். அவளும் அவனையே மணக்க உறுதி செய்து கொண்டாள்.

காலன் அவர்களுக்குக் காலம் தரவில்லை; அதற்குள் அவள் தந்தையின் முடிவு செய்யப்பட்டது; தொடர்ந்து அவன் மனைவியும் மரணம் அடைந்தாள். சாவதற்கு முன் இந்த விருப்பத்தை ஊரவர்க்கும் சுற்றத்தினருக்கும் அவர்கள் சொல்லிச் சென்றனர்.

அவன் தங்கையின் மகன் இச் செய்தி அறிந்து தனியவளாக இருந்த அவளைத் தனக்கு இனியவளாக

ஆக்கிக் கொள்ள மதுரை வந்து சேர்ந்தான். அவளை அழைத்துக் கொண்டு தன் சொந்த ஊர் நோக்கிச் சென்றான். வந்த வழியில் அத்தமனம் ஆயிற்று. அதனால் காட்டுவழியிலேயே அன்று இரவு தங்குவது எனத் தீர் மானித்தனர்.

நள்ளிரவில் மெய்ம் மறந்து உறங்கும் போது உயிர் துறந்து போகும் ஒரு நிகழ்ச்சி ஏற்பட்டது. அரவு ஒன்று வந்து கரவு செய்தது; நஞ்சு தலைக்கேறி அவனைத் துஞ்ச வைத்தது.

வணிகனின் மகள் செய்வது அறியாது கதறினாள். அவன் உடலத்தைத் தழுவிக் கொண்டு அழுதாள்; பொழுது விடிந்ததும் அவள் அழுது அரற்றிய செய்தி அருகில் தலம் ஒன்றில் தங்கியிருந்த ஞானசம்பந்தருக்கு எட்டியது. இந்த அநியாய இறப்பை அவரால் ஏற்றுக் கொள்ள முடிய வில்லை. தெய்வத்தை வழிபட்டு அவளுக்கு உய்வகை காண வேண்டும் என்று அவள் இருந்த இடம் தேடி நடந்து வந்தார். கண்ணீரும் கம்பலையுமாகத் தன் சரித்திரத்தைச் சொல்லிய சோக கீதத்தைக் கேட்டு அவர் உள்ளம் உருகி நீர் தெளித்து நிமலனை வழிபட்டு வேண்டிக் கொண்டு அவனை எழுப்பி உதவினார்.

"உறங்குவது போலும் சாக்காடு" என்ற குறள் அடி அவனைப் பொறுத்தவரை உண்மையாகியது. உறங்கி விழித்தது போல உயிர் பெற்று எழுந்தான்; அவன் ஞான சம்பந்தரின் கால்களில் விழுந்தான்; திருவடிபோற்றி வணங்கினான்.

செல்லும் ஊர் கேட்டு, நல்லுரை தந்து, அவர்களுக்கு விடை தந்தார். அதற்கு முன் ஒல்லும் வகையால் அங்கே

மணம் முடித்துக் கொண்டு செல்லுமாறு அறிவித்தார். சடங்கு செய்து முடிக்கச் சான்றுகள் இல்லையே என்று அவர்கள் அறிவித்தனர். வன்னிமரமும், கிணறும், சிவலிங்கமும் அவர்கள் தங்கியிருந்த இடத்தில் இருந்தன. ''அன்னியர் யாரும் இல்லை என்று கவலை வேண்டாம்; கன்னி இவளை மணக்க வேண்டும் என்று உன் மாமன் சொன்ன வார்த்தைகள் உண்டு; அதை உன் சுற்றத்தவர் அறிவதும் உண்டு; சுற்றமும் நட்பும் இல்லை என்று கற்றறிந்த நீ கவல வேண்டாம்; இதோ வன்னி மரம் இருக்கிறது மங்கலமாக இருந்து நிழல் செய்ய; கிணறு இருக்கிறது மங்கல நீர் கொண்டு குளிக்க, வழிபட உண்டு இறைவன் சிவலிங்கம். அதனால் இம் மூன்றையும் சான்றாகக் கொண்டு நீ மணம்முடித்துக்கொள்''என்றார்.

தனக்கு உயிரும் வாழ்வும் கொடுத்த உயர்ந்தோர் ஆகிய ஞானசம்பந்தர் ஒளிதந்த வெளிச்சத்தைக் கொண்டு அவர்கள் மணத் தம்பதிகளாகச் செல்வது அவர்களுக்கும் பாதுகாப்பினைத் தந்தது.

அவர்கள் ஊர் சென்றதும் எதிர்ப்பு இன்றி அவள் ஏற்றுக் கொள்ளப்பட்டாள். தான் ஈட்டிய சொத்தும் மாமன் மகளை மணந்து பெற்ற சொத்தும் சேர்ந்து அவன் இரட்டிப்புச் சொத்துகளுக்கு உரியவன் ஆனான். வணிகனாக இருந்ததால் வாணிபம் செய்து வான் பொருள் ஈட்டினான். தனபாக்கியம் பெற்றவன் புத்திர பாக்கியமும் பெற்றிருந்தான்.

மூத்தவளின் பிள்ளைகள் முரடர்களாகவளர்ந்தார்கள். இளையவளுக்கு ஒரே பிள்ளை. அவன் மிகவும் நல்லவனாகவும் சாதுவாகவும் இருந்ததால் தெருவில்

விளையாடச் சென்றவர்கள் விளையாட்டில் வினையை வருவித்துக் கொண்டார்கள். மூத்தவளின் பிள்ளைகள் இளையவனை அடித்துவிட்டார்கள். இளையவள் ''அய்யோ குய்யோ என் மகனை அநியாயமாக அடித்துக் கொல் கிறார்களே'' என்று ஒப்பாரி வைத்தாள். சிண்டு முடித்துக் கொண்டு இருவரும் சண்டைக்கு நின்றனர்.

''ஒண்ட வந்த பிடாரி நீ; இங்கே உனக்கு இங்கே அண்ட என்ன உரிமை இருக்கிறது. கட்டியவள் நான்; ஒட்டியவள் நீ; எங்கேயோ தெருவில் பொறுக்கிக் கொண்டிருந்த சிறுக்கி நீ; உனக்கு என்னடி இந்தக் கிறுக்கு, நாலுபேர் அறியத் தாலி கட்டிக் கொண்டு வந்தவள் நான்; நீ திருட்டுத் தாலி கட்டிக் கொண்டு மினுக்குகிறாய்; எனக்கு உரியவனை மயக்குகிறாய்.

கட்டியவளாக இருந்தால் நீ அதற்குச் சான்று காட்ட முடியுமா? எங்கே மணம் நடந்தது? எப்படி நடந்தது? சான்றுஉண்டா? மரியாதையாக நீயும் உன் மகனும் வீட்டை விட்டு வெளியேறிவிடுங்கள்; கழுத்தைப் பிடித்துத் தள்ளுவேன்'' என்று அவள் வசை மாரி பொழிந்தாள்.

''திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை'' என்ற பழமொழிக் கேற்ப மதுரைச் சொக்கரிடம் சென்று இளையவள் முறையிட்டாள்.

''நீ கவலைப்படாதே! மணம் செய்து கொண்ட போது சான்றாக நின்ற மூவரும் வருவர்'' என்று இறைவன் வாக்குச் சாற்றியது.

அதை ஏற்றுக் கோயில் மூலவரின் ஈசானிய மூலையில் அவள் காத்து இருந்தாள். வன்னிமரமும் கிணறும் சிவலிங்கமும் அங்கு நிறுத்தப்பட்டன. எல்லாம் வல்ல இறைவன் திருவருள் கண்டு அவள் உள்ளம் உவந்தாள். ஓடிச் சென்று மூத்தவளை அழைத்து வந்து "வருக! இங்கே வந்து பார்; வன்னி மரமும், கிணறும், சிவலிங்கமும் சான்றாக மணம் முடித்தோம்;அவை வந்து நிற்கின்றன" என்றாள். இந்த அதிசயத்தைக் கண்டு அவள் அதிர்ந்து போனாள்.

இதற்குமுன் இம்மூன்றும் அங்கு இருந்தது இல்லை. இந்தப் புதுமையைக் கண்டு பதுமை போல அசையாமல் நின்றாள். சிவன் அருள் இளையவளுக்குச் சித்தித்து இருப்பது கண்டு அவள் வந்தித்து வணங்கித் தன்னை மன்னிக்குமாறு வேண்டினாள். ஒறுத்து வருத்திய அந்த மூத்தவளைக் கணவன் வெறுத்து ஒதுக்கி வைத்தான்.

வீடு சேர்ந்த இளையவள் தன் சகக்களத்தியை வெறுக்கவில்லை அவளைத் தன் மூத்த சகோதரியாக மதித்து அவளை ஏற்றுக் கொள்ளும்படி கணவனிடம் வேண்டினாள். மூத்தவளைத் தன் தாயெனப் போற்றி அன்பும் மரியாதையும் காட்டினாள்.

இளையவளின் சேர்க்கையில் அக்குடும்பம் நன்மைகளை அடைந்து அவர்கள் வணிகத்தில் உயர்ந்து தன்னிகரற்ற செல்வராய்த் திகழ்ந்தனர்.

